# இருப்பவல் திருப்புகழ்



"திருப்புகழ் மாமணி"

**மு. அருணகிரி**

புத்தகம் கிடைக்குமிடம் :

**அருணகிரி பதிப்பகம்**

நெ.26, கந்தசாமி கோவில் தெரு,

பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-600 012.

தொலைபேசி : 2662 2849

## நூல் விவர அட்டவணை

| | |
|---|---|
| நூல் பெயர் | : **இருப்பவல் திருப்புகழ்** |
| ஆசிரியர் | : திருப்புகழ் மாமணி மு. **அருணகிரி** |
| மொழி | : தமிழ் |
| முதற்பதிப்பு | : ஆகஸ்ட், 2008 |
| தாள் | : 14.4 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூல் அளவு | : Dy. அளவு |
| பக்கங்கள் | : I - X + 198 = 208 |
| விலை | : ரூ.85/- |
| எழுத்து | : 12 புள்ளி |
| கணினி | : **சாய் விஷ்ணு ஜெராகஸ்**<br>சூளை, சென்னை-112.<br>தொலைபேசி : 2669 0272 |
| வெளியிடுபவர் & உரிமை | : **அருணகிரி**<br>**அருணகிரி பதிப்பகம்**<br>நெ.26, கந்தசாமி கோயில் தெரு,<br>பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-600 012.<br>தொலைபேசி : 2662 2849 |
| அச்சிட்டோர் | : **மூவேந்தர் அச்சகம்**<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>தொலைபேசி : 2835 1189 |



இந்நூல்
திருமலை - திருப்பதி தேவஸ்தான
நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.
- நன்றி! -

This Book
is Printed and Published with the Financial Assistance
of Tirumala - Tirupati Devasthanams.
Thanks and Hail to
LORD VENKATESWARA.



சதுர்வேத பாராயண, திருமுறை நித்ய உபாஸக
**சிதம்பரம் ஸ்ரீ சிவஸ்ரீ ஜி. பரமேஸ்வர தீக்ஷிதர்**
53/85, தெற்கு ரத வீதி, சிதம்பரம் – 608 001.

## அணிந்துரை

25-11-2008

அன்பும் – பண்பும் – அடக்கமும் ஒருங்கிணைந்த நமது [புது] "**அருணகிரி ஐயா**" அவர்கள், பழம் பெரும் அருணகிரிநாத ஸ்வாமி திருவாய் மலர்ந்தருளின திருப்புகழ்ப் பாசுரங்களை இயன்ற அளவு உலகினுக்கு மீட்டுத்தந்த "ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள்" [மைசூர் ஸ்வாமி] அவர்களிடமிருந்து – அருளபதேசமாகக் கேட்டுப் பலகாலமாய்த் தமதுள்ளத்து அடக்கி, உணர்ந்து – **தவமுறையிற் தியானித்து** வந்தவராவர்.

ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகளை அறிந்தவர்க்குங்கூட, இது காலம்வரை இவர் தெரியப்படாமல் எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தாலும், இப்போது கட்டுரைகளின் மூலம் நமக்குத்தெரிய வருவதாலும் இவரைப் புதிய அருணகிரியாக எண்ணுவோம்.

நமது "அருணகிரி" ஐயா அவர்கள் தாம் கேட்ட பாடங்களின் [திருப்புகழ்ப் பாக்களின்] அருஞ்சுவையினை அசை போட்டுப் போட்டு, இது போது நமக்கு **எளிய** பல கட்டுரை வடிவத்தில் தக்திருப்பதைக் காணும் போது, நமக்கும் "திருப்புகழுக்குள் இத்தனை புதையல்களா?" என புதியதோர் ஆர்வத்தை வளர்க்கின்றது.

அதி விரைவில் மீளவும் திருப்புகழ் உலகினில் கம்பீர நடைபோட்டு சைவ உலகிலே உலாவர இதுவும் ஓர் சிறந்த முயற்சி. இந்தக் கட்டுரைகளை வரைந்து அளிக்கின்ற "ஸ்ரீ அருணகிரி" ஐயாவுக்குக் குமாரவடிவன் துணையினை என்றென்னும் நிலைத்து வழங்குக.

ஸ்ரீ சிவ குஹமயம்
**ஜி. பரமேஸ்வர தீக்ஷிதர்**

**டாக்டர் த. அமிர்தலிங்கம்,** எம்.ஏ.,பிஎச்.டி.,
தமிழக அரசின் "திருக்கோயில்"
திங்களிதழின் ஆசிரியர் (ஓய்வு)

எண் ஒன்று, மகாலட்சுமி நகர்,
மதனந்தபுரம், போரூர்,
சென்னை – 600 116.

## அணிந்துரை

21-11-2008

*"வேதம் வேண்டாம், சகலவித்தை வேண்டாம், கீதநாதம் வேண்டாம், ஞான நூல் வேண்டாம் - ஆதி குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் தான் போற்றும் திருப்புகழைக் கேளீர் தினம்" - எனும் பொன்மொழியைப் போற்றி, நாளும், நாவினிக்கப்பேசியும், பாடியும் சிந்தித்தும், தமிழ்தாயின் மலரடிகளை போற்றும் வகையில், நூல்கள் பல வடித்தும், மிகச்சிறந்த முறையில் ஆற்றிவருகின்றார், நம் திருப்புகழ் மாமணி மு. அருணகிரி ஐயா அவர்கள்.*

*எவ்விதம் மல்லையதால் பாகவதரிடம், அன்னாரின் புதல்வர் திரு முருக. வாரியார் சுவாமிகள் திருப்புகழ் பாடம் கேட்டு பெரும் புகழ் பெற்றாரோ அது போன்றே நம் திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்களும் தம் தந்தையார், திருப்புகழடிமை, காரா முருகேசனாரிடம், பிஞ்சு வயதிலேயே திருப்புகழ் பாடல்களை கற்றுணர்ந்தராவார்.*

*அன்னார் நாளும் திருப்புகழை காதலாகிக் கசிந்துதுருகி ஓதிவரும் பெருந்தகையாளர் என்றால் மிகையாகாது பொன் மகுடத்தில் வைரங்கள் பதித்தாற்போல் அவருடைய புகழுக்கும் பெருமை சேர்க்கும் நூலாக வெளிவரும், இருப்பவல் திருப்புகழ் எனும் நூல் பயின்று, நான் மிகவும் உணர்ச்சிப் பட்டேன். "இருப்பவல் திருப்புகழ்" எனும் கட்டுரையில், எமபயம் நீங்கும் வழி இன்னதென்பதை நன்கு உணர்த்துகின்றார். மரணபயணத்தின் போது, நம் இருப்பில் உள்ள சொல் அவலாகிய திருப்புகழை பாக்கள் உதவும் என்பதை எளிய நடையில் விளக்கியுள்ளார், ஆசிரியர், திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்கள்.*

*"பிள்ளையார் சுழி" எனும் ஆய்வுக் கட்டுரை, எழுத்துத் தோன்றிய வரலாற்றை யாவரும் வியக்கும் வகையில் புலப்படுத்தியுள்ளார் இந்நூலாசிரியர்.*

*அருணகிரியார், கிளியாக இருந்து பாடியது கந்தரனுபூதியா? திருவகுப்பா எனும் வினாவிற்கு, திருவேளைக்காரன் வகுப்பின் வாயிலாக நல்ல தீர்ப்பாக வழங்குகின்றார் ஆசிரியர் அவர்கள். மேலும் இந்நூலில் உள்ள கட்டுரைகள் யாவுமே உளங்கொள்ளும் வகையில் கருத்துக்களை பொருத்தியுள்ள நூலாசிரியாரை பாராட்ட வார்த்தைகள் தாம் எது?*

*"சீராம் திருப்புகழைச் செவ்வோள் மேல் அன்பாக ஆராய்ந்துரைத்தான் அருணகிரி" எனும் பாராட்டோரு உபதேசமும் பெற்று அருணகிரிநாதருக்கு மட்டுமல்ல, தம் தந்தையார் முருகேசனாரிடமும் உபதேசம் பெற்ற நம் "திருப்புகழ் மாமணிக்கும் பொருந்தக்கூடிய வரிகளே. வருங்காலத்திலும், ஆன்மீக செம்மல்களின் வாழ்த்துக்களும் விருதுகளும் பெற்று நீடூழிவாழ நான் மனமார ஆசிரியரை வாழ்த்துகின்றேன்.*

*அன்புடன்,*

டாக்டர் த. அமிர்தலிங்கம்

**தி.ஸ்ரீ. நாராயணன்**

நெ.148 முதல் பிரதான சாலை,
AG ஆபிஸ் காலனி, ஆனந்தா நகர்,
பெங்களூரு – 560 024.

# அணிந்துரை

20-11-2008

ஸ்ரீ வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகளின் சீடர் திருப்புகழ் மாமணி, மு. அருணகிரி அவர்கள் எழுதித் தொகுத்துள்ள "இருப்பவல் திருப்புகழ்" பற்றிய விளக்கமும், ஏனைய திருப்புகழ் பாடல்களோடு சம்பந்தப்பட்ட விளக்கவுரைகளும் யாவரையும் மகிழ்விக்கும் விதத்தில் அமைந்துள்ளது மிகவும் பாராட்டுதற்குரியது.

பிள்ளையார் சுழிபோடுவது குறித்து ஆசிரியர் தெரிவிக்கும் அடிப்படை கருத்து ரசிக்கத்தக்கது. அண்ணாமலையாரும், உமையவளும், வள்ளி நாயகியும் அருணகிரி நாதருக்கு நல் உபதேசம், அருள் வாக்கு சித்தியும் அளித்தது பற்றிய குறிப்புகள் கொண்ட கட்டுரை கருத்துக்கு ஒரு விருந்து. சிற்றின்பவர்ணனைகள், நோயின் தாக்கம், வறுமையின் துன்பம் முதலியவற்றை குறிப்பிடாமல், முருகனின் பெருமைகளை மட்டும் போற்றுகின்றன திருவகுப்புகள் என விளக்கம் அளித்துள்ளார் ஆசிரியர். அருணகிரியார், கிளி சொரூபம் அடைந்த பின்னரே தணிகேசன் திருக்கரத்தில் இருந்து திருவகுப்பு பாடியிருத்தல் வேண்டும் என்பதாக்கு அன்னாரது வேளைக்கார வகுப்பை அகக்கண் கொண்டு விளக்கம் தந்துள்ளதை ஆசிரியர் மேற்கோள் காட்டியுள்ளது மிகவும் அருமை.

முருகனை, கல்விகளைகண்ட புலவன் என உமாதேவியின் தீர்ப்பு, அருணகிரிநாதரின் புலமைசாதுர்யத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். மேலும், ஆசிரியர் பல தலச்சிறப்புகள் பற்றிய கட்டுரைகள் யாவும் மிகவும் சிந்திக்கத்தக்கது.

சுருங்கச் சொல்லி விளக்கவைக்கும் அருணகிரியாரின் கவித்திறமையை மேலும் பலபாடல்களில் கண்டு வியக்கலாம். இராமபிரான் சுக்ரீவனுக்கு இலக்குவன் மூலம் அறிவுரை கூறக் கோபக்கனல் தெறிக்கும் திருப்புகழ்வரிகளை, கம்பராமாயண வரிகளுடன் ஒப்பிட்டு, ஆசிரியர், அருணகிரிநாதரின் ஆராய்ச்சி திறனையும், கவித்திறனையும், சொல்லழகையும் வியந்து போற்றத்தக்கது.

சகாதேவன், பாரதப்போர் தவிர்க்க ஒரேவழி கண்ணனை உள்ளத்தினாலேயே கட்டிப்போட்டதை, திருப்புகழ் பாடல் மூலமாய் விளக்கமளிக்கிறார் ஆசிரியர். இறந்த மகனை உயிர்பிக்கச் செய்தது அற்புதம் என திருப்புகழ் பாடல்மூலமாய் வெளிப்படுத்தும் வாக்குசாதுர்யத்தை பாராட்டத்தக்கது. ஆசிரியரால், சைவமும் வைணவமும் உணர்த்தும் ஒற்றுமை நயங்களை பிரபந்தம், தேவாரம் பாடல்களை மேற்கோளாக, கையாண்டுள்ள விதம், மிகவும் அற்புதம். பக்தியே முத்திக்குவழி என்னும் கருத்தை திருப்புகழ் பாடல்வாயிலாக விளக்கம் அளித்துள்ளது படிக்க படிக்க தெவிட்டாத அமுதமாகும், "இருப்பவல் திருப்புகழ்" என்ற தலைப்பில், பிள்ளையார் சுழி போடுவது எனும் கட்டுரையை அடுத்து பல கட்டுரைகளையும் படித்து ரசித்து கடைசியில் பக்தியே முத்திக்கு வழி என தெளிந்து கடைத்தேற ஆண்டவன் அருளை வேண்டுவோமாக.

அன்புடன்,

**தி.ஸ்ரீ. நாராயணன்**

திருப்புகழ் அன்பர்கள் சங்கம், பெங்களூரு

உ

வேலும் மயிலும் துணை

## முகவுரை

என் தந்தையார் தெரிந்தோ தெரியாமலோ, அடியேனுக்கு வைத்த பெயர் **அருணகிரி.** அந்நாளில் பிரபலமடையாத இப்பெயர் எங்கள் குடும்பத்தாருக்கே ஒரு புதிராய் இருந்தது. பின்னரே, என் வாழ்நாளில் வள்ளிமலை, திருப்புகழ் சச்சிதானந்த மகானே, அடியேனுக்கு குருவாக வாய்த்ததும், அன்னாரே அடியேன் பெயரைக் கேட்டமாத்திரத்தில் வியந்து, உமக்கு "**திருப்புகழே நிரந்தர பொக்கிஷம்**" என ஆசீர்வதித்தின் உட்கருத்தை நினைக்கும் தோறும், என் பெற்றோர்கள் செய்த தவப்பயனோ. மேலும், இப்பிறவியில் அடியேன் ஆற்றிய இறைத் தொண்டோ அறிகிலேம். அன்று தொட்டு, திருப்புகழ்ப் பாடல்களில் என் மனம் துளிர் விடலாயின.

"கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சியாவே" எனும் அப்பரது வாக்கினுக்கேற்ப, மாயப்பிரபஞ்சமென்னும் சேற்றிலிருந்து கரையேற, முருகனது திருவடிக்கமலங்களையே புனையாகக் கொண்டு, திருப்புகழ்க் கடலில் முத்துக் குளிக்கலானேன். பாடல்களில் பொதிந்துள்ள அதி அற்புதக்கருத்துக்களை ஒன்று திரட்டி கட்டுரைகளாக புனையலானேன். நீண்ட இடைவெளிக்குப்பின்னரே, என் எழுத்துக்கள் அச்சுப்பூக்களாய் துளிர்விடலாயின. பின்னர் கட்டுரைகள் யாவையும் ஒன்று சேர்த்து முதன் முதலாக "மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" எனும் தலைப்பில் புத்தகவடிவில் அச்சிட எண்ணிய சமயம், திருமலைத் திருப்பதித் தேவஸ்தானத்தாரே முன்வந்து, நூலை அங்கீகரித்ததோடு, அச்சிடும் சிலவையும் ஏற்க முன்வந்தது இறைவன் கருணையேயாகும். இதனால் திருப்புகழிலிருந்தே, பல கட்டுரைகள் எழுத ஆர்வம் உண்டானதில் வியப்பொன்றுமில்லை. திருப்புகழ் எனும் தேனை உண்ட வண்டாக, இரண்டாவதாக மற்றொரு நூலை "**திருப்புகழ் முக்திக்கொருவித்து**" எனும் தலைப்பில் வெளியிட முயன்ற சமயத்திலும் திருமலைத் திருப்பதித் தேவஸ்தானத்தாரே மனமுவந்து அடியேனது நூலை வெளியிட ஆர்வம் காட்டியது பழம் நழுவி பாலில் விபந்த கதையாயிற்று. அடியேனால் வெளியிடப்பட்ட நூல்களைப் பற்றி இந்து பத்திரிகை, தினமலர், தினமணி, கலைமகள், ஆலயம், திருக்கோயில் போன்ற இதழ்களில் விமர்சனம் வெளிவரலாயின. **இதனை கண்ணுற்ற வாசகர்கள் பலர், புத்தகங்களை வரவழைத்து படிக்கலாயினர்.**

கோவைச் சிறையில், ஆயுட்கைதியாயிருக்கும் அன்பர் மு. ஏகாம்பரம் 16 கோபுரம் C.P. 1784 TB 5A தொகுதி எனும் திருப்புகழ் ஆர்வலர் அடியேனின்

நூல்களைத் தபாலில் பெற்று கீற்றுக் கண்களிலிருந்து கண்ணீர் மல்க அடியேனுக்கு கடிதம் எழுதியுள்ளதைக் கண்டதும் உடல் பூல்லரிக்கச் செய்தது. மேலும், அன்னாரே, சிறைக்கூடத்தில் உள்ள ஏனைய கைதிகளுக்கும், வாரம்தோறும் ‘கந்தரனுபூதி” வகுப்பு நடத்துவதாகவும் கடிதம் எழுதியிருந்தைக்கண்டதும் ஆச்சரியத்தால் மூக்கின்மீது வைத்தவிரலை எடுத்ததே நினைவில்லை. இதிலிருந்து இன்றுவரை திருப்புகழ்ப் பாடல்களுக்கு உள்ள ஜீவனை அறிய முடிகிறது. மற்றுமோர் நண்பர் இமாலாய பகுதியிலுள்ள உத்ராஞ்சலில் உள்ள Divine Life Society-ச் சேர்ந்த சுவாமி சாட்சாத் கருணாநந்தா அவர்கள் விளம்பரத்தைக் கண்டு அடியேனது புத்தகங்களை வரவழைத்துப் படித்து பெரிதும் பாராட்டியுள்ளார். நண்பர் திரு. T. கோபாலகிருஷ்ணன் No.28, Jalad & Mutiara, Taman Bertuah, 81800 Ulutiram, Jahor, Malaysia என்பவரும் அடியேனது புத்தகங்களைப் பெற்று பெரிதும் பயனுள்ள கருத்துக்கள் அடங்கிய நூல்கள் என பாராட்டியுள்ளார். வாசகர்கள் பலரும், திருப்புகழிலிருந்தே மேலும் பல அரிய கருத்துக்களை தொகுத்து எழுதும்படி விருப்பம் தெரிவிக்கலாயினர். முதிர்ந்த வயதிலும், உடல் தளராது, உள்ளத்தால் ஆர்வம் சிறிதும் குன்றாது, மேலும் கட்டுரைகள் எழுத அடியேன் மனம் விழைந்தது.

வள்ளிமலை குருநாதரின் அன்புக்கட்டளைக்கிணங்க மேலும் பல கட்டுரைகளை எழுதி “**இருப்பவல் திருப்புகழ்**” எனும் தலைப்பில் மூன்றாவது புத்தகமாக வெளியிட எண்ணியதும், திருமலைத் திருப்பதித் தேவஸ்தானத்தானரே நினைவுக்கு வரலாயினர். தேவஸ்தானத்தாரை அணுகினேன். மறுமொழி ஒன்றும் கூறாது, அச்சிட முன்வந்தது அடியேன் மூச்சுள்ளவரை அருள்மிகு ஏழுமலையானையும், தேவஸ்தானத்தாரையும் கைத்தலம் என் தலைமிசை வைத்து திருமலைத் திக்குநோக்கி வணங்குவதைத்தவிர வேறொன்றும் அறிகிலேன்.

கட்டுரைகள் அனைத்தையும் சரி பார்த்து கணினி மூலம் அன்பு பாசத்தோடு, பதிவு செய்துதந்த “சாயி விஷ்ணு ஜெராக்ஸ்” நிறுவத்தார்க்கு என் நன்றி உரித்தாகுக. இந்நூலை சீரிய முறையில் யாவரும் பாராட்டும் விதத்தில் குறித்த காலத்தில் அச்சிட்டுத்தந்த மூவேந்தர் பதிப்பகத்தாருக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். அன்னாரது பதிப்பகம் மென்மேலும் பயனுள்ள அரிய கட்டுரைகளை அச்சிட்டு வெளியிட இறைவனை இறைஞ்சுகிறேன்.

- திருப்புகழ்மாமணி **மு. அருணகிரி**



ஸ்ரீ வள்ளிமலை

**திருப்புகழ்ச் சச்சிதானந்த சுவாமிகள்**

# பொருளடக்கம்

# 1. இருப்பவல் திருப்புகழ் - அருணகிரியார் வாக்குறுதி

"இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்" என்றே முதலடியாகக் கொண்டு, திருத்தணித்தலத் திருப்புகழில் அருணகிரியார் தொடங்குகிறார். பாடல்:

*இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்*
*இடுக்கினை யறுத்திடு மெனவோதும்-*
*இசைத்தமிழ் நடத்தமி ழெனத்துறை விருப்புட*
*னிலக்கண இலக்கிய கவிநாலுந்;*

*தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக*
*தலத்தினில் நவிற்றுத லறியாதே-*
*தனத்தினில் முகத்தினில் மனத்தனி லுருக்கிடு*
*சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ;*

*கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்*
*களிப்புடனொளித்தெய்த மதவேளைக்-*
*கருத்தினில் நினைத்தவ னெருப்பெழ நுதற்படு*
*கனற்கணி லெரித்தவர் கயிலாயப்;*

*பொருப்பினி லிருப்பவர் பருப்பத வுமைக்கொரு*
*புறத்தினை யளித்தவர் தருசேயே-*
*புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி*
*பொருப்பினில் விருப்புறு பெருமாளே.*

**இருப்பவல் திருப்புகழ்** : இரும்பைப் போன்ற உறுதியான அவலாகிய திருப்புகழ் எனப் பொருள் கொண்டால், அது பாடலின் உரத்தை (மிக்க வலிமையை) காட்டுவதாகவே பொருள் கொள்ள நேரிடும். பொதுவாகவே யாவரும் மேற் அறிவித்தவாறே கருதுவர். இதன் உரத்தைப் பற்றி "சினத்தவர் முடிக்கும்" எனும் திருத்தணி பாடலால் காண முடிகிறது. மேலும் மற்றோர் பாடலிலும்,

*"திருப்புகழை உரைப்பவர்கள், படிப்பவர்கள்*
*மிடிப்பகைமை செயித்தருளும்"*

என்பதிலிருந்து திருப்புகழுக்கு உள்ள வலிமையை அறிய முடிகிறது. அவலைப் போல் உண்ணலாம், பின்பு "உண்ட நெஞ்சறிதேனை" என மற்றுமோர் பாடலிலும் கூறியுள்ளதைக் காணலாம். இரும்பைப் போன்ற வலிமை (மனோதிடம்) பெற முடியும். "எமனையும் வந்துபார் சற்றென்கைக்கெட்டவே" என கந்தர் அலங்காரப் பாடலும் அணி சேர்கிறது.

அடுத்து "இருப்பவல் திருப்புகழ்" என்பதை கைஇருப்பாக உள்ள அவல் எனக் கொண்டே, திருப்புகழ் கையிருப்பிலே உள்ள அவல் போன்றது. காலன் ஊருக்குச் செல்லும் போது, நெடுவழிப் பயணத்துக்கு உபயோகப்படும் அவல் அது.

அருணகிரியார், கந்தப் பெருமானுக்கு ஒருவகை அவல் கொடுத்தார், குசேலர், தன் வறுமை தீர கிருஷ்ணனுக்கு நெல் அவல் கொடுத்தார். ஆனால் அருணகிரியாரோ, மரணப் பயணத்தில் எமனிடம் துன்புறாது, கரையேற முருகனிடம் சமர்ப்பித்தது திருப்புகழ் எனும் சொல் அவல் எனும் பொருள்படும்படி விளக்கமளித்தவர், திரு. கி.வா.ஜா. அவர்கள்.

மரணத் தருவாயில், கடைவழி - தொலையாவழி, ஆதலால், அந்தப் பயணத்திற்கு அவலோ, பொதி சோறோ இருப்பு தேவைப்படும். இதனையே அருணகிரியார் "நும்மை தேடி வரும் தொலையா வழிக்கு பொதி சோறும் உற்ற துணையும் கண்டீர்" என கந்தர் அலங்காரப் பாடலும் உணர்த்துகிறது. மேலும் "உயிர்போம் அத்தனி வழிக்கே" என மறு அலங்காரப் பாடலாலும் அறியலாம்.

ஒரு மாணவன் விடியற்காலையில் எழுந்து படிக்க நினைத்து, காலை 5.00 மணிக்கே கடிகாரத்தில் அலாரம் முள்ளை பொருத்தி வைக்கிறான். மறுநாள் விடியற்காலை 5.00 மணிக்கே அலார மணி அடிக்க, முன் இரவே 10.00 மணிக்கு அலாரம் முள்ளை ஏன் பொருத்தி வைக்கிறான் என கேட்கலாமா. அப்படியே, எப்போதோ வரும் காலனை நினைத்துத்தான் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். காலனை மற்றும்

அறிந்திருப்பதோடு, மேலான பரம்பொருளான காலகாலனையும் உடன் நினைக்கச் செய்யவே, முன் கூட்டியே கடிகாரத்தில் அலாரம் ஒலிக்கும் முள்ளை பொருத்தி வைப்பது போன்று, நம் வாழ்நாளில் தேவாரம், திருப்புகழ் போன்ற முள்ளை முன் கூட்டியே மனமாகிய கடிகாரத்தில் பொருத்தி வைக்க, இருப்பவல் திருப்புகழ் பாடல்களை மனத்தில் பொருத்தி வைத்தல் அவசியம். காலத்தை உணர்த்த சூரியன் பயன்பட்டாலும், அவனது மகன் எமனோ, வரப்போகும் காலத்தை முன் கூட்டியே தெரிவிப் பதில்லை. இக்கயவனான எமனுடைய ஊருக்கு பயணிக்கச் செல்லும் சமயத்தில் நம் இருப்பில் உள்ள அவலாகிய திருப்புகழ் பாக்கள் உதவும்.

# 2. பிள்ளையார் சுழியைப் பற்றிய செய்திகள்

பண்டைய காலம் தொட்டு யாதானும் ஒன்றை இயற்றத் தொடங்கும் முன்னர், தலைப்பிலே ஒரு சுழியைப் போடுவது வழக்கமாக வந்துள்ளது. பிற்காலத்தில் இவ்வழக்கம் சிறிது சிறிதாக மறைந்து வரலாயிற்று. இதன் அடிப்படைக் கருத்து என்ன?

எந்த ஒரு கவிதையையோ, ஆன்மீகச் செய்திகளையோ, சரித்திர வரலாற்று நூல்களையோ எழுதத் துவங்குவதன் முன், அறிகுறியாக சுழியை இடுவதா? ஒரு வேளை இருந்தாலும் இருக்கலாம். இதன் தத்துவம், மேலும் ஒப்பற்ற ஓர் உட்கருத்தை தன்னிடத்தே கொண்டுள்ளதைச் சிறிது ஆராய்வதே சிறப்பாகும்.

பண்டைய மொழிகளில் சமஸ்கிருதம் என்பது ஒன்று. அதனடிப்படையில் அன்று தோன்றிய வேதமே முதல் நூலாகும். அன்னாளில் நம்நாட்டில் எழுத்து இருந்ததாக சிலர் கூறுவர். அதனை மறுப்பவரும் சிலருண்டு.

“ஓம்” எனும் எழுத்தே வேதத்தோடு முதன் முதலாகத் தோன்றியுள்ளது. எழுத்துக்கு ஸ்வரம், மாத்திரை போன்று அம்சங்கள் உண்டு என்று வேதங்களும் உபநிஷத்துக்கள் வாயிலாக அறியப்படுகிறது. அவ்வாறிருக்க, முனிவர்கள், தபோதனர்கள் வேதங்களை ஏன் எழுதி வைக்கவில்லை?

வேதங்கள் அனைத்தும் ஒருவர் கூற, ஏனையோரால் செவி வழியாகக் கேட்கப் பெற்றோ வெகுகாலமாக, ‘எழுதாக்கிளவி’ போன்றே வேதங்கள் இருந்தது. காரணம், எழுத்து வடிவத்தில் பொறித்திருந்தால், மக்கள் செவி வழியே கேளாது படிக்கும் வகையில் முயற்சிப்பர். அது சமயம் அட்சரம் தப்ப வாய்ப்பு ஏற்படலாம். பழமையான உச்சரிப்பையே இன்றும் போற்றிவரக் காரணம்.

**வேதங்கள் அனைத்துமே எழுதாக்கிளவியாகவே கேட்கப் பெற்று வந்தனவையேயாகும். உதாரணம் : சிவபிரானுக்கும், முருகப் பெருமான் 'ஓம்' எனும் பிரணவத்தின் பொருளை செவி வழியாக உபதேசித்தார். அதன் உட்பொருளை எழுத்து வடிவத்தில் தான் உணர்த்தினார் என்பதற்குச் சான்றுகள் இல்லை.**

வால்மீகியும் இராமாயணத்தை முதன் முதலில் எழுதி வைக்கவில்லை. லவ, குசலருக்கு ராமாயணத்தை மனப்பாடம் செய்வித்து, இராமர் முன் நிகழ்த்திக் காட்டினார் என வரலாறு தெரிவிக்கிறது.

இராமாயண காலத்தில், பொருட்களிலும், கருவிகளிலும் எழுத்துக்களால் வந்ததுண்டு.

உதா. : வாலி தன் மார்பிலே தைத்த அம்பிலே இராமன் நாமம் குறிக்கப்பட்டிருந்ததால், அம்பெய்திவன் யாரென அறிய முடிந்தது. அது போன்றே சீதாப்பிராட்டி அசோகவனத்தில் இருந்த சமயம், அனுமன் அளித்த கணையாழி மூலம் ராமன் நாமத்தைக் கண்டு உணர்ச்சி வசப்பட்டாள் - இந்நிகழ்ச்சிகளுக்கு இராமாயண காலத்தில் எழுத்து இருந்தமைக்கு சான்றுகளாகும்.

மகாபாரத காலத்தில் தான் முதன்முதல் நூல், எழுத்து வடிவத்தில் தோன்றியதாக அறியப்படுகிறது. அதுவே, வியாசப் பாரதம் ஆகும். பொதுவாகவே எழுத்து மூலம் இக்கலை சிறிய அளவில் தொடங்கி நாளடைவில் தான் வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் இருப்பினும், பாரதம் ஆரம்பித்த முதலிலேயே ஒரு பெரிய காவியமாக எழுத்து வடிவமைத்தது தான் விந்தை.

கண்ணபிரான், அர்ஜுனனுக்கு வாய் வழியாக அருளிச் செய்த பகவத்கீதையையும் எழுத்து வடிவத்தில் ஆக்கவல்ல ஒரு பெரும்புலவர் சொல்லச் சொல்லி, அதனை எழுதியவர் சாமான்யராக இருக்க முடியாது.

அது போன்றே, வியாசர் சொல்லச் சொல்ல, பாரதத்தை எழுதியவரையே பிள்ளையார் எனப் போற்றுவதில் பிழை யொன்றுமில்லை வியாசர் மொழிந்ததை எழுதியவர் வினாயகர் தான் என்பதை யாவரும் மறுக்கவோ, மறைக்கவோ இயலாது,

ஏற்றுக் கொள்வர் இருப்பினும் விநாயகர் எப்படி எழுதினார், எக்கருவியால் எழுதினார், எவற்றில் எழுதினார் என்பதில் தான் கருத்து வேறுபாடு உள்ளது. மேருவையே ஏடாகிக் கொண்டு, தனது வலது தந்தத்தை ஒடித்து எழுத்தாணியாகக் கொண்டு பாரதத்தை விநாயகர் எழுதினார் என்பது பல பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. இதன் அறிகுறிதான் அன்றைய மூவேந்தர்கள் சிற்றரசர்கள் ஆட்சிக் காலத்தில், இறையுணர்வை என்றென்றும் அழியா வகையில் ஆலயங்களில் ஆலய வரலாறுகளையும், பாடல்களையும் கல்வெட்டுகள் மூலம் கிரந்தமுறையில் பொறித்தனர்.

ஒன்று மட்டும் உறுதியாகக் கொள்ளலாம் எழுத்து வடிவத்தில் முதன் முதல் நூலை எழுதியவர் விநாயகர் என்பதை சைவ வைணமும் ஏற்றுக் கொள்கிறது. அதனால் முதல் எழுத்தாளர் விநாயகர் தான். இவருக்கு முதற்கண் வணக்கம் தெரிவிக்கவே, அருளாளர்கள், நூல்களையோ பாடல்களையோ தொடங்குமுன், முதல் எழுத்தாளருக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் பிள்ளையார் சுழியை போட்ட பின்னரே துவங்கும் வழக்கம் ஏற்பட்டது.

மக்கள் இன்றைய நாளிலும், பேச்சு வழக்கில், இப்பொழுது தான், பிள்ளையார் சுழி போட்டிருக்கேன். எவ்வித விக்னமின்றி நல்ல முறையில் அமைய வேண்டும் என அறிவிப்பதின் நோக்கமே இதனடிப்படையிலே தான் என்பது புலனாகிறது. பிள்ளையார் சுழி என்பது பிறகு ஒரு வழக்குச் சொல்லாகி விட்டது. மேலும் விரிப்பிற் பெருகும், தொகுப்பின் எஞ்சும்.



# 3. திருவேளைக்காரன் வகுப்பு

கார்த்திகை மாதர்களுக்கு குமாரனும், இமயவரம்பன் மனைவி மேனைக்குப் பேரனும், வள்ளியுடன் பொழுதைப் போக்குபவனுமான முருகனுக்குத் தாம் பாடிய திருவகுப்புப் பகுதியில் ஒரு தனி வகுப்பே பாடியுள்ளார் அருணகிரியார்.

1. ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன வாரக் காரனும்

2. ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
னாருடனு ணக்கைபரி தீமைக் காரனும்

3. ஆகமம்வி ளைத்தகில லோகமுநொ டிப்பளவில்
ஆசையொடு சுற்றுமதி வேகக் காரனும்

4. ஆணவஅ ழுக்கடையும் ஆவியை விளக்கியது
பூதியடை வித்தொரு பார்வைக் காரனும்

5. ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கஅம
ராவதிபு ரக்குமடல் ஆண்மைக் காரனும்

6. ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பில்அரு
ணாபுரியில் நிற்கும்அடை யாளக் காரனும்

7. ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர் கொடுத்தகவி மாலைக் காரனும்

8. ஆறுமுக வித்தகனும் ஆறிருபு யத்தரசும்
ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும்

9. யானெனதெ னச்சருவும் ஈனசம யத்தெவரும்
யாரும்உணர் தற்கரிய நேர்மைக் காரனும்

10. யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை யோடக் காரனும்

11. ஏரகம் இடைக்கழிசி ராமலைதி ருப்பழநி
யேரணிசெ ருத்தணியில் வாசக் காரனும்

12. ஏழையின் இரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக் காரனும்

13. யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயென அழைத்துருகு நேயக் காரனும்

14. ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் காரனும்

15. ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளும் ஆசைக் காரனும்

16. ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்கும்இளை
யோனும்அறி விற்பெரிய மேன்மைக் காரனும்

17. வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியில்உ தித்தமுகி மாயக் காரனும்

18. வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானும் அய னைக்கறுவு கோபக் காரனும்

19. வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம்அ ளிக்கும்உப காரக் காரனும்

20. மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவுள் ஆயக் காரனும்

21. வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும் வாசிக் காரனும்

22. வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்

23. மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலணு வுக்கணுவு பாயக் காரனும்

24. வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியில் நிற்பதொர்ச காயக் காரனும்

25. மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் காரனும்

26. வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்

27. வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக் காரனும்

28. மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடுபெற வைத்தருள்உ தாரக் காரனும்

29. மேனையரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும்அ ரக்கர்குல சூறைக் காரனும்

30. வேதியர்வெ றுக்கையும்அ நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்

31. வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு போம்விற் காரணம்

32. மேவியபு னத்திதனில் ஓவியமெ னத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.

அருணகிரியார், கிளி சொரூபமடைந்த பின், கந்தரனுபூதி பாடினார் என்று கருதுவது எவ்விதத்திலும் பொருந்தா. அகக்கண் கண்டு அவரது திருப்புகழ் பாக்களை கூர்ந்து கவனித்தால் விடை கிடைக்கும்.

திருத்துருத்தி எனும் தலத் திருப்புகழ் "மலைக் கனத்தென" எனும் பாடலில் 6-வது அடியில் அன்னாரால் கூறியுள்ள கருத்தைக் கவனித்தால் மானிடத் தேகத்திலிருந்து தான் கந்தர் அனுபூதி பாடியிருக்க வேண்டும் எனக் கருத முடிகிறது.

6-வது அடியில் கூறப்பட்டுள்ளதை கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

*"அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து*
*முத்தியதாம் அனுபூதிஎன் அருட்திருப்புகழ்*
*ஓதுக வேல்மயில் அருள்வோனே"*

நாவுக்கரசருக்கு, இறைவன் பூதகணங்களால் தோளின் இருபக்கத்திலும், இடபத்தையும் சூலமும் பொறித்தருளினாரோ அது போன்று அருணகிரியாருக்கும் வேல் மயில் இரு தோள்களிலும் பொறித்து அருளிச் செய்தார் என்பது சொல்லாமலே விளங்கும்.

ஆனால், தான் மானுடப் பிறவியில் இருக்கும் போதே, முருகனது பாதார விந்தத்தின் பெருமையை வகுத்து பாட வேண்டும் என, அருணகிரியார் முருகனிடம் விண்ணப்பித்துள்ளதை அவரது பாடல்களிலிருந்தே அறிய முடிகிறது.

*"நெஞ்சுருகி நெக்குநெக்குநின்று தொழும்*
*நிர்குணத்தர் நிந்தனையில் பத்தர் வெட்சிமலர்-தூவும்*
*நின்பதயுகப்ரசித்தி என்பன வகுத்துரைக்க*
*நின்பணிதமிழத்ரயத்தை - அருள்வாயே"*

கிளியுருவம் அடைந்த பின்னரே, திருவகுப்பில் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருத முடிகிறது.

தாம்பாடிய திருப்புகழில், நோயின் கொடுமையையும், வறுமையின் துன்பத்தையும், தரித்திரத்தின் கொடுமையையும், சிற்றின்பத்தின் தாக்கத்தையும் பலவாறு பாடியுள்ள போதிலும்,

முருகனது திருக்கரத்தில், கிளியாயிருந்து பாடிய திருவகுப்பில், மேற் சொன்ன குறைகள் சிறிதுமின்றி, வேதாகமத்தின் சாரத்தைப் பிழிந்து பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

அருணகிரியாரின் திருவாக்காகிய திருவகுப்பு பகுதியில், மூன்றாவது வகுப்புப் பாடலாகிய "திருவேளைக்காரன் வகுப்பு", பத்தித்துறையிழிந்து, பேரானந்த வாரிதியில் நிலைத்து நிற்க உதவும். அதனால், அருணகிரியார் கிளிசொரூபம் அடைந்த பின், தணிகைக்கு வந்து தணிகேசன் திருக்கரத்தே தங்கி திருவகுப்புகள் பாடியிருக்கலாம் எனக் கருத வாய்ப்புள்ளது. ஒரு பானை சோற்றுக்கு, ஒரு சோறு பதம் எனும் முதுமொழிக்கேற்ப, திருவேளைக்காரன் வகுப்பு ஒன்றே போதும்.

இனி வேளைக்கார வகுப்புப் பாடலைச் சிறிது ஆராய்வோம்.

வள்ளியம்மையோடு தமது வேளையை (பொழுதை) போக்குபவன் எனக் கூறி முருகனின் சிறப்பைக் குறிக்கும் இவ்வகுப்புப் பாடலானது 32 அடிகளைக் கொண்டதாகும். அதில் சில அடிகளையும், அதற்குரிய கருத்துக்களையும் இங்கே காண்போம்.

பாடலின் முதலடி :

*"ஆனபய பக்திவழிபாடு பெறு முத்தியதுவாக*
*நிகழ்பக்தசன - வாரக்காரனும்"*

**கருத்து :** பயபக்தியோடு செய்யப்படும் வழிபாடு ஒன்றே முக்தி எனக்கருதி வழிபாடு செய்யும் பக்த ஜனங்களின் மீது ஆசை கொண்டான்.

**3-வது அடி :**

*"ஆகமம் விளைத்தகிலலோகமு நொடிப்பளவில்*
*ஆசையொடு சுற்றுமதி- வேகக்காரனும்"*

**கருத்து :** வேத சாஸ்திரங்கள் பரவியுள்ள எல்லா உலகங்களையும், ஒரு நொடிப்பொழுதில் ஆசையொடு சுற்றும் அதிதுரிதக் காரனும் - என்பதாகும்.

**4-வது அடி :**

*"ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கியநு*
*பூதியடைத்ததொரு - பார்வைக்காரனும்"*

**கருத்து :** ஆணவ மலத்தைக் கொண்டுள்ள ஆவியை நீக்க, ஞான அனுபவத்தை விளக்கும் கண் பார்வையுடையவன்.

**7-வது அடி :**

*"ஆயிரமுகத்துநதிபாலனும், அகத்தடிமை*
*யானவர் தொடுத்த கவி - மாலைக்காரனும்"*

**கருத்து :** ஆயிரம் முகங்களாகப் பரவிச் செல்லும் கங்காநதியின் குமாரன், மெய்யடிமை பூண்டவர் தொடுத்த பாமாலை அணிபவன்.

**8-வது அடி :**

*"ஆறுமுக வித்தகனும் ஆறிருபுயத்தரசும்*
*ஆதிமுடிஅற்ற - திருநாமக்காரனும்"*

**கருத்து :** ஆறுமுகத்தோடு, பன்னிருகரங்களைக் கொண்டவனும், முதலும் முடிவும் இலாத நாமத்தையுடையவன்.

**9-வது அடி :**

*"யானென தெனச்சருவும், ஈனசமயத்தவரும்*
*யாரும் உணர்தற்கரிய - நேர்மைக்காரனும்"*

**கருத்து :** யான், எனது என அகங்காரம் கொண்டவர்களான ஈன சமயவாதிகளால் அறிந்துணர முடியாத செம்மை வாய்ந்தவன்.

**10-வது அடி :**

*"யாது நிலையற்றலையும், ஏழுபிறவிக்கடலை*
*யேறவிடுநற்கருணை - ஓடக்காரனும்"*

**கருத்து :** நிலையில்லாத ஏழு பிறவி எனும் கடலினின்றும் கரையேறவிடவல்ல, நல்ல கருணையாம் ஓடத்தைச் செலுத்துபவன்.

**11-வது அடி :**

*"ஏரகம் இடைக்கழிசிராமலை திருபழநி*
*ஏரணி செருத்தணியில் - வாசக்காரனும்"*

**கருத்து :** சுவாமி மலை, திருவிடைக்கழி, சிராப்பள்ளி, திருப்பழநி, அழகு வாய்ந்த திருத்தணி எனும் தலங்களில் வாசம் செய்பவன்.

**12-வது அடி :**

*"ஏழையின் இரட்டைவினையாய தொருடற் சிறை*
*இராமல் விடுவித்தருள் - நியாயக்காரனும்"*

**கருத்து :** ஏழையாகிய அடியேனுடைய நல்வினை தீவினை இரண்டின் காரணங்களால் ஏற்பட்ட ஓர் உடல் எனும் சிறையிலிருந்து என்னை விடுவித்து ஆண்ட மகாநீதிமான்.

**15-வது அடி :**

*"யாமளை மணக்குமுகசாமளை மணிகுயிலை*
*யாயென அழைத்துருகி - நேயக்காரனும்"*

**கருத்து :** ஒருவகை பச்சை நிறமுடையவள் நறுமணம் கொண்ட மரகத நிறத்தி, அழகிய குயில் போன்ற உமையவளை, தாய் என அழைத்து விரும்பி மனம் நெகிழும் அன்பு வாய்ந்தவன்.

**16-வது அடி :**

*"ஏடவிழ்கடப்பமலர் கூதளமுடிக்கும் இளையோனும்*
*அறிவிற்பெரிய - மேன்மைக்காரனும்"*

**கருத்து :** கடப்பமலரையும், கூதள மலரையும் சிரசில் அணிகின்ற இளையவன், ஞானத்தில் மிகச் சிறப்பு வாய்ந்தவன்.

**25-வது அடி :**

*"மீனவனும், மிக்கபுலவோருமுறை பொற்பலகை*
*மீதமர்தமிழ்த்ரய - விநோதக்காரனும்"*

**கருத்து :** உக்ரபாண்டியன் சிறப்பு மிக்க சங்கப் புலவர்கள் வீற்றிருக்கும் சங்கப்பலகையின் மேல் வீற்றிருந்த தமிழ் வல்ல விசித்ரம் வாய்ந்தவன்.

**26-வது அடி :**

*"வேரிமது மத்த மதிதாதகி கடுக்கைபுனை*
*வேணியர் துதித்தபதொரு - கேள்விக்காரனும்"*

**கருத்து :** ஊமத்த மலர், ஆத்தி ஆகியவற்றை அணிந்துள்ள சிவன் துதி செய்யும் தகுதி வாய்ந்த ஒப்பற்ற கலை ஞானம் உள்ளவன்.

**30-வது அடி :**

*"வேதியர் வெறுக்கையும் அநாதிபரவஸ்துவும்*
*விசாகனும் விகற்பவெகு - ரூபக்காரனும்"*

**கருத்து :** மறையவர்க்கு மூலப் பொருளாய் விளங்குபவன். ஆதியும் அந்தமுமில்லாத முதல்வன். விசாக நட்சத்திரத்திற் குரியவன். பற்பல வேடங் கொண்டு வள்ளியை மணக்க பல வடிவங்களைப் பூண்டவன்.

**31-வது அடி :**

*"வேடுவர்புனத்திலுருமாறி முனிசொற்படி*
*வியாகுல மனத்தினொடு - போம் விற்காரனும்"*

**கருத்து :** வேடுவர் புனத்திற்கு நாரதர் கூறியதைக் கேட்டு, கவலையோடு வந்த வில் ஏந்திய வேட உருவத்தினன்.

**32-வது அடி :**

*"மேவிய புனத்திதனில் ஓவியமெனத்திகழும்*
*மேதகுகுறத்திதிருவேளைக்காரனே"*

**கருத்து :** தினைப்புனத்தில் சித்திரப்பதுமைப் போல விளங்கிய உயிர் ஓவியமாம் குறப்பெண் வள்ளி. அவளுடன் அழகாக லீலைகள் புரிந்து பொழுது போக்குபவன்.

இப்பாடலில், முருகனுக்கு பல நட்சத்திரங்கள் குறித்து பாடியுள்ள போதிலும், விசாக நட்சத்திரத்தை மட்டும் பொருத்தி பாடியுள்ளது நோக்கத்தக்கது. இதனால் அனைத்து நட்சத்திரங் களைக் காட்டிலும், விசாக நட்சத்திரம் சிறப்பு வாய்ந்தது என அறிய முடிகிறது. சிற்றின்ப வேதனைகளோ, வறுமையின் துன்பங்களோ, நோய்களின் பாதிப்புகளோ நம்மை அணுகாமல் இருக்க அருள்தரும் இதுபோன்ற வகுப்பு பாடல்கள் அனை வருக்கும் என்றென்று பயன் தருபவை.

முழுப்பாடல் அடிகளுக்கும் கருத்தைத் தெரிவித்தால் கட்டுரை நீளும் எனக் கருதி சுருக்கி அளிக்கப்பட்டுள்ளது.



பாலமுருகப்பெருமான்

# 4. அருணகிரியார் பெற்ற மூவரது நற்சாட்சிப் பத்திரம்

பேற்றைத்தவம் சற்றுமில்லாத அருணகிரியார், பிரபஞ்ச சேற்றிலிருந்து விடுபட, கீழ்வரும் மூவர்களாலும், நல்லு பதேசமும் அருள்வாக்கு சித்தியும் பெற்றவராவார் என்பது, அன்னாரது திருப்புகழிலேயே குறிப்புகள் வருகிறது. பெறற்கரிய பேற்றினை நினைத்து, தமது பாடல்களில் புகழ்ந்துள்ளார். குருடன் கண் பார்வை பெற்றது போல் பேரானந்தத்தில் திளைத்தார்.

முத்தமிழாகிய கலை வல்லவராய், யோகீஸ்வரராய், மெய் ஞானியாய், தத்திக் கரைபுரளும் பரமானந்த சாகரத்தில் திளைத்தார்.

திருவண்ணாமலையில், எவரும் கண்டு வியக்கு வண்ணம், முருகப்பெருமானை, பிரபுடதேவராஜன் முன் கம்பத்து இளையனார் சன்னிதியிலேயே காட்சியளிக்கச் செய்தார். பல காலம் தவ நிலையில் இருந்து வந்தார். நிட்டை கலைந்த வேளைகளில், முருகனருளால், சந்தப்பாக்களை எண்ணில பாடி வரலாயினார்.

“எல்லாம் அற - என்னை இழந்த நலம் சொல்லாய் முருகா” என்று துதி செய்து தவ நிலையில் இருந்து வரும் நாளில் அண்ணாமலையாரும், அருணகிரியார் தவ நிலைக்கு உகந்து, காட்சி தந்ததோடு திருநீறுபூசி “நின்துயர் ஒழிக” என அருளியதைக் குறித்து திருவருணைத்தலத்து பாடல் “தமிழோதிய குயிலே” எனும் பாடலில் 7-வது அடியில் வரும் இவ்வரலாற்றாலும், அதே பாடலில் 8-வது அடியில், இவருக்கு வள்ளிநாயகி ஸ்பரிசத்தீட்சை செய்த வரலாற்றினையும் உணர்த்துகிறது.

*கமழ்மாவிதழ் சடையாரடி யேன்துயர் தீர்ந்திடவெண்*
*தழல் மாபொடி யருள்வோரடல் மான்துடி தாங்கியவண்*
*கார்மாடரு ளுமையாளுமை -யீன்றவ ளீன்றருள்மென்*
*குரவோனே-*

*கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்*
*சகமோகினி வளிநாயகி பாங்கென னாம்பகர்மின்*
*கலைநூலுடை முருகா வழலொங்கிய வோங்கலின் வண்*
*பெருமாளே-*

**சிவனது பாகத்தில் இருந்தருளும் உமையவளும், ஆணவம், மாயை, காமியம் இவற்றினை அகற்றி என்றனை ஆண்டருளின உமை-பார்வதி என, சிதம்பரதலத்து பாடலாகிய "நாறுசதுரத்து" எனும் பாடலில்,**

*கோலமு முதிப்ப கண்டுள நாலினை மறித்தி தம்பெறு*
*கோவெண முழக்கு சங்கொலி விந்துநாதங்;*
*கூடிய முகப்பி லிந்திர வானவமு தத்தை யுண்டொரு*
*கோடிநட னப்ப தஞ்சபை யென்றுசேர்வேன்;*

*ஆலமல ருற்ற சம்பவி வேரிலி குலக்கொ முந்திலி*
*ஆரணர் தலைக்க லங்கொளி செம்பொன்வாசி*
*ஆணவ மயக்க முங் கலி காமிய மகற்றி- யென்றனை*
*ஆளுமை பரத்தி சுந்தரி தந்தசேயே;*

*வேலதை யெடுத்து மிந்திரர் மால்விதி பிழைக்க - வஞ்சகர்*
*வீடெரி கொளுத்தி யெண்கட லுண்டவேலா.*

**எனும் 7-வது அடியில், பாடியுள்ளது நோக்கின், இவரது நன்றி மறவாமையும், தாம் பெற்ற பேரின்பமும் புலனாகின்றது. இதுபோன்று பேரருளைப் பெற்றவர், "புனமடந்தை" எனத் துவங்கும் காஞ்சி தலத்து பாடலில் 4-வது அடியில்,**

*புனமடந் தைக்குத் தக்க புயத்தன்*
*குமரனென் றெத்திப் பத்தர் துதிக்கும்*
*பொருளைநெஞ் சத்துக் கற்பனை முற்றும் பிறிதேதும்*

*புகலு மெண் பத்தெட் டெட்டியல் தத்வம்*
*சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்*
*பொதுவை யென் றொக்கத் தக்கதொர ரத்தந் தனைநாளும்*

*சினமுடன் தர்க்கித் துச்சிலு கிக்கொண்*
*டறுவருங் கைக்குத் திட்டொரு வர்க்குத்*
*தெரிவரும் சத்யத் தைத்தெரி சித்துன் செயல்பாடித்*
*திசைதொறுங் கற்பிக் கைக்கினி யற்பந்*
*திருவுளம் பற்றிச் செச்சை மணக்குஞ்*
*சிறுசதங் கைப்பொற் பத்ம மெனக்கென் றருள்வாயே*

*கனபெருந் தொப்பைக் கெட்பொரி யப்பம்*
*கனிகிழங் கிக்குச் சர்க்கரை முக்கண்*
*கடலைகண் டப்பிப் பிட்டொடு மொக்குந் திருவாயன்*
*கவளதுங் கக்கைக் கற்பக முக்கண்*
*திகழுநங் கொற்றத் தொற்றை மருப்பன்*
*கரிமுகன் சித்ரப் பொற்புகர் வெற்பன் றனையீனும்;*

*பனவி யொன் றெட்டுச் சக்ரத லப்பெண்*
*கவுரிசெம் பொற் ஃபட் டுத்தரி யப்பெண்*
*பழய அண் டத்தைப் பெற்ற மடப்பெண் பணிவாரைப்*
*பவதரங் கத்தைத் தப்ப நிறுத்தும்*
*பவதி கம் பர்க்குப் புக்கவள் பக்கம்*
*பயில் வரம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே.*

பாடலின் 4-வது அடியின் கருத்து:-

திசைகள் தோறும் உள்ள யாவர்க்கும் அடியேன் பெற்ற பேற்றினை எடுத்து உபதேசிக்க இனிசற்று நீ திருவுளம் வைத்து, வெட்சிமாலைமணம் வீசும் உனது சதங்கை அணிந்துள்ளதுமான அழகிய திருவடித் தாமரையை எனக்கு என்று அருள்புரிவாய்- என்பதாகும்.

தாம்பெற விரும்பிய உபதேசப் பொருளை யாவரும் அறிதல் வேண்டும் என அருணகிரியார்க்கு உள்ள இந்தப் பரந்த சமரஸ எண்ணம், அவருடைய கருணையைக் காட்டுகின்றது.

'கருணைக்கு அருணகிரி' என்பதற்கு இது ஒரு சான்று.

மூவராலும் பாராட்டப் பெற்றதின் பயனாக முருகப் பெருமானும், "வேற்கொடுமயிலினில் வந்தெனை ஆட்கொளல் சகமறியும்படி காட்டியருளியதை" அருணகிரியார் தமது திருப்புகழ் 'அரிவையர் நெஞ்சுரு" எனும் பாடலில் 6-வது அடியில் பாடியுள்ளதை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

சயிலமெ றிந்தவை வேற்கொடு
மயிலினில் வந்தெனை யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய குருநாதா;

# 5. ஒற்றைக்கிரி மத்தைப்பொருது செய்த கண்ணன்

அருணகிரியார் தாம் பாடிய பாடல்கள் அனைத்தும் சமரஸ நோக்கிலே பாடியுள்ளார். இதனால், இவரது புலமையும் பல வரலாறுகளை படித்த அனுபவமும் இவரது பாடல்களில் ஆங்காங்கே மின்னலைப் போன்று பளிச்சிடுவதை காண முடிகிறது.

உதாரணத்திற்கு ஒரு பாடல் :- "பொன்றாமன்றாக்கும்" - (திருவாலங்காட்டு திருப்புகழில்)

1. *பொன்றாமன் றாக்கும் புதல்வரும்*
*நன்றாமன் றார்க்கின் றுறுதுணை*
*பொன்றாதெனன் றாட்டம் பெருகிய புவியூடே*

2. *பொங்காவெங் கூற்றம் பொதிதரு*
*சிங்காரஞ் சேர்த்திங் குயரிய*
*புன்கூடொன் றாய்க்கொண் டுறைதரு முயிர்கோல*

3. *நின்றானின் றேத்தும் படிநினை*
*வுந்தானும் போச்சென் றுயர்வற*
*நிந்தாகும் பேச்சென் பதுபட நிகழாமுன்*

4. *நெஞ்சாலஞ் சாற்பொங் கியவினை*
*விஞ்சாதென் பாற்சென் றகலிட*
*நின்தாள்தந் தாட்கொண் டருள்தர நினைவாயே*

5. *குன்றால்விண் டாழ்க்குங் குடைகொடு*
*கன்றாமுன் காத்துங்க குவலய*
*முண்டார்கொண் டாட்டம் பெருகிய மருகோனே*

6. *கொந்தார்பைந் தார்த்திண் குயகுற*
*மின்தாள்சிந் தாச்சிந் தையில்மயல்*
*கொண்டே சென்றாட்கொண் டருளென*
*மொழிவோனே*

7. *அன்றாலங் காட்டண் டருமுய*
*நின்றாடுங் கூத்தன் திருவருள்*
*அங்காகும் பாட்டின் பயனினை யருள்வாழ்வே*

8. *அன்பால்நின் தாட்கும் பிடுபவர்*
*தம்பாவந் தீர்த்தம் புவியிடை*
*அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே.*

**மேலே கொடுத்துள்ள** பாடலின் 5-வது அடியில், குன்றேந்தி பசுக்களைக் காத்த வரலாற்றினை, சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளது, இவரது கவித்திறனுக்கும் புலமைக்கும் ஓர் அற்புத எடுத்துக்காட்டு என்றே கூறலாம்.

வரலாறு : <u>குன்றேந்தி பசுக்களை காத்தது</u>

திருவாய்ப்பாடியில் மழையில்லாது வருந்தினர் ஆயர்கள். மழை வேண்டி ஆயர்கள் இந்திரனை வழிபடச் சமைத்த சாதத்தைக் கண்ணன் பார்த்தான். கண்ணன் இந்திரனது செருக்கை அடக்க நினைத்து, கோவர்த்தன மலைக்கு அந்த நிவேதனச் சாதத்தை நிவேதித்து பின்னர் அதைத்தானே தேவதாரூபமாய் அமுது செய்தான்.

இந்திரன் இதைக் கண்டதும் வெகுண்டு, கண்ணன் மேய்க்கும், பசுக்களுக்கும், கன்றுகளுக்கும், இடையர்களுக்கும் துன்பம் நேரிடும்படி, ஏழு நாட்கள் கல்மழையை பெய்விக்கலானான். இதனை அறிந்த கண்ணனோ கோவர்த்தன மலையையே குடையாக பிடித்து, மழையினின்றும், தடுத்து பசுக்களையும், கன்றுகளையும், இடையர்களையும் காப்பாற்றினான்.

"இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த விழாவில் பழநடை செய். மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத் தளர்ந்து ஆயர்கள், தங்களோடு பசுக்களின் கூட்டத்தை மனமிரங்கி உதவிய அருளென்ன. அந்தமில் வரையால் மழை தடுத்தானைத் **திருவல்லிக்கேணிக் கண்டேனே"** - பெரிய **திருமொழி 2:3:4** பகர்கிறது. மேலும்,

*"காளநன் மேகமலை கல்லொடுகால் பொழியக்*
*கருதிவரைக்குடையாக் காலிகள் காப்பவனே"*

என பெரியாழ்வார் விளக்கங்களை, மேலே கொடுத்துள்ள பாடலின் 5-வது அடி, ரத்தின சுருக்கமாக கூறியது மிகவும் போற்றத்தக்கது.

இவரை, "சொல்லின் செல்வர்" என்பதனை உறுதிப் படுத்த, மேலே சொன்ன பாட்டின் 6-வது அடியை, மேலும் சுருக்க கருதிய அருணகிரியார் தாம் பாடிய "முத்தைத் தருபத்தித் திருநகை" எனும் பாடலில், ஒற்றைக்கிரி மத்தைப் பொருது என்னும் வார்த்தையிலேயே அடக்கி பாடியுள்ள இவரை "தமிழ்ப்பாவேந்தர்" என்றே புகழலாம்.



குன்றேந்தி பசுக்களை காத்தது

# 6. பாலைக்கற்பகமான முருகன்

அருணகிரியார் முருகனுக்கு பல நாமங்களால் புகழ்ந்து பாடல் புனைந்த போதிலும், "பாலைக் கற்பகம்" என தலைப்புத் தந்து பாடியுள்ளது மிகவும் வியப்பில் ஆழ்த்துகிறது.

"மெய்ச்சார்வற்றே" எனத்துவங்கும், திருச்செங்கோட்டு தலத் திருப்புகழில், 4-வது அடியின் இறுதியில் "பாலைக் கற்பகமேதான்" எனப் பாடியுள்ளது போன்று முருகனுக்கு தலைப்பு தந்து வேறு எந்த கவிகளும் பாடல்கள் புனைந்துள்ள தாக குறிப்புகள் காணவில்லை. இதனை சிந்தித்தல் அவசியம். பாடலைப் பார்ப்போம்.

*மெய்ச்சார் வற்றே பொய்ச்சார் வுற்றே*
*நிச்சார் துற்பப் பவவேலை -*
*விட்டே றிப்போ கொட்டா மற்றே*
*மட்டே யத்தத் தையர்மேலே;*

*பிச்சா யுச்சா கிப்போ ரெய்த்தார்*
*பத்தார் விற்பொற் கழல்பேணிப் -*
*பிற்பால் பட்டே நற்பால் பெற்றார்*
*முற்பா லைக்கற் பகமேதான்;*

*செச்சா லிச்சா லத்தே றிச்சே*
*ணுற்றா ணித்துப் பொழிலேறு*
*செக்கோ டைக்கோ டுக்கே நிற்பாய்*
*நித்தா செக்கர்க் கதிரேனல்;*

*முச்சா லிச்சா லித்தாள் வெற்பாள்*
*முத்தார் வெட்சிப் புயவேளே -*
*முத்தா முத்தீ யத்தா சுத்தா*
*முத்தா முத்திப் பெருமாளே.*

முத்தி நெறியறியாது அல்லல்படும் ஆன்மாக்களுக்கு சித்தமலம் அறுவித்து நல்லுணர்வூட்டும் அருமையான பாடலாகும்.

பாலைக்கற்பகம் - பாலை நிலம் என்பது நீரற்ற மணற் பாங்கான நிலமாகும். நம்முன்னோர்கள், நிலங்களை 4 வகையாகப் பிரித்துள்ளனர். அவற்றுள் பாலை நிலம் என்பது ஒன்றாகும். இப்பகுதியையே, சுரமும், சுரம் சார்ந்த இடமென்றும் குறிப்பிடுவர்.

**சுரம் :** என்றால் வெளிக்காடு என்பது பொருள். இத்தகைய வெட்டவெளியான மணற்பாங்கில், குளிர்ந்த நிழலும், நீரும் தருவதான கற்பக விருட்சம் போல முருகப் பெருமானே, நீர் நற்குணம் வாய்ந்தவர் முன்தோன்றி கருணைபுரிவாயாக எனும் கருத்தமைய பாடல் புனைவதில் நிகரற்றவர் என்பதில் ஐயமில்லை.

"*அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்க்கெல்லாம்*
*நிழல்மரம் போல் நேரொப்பத் தாங்கிப் - பழுமரம்போல்*
*பல்லார் பயன் துய்ப்பத்தான் வருந்தி வாழ்வதே*
*நல்லாண் மகற்குக்கடன்*"

என நாலடியாரும் (202) மேலும்,

"*நிழலின் நீளிமைத்தனிமரம் போல் ........*"
"*இரவலர்க்கு ஈயும் வள்ளியோன்*"

எனும் புறநானூற்று 119-ம் அடியும் உறுதி செய்கிறது.

"*அருஞ்சுரத்தின் மரம் போல் அடைந்தார்க்கு*
*அளித்தல் அவற்கியல்பு*"

என வரும் நச்சினார்க்கினியார் கருத்தும் (சிந்தாமணி - கடவுள் வாழ்த்து 3-ம் பாடல் உரை)

"முருகன் பாலைக்கற்பகம்" என்பதனை உறுதி படுத்துகிறது. இப்பாடலால், முன்னர் பிழையுள்ள நெறியில் வாழ்ந்திருப்பினும், பின்னர் அப்பிழையை உணர்ந்து அடியார்

குழாத்தில் இணங்கி, நன்னெறியைக் கைப்பற்றினவர்க்கு, முருகப்பெருமான், பாலை நிலத்தில் தோன்றும் கற்பக விருட்சம் போன்று, நற்கதி அருள்வார் எனும் தத்துவத்தை அருணகிரியார் தன் அனுபவத்தின் வாயிலாக உணர்த்துகின்றார்.

முத்தி நெறி காண விழையும் அடியார்களுக்கு இப்பாடல், செம்மை நெறி அறிவித்து சிவமாக்கும் பக்குவத்தை உணர்த்தும் பாடலாகும்.

இப்பாடலையே தொண்டர்கள் தினமும் முருகன் சந்நதியில் ஓதிவருதலை தலையாய கடமையாகக் கருதி துதி செய்து வாழ்வில் எல்லா நலன்களையும் பெறுவார்களாக.



பாலைக்கற்பகமான முருகன்

# 7. கல்விகரை கண்ட புலவன் - முருகன்

அருணகிரியார் எந்த வரலாற்றினையும், தாம் பாடிய பாடல்களில் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் திறம் வாய்ந்தவர். வள்ளிமலைப்பாடல் ஒன்று இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். வள்ளிமலை பாடல் "அல்லசலடைந்த" எனத் துவங்கும் பாடல் :-

*அல்லசல டைந்த வில்லடல நங்கன்*
*அல்லிமல ரம்பு தனையேவ-*
*அள்ளியெரி சிந்த பிள்ளைமதி தென்ற*
*லையமுது கிண்ட அணையூடே-*

*சொல்லுமர விந்த வல்லிதனி நின்று*
*தொல்லைவினை யென்று முனியாதே-*
*துய்யவரி வண்டு செய்யமது வுண்டு*
*துள்ளியக டம்பு தரவேணு-*

*கல்லசல மங்கை யெல்லையில் விரிந்த*
*<u>கல்விகரை கண்ட</u> <u>புலவோனே</u>*
*கள்ளொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று*
*கல்லலற வொன்றை யருள்வோனே*

*வல்லசுர ரஞ்ச நல்லசுரர் விஞ்ச*
*வல்லமைதெ ரிந்த மயில்வீர*
*வள்ளிபடர் கின்ற வள்ளிமலை சென்று*
*வள்ளியை மணந்த பெருமாளே.*

இப்பாடலின் 5-வது அடியில், முருகனை, <u>கல்விகரைகண்ட புலவர்</u> என பாராட்டியுள்ளதின் கருத்து :

ஒரு காலத்தில் கலை வல்லுனர்களும், தேவர்களும், முநிவர்களும் கூடியிருந்த சபையில், யார் முதன்மைப் புலமை வாய்ந்தவர் அன்னாருக்கே முதலில் வித்வத் தாம்பூலம் வழங்க

வேண்டும் என ஆலோசித்த சமயத்தில், சரஸ்வதியின் அம்சமான அவ்வையாரே வித்வத் தாம்பூலத்துக்கு பொருத்தமானவர் என முடிவு செய்தனர்கள். யாவரும் ஒன்று சேர்ந்து முடிவு செய்ததை அவ்வையாரிடம் கூறினர். அவ்வையார் மிகவும் அதிர்ச்சி அடைந்தார். இதற்குயான் பொருத்தமன்று எனக்கூறி, புலவர்கள் எனப்படும் தேவர்களுக்கு அதிபன் இந்திரன் தான் தகுதி. "ஐந்திரவியாகரணம்" எனும் சிறப்பான இலக்கண நூலை இயற்றியவன் இந்திரன். ஆதலால் அவனிடம் தாம்பூலம் தருவதே சிறப்பு எனக் கூறிவிட்டார்.

இதனை ஏற்று, இந்திரனிடம் விவரமாகக் கூறக் கேட்டதும், இந்திரன் அதிர்ச்சியுற்று, இலக்கண நூல் இயற்றியதால், சகலகலைகளும் கற்றறிந்தவன் எனக் கொள்ளுதல் வேண்டாம். அதைவிட முருகவேளிடம் தமிழ் கற்ற கும்பமுநிவரே இத்தாம்பூலத்தை வாங்க தகுதியுடையவர். அவரிடமே தாம்பூலத்தைக் கொடுங்கள் என அறிவித்தார். இதற்கு மறுப்பு கூறாது, யாவரும் அகத்தியரிடம் சென்று, நடந்த செய்திகள் அனைத்தும் கூறி, தாம்பூலத்தை ஏற்றுக் கொள்ள விண்ணப்பித்தனர்.

அகத்தியர், இத்தகுதிக்கு யான் பொருத்தமானவனல்ல எனக்கூறி, "சகலகலாவல்லி", 'கலைமகள்' என்னும் திருநாமம் கொண்ட சரஸ்வதிதான் இத்தாம்பூலத்தை வாங்கும் தகுதி உடையவள் என அவர்களுக்கு சமாதானம் சொல்லி அனுப்பினார்.

புலவர்களும், முநிவர்களும் சேர்ந்து, கலைவாணியிடம் சென்று, கோரிக்கையை கூற, கலைமகள் யான் கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு. ஆகையால் ராஜராஜேஸ்வரி எனப்படும் பார்வதி தேவியாரே இப்பரிசுக்கு தகுதியுடையவள் என ஆசி கூறி அனுப்பினாள்.

யாவரும் தேவியிடம் சென்று விண்ணப்பித்தனர். உமாதேவியோ இவர்கள் கூறியதைக் கேட்டு புன்னகைப்புரிந்து

நான் வாழைப்பழத்தின் தோல் போன்றவள். எனக்குள் இருந்த பழம், முத்துக்குமரனே இப்பரிசுக்கு உரியன் எனக் கூறியதைக் கேட்டதும், கடைசியாக கந்தமாதனப் பர்வதம் சென்று இதுகாறும் நிகழ்ந்த செய்திகளை கூறி, தாம்பூலத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என இறைஞ்சினர்.

கந்தனும், "நல்லது, தாம்பூலத்தை ஏற்றுக் கொள்வோம்" என எவ்வித தடையுமின்றி, பரிசை ஏற்றுக் கொண்டார். இதனால் முனிவர்களும், தேவர்களும், புலவோர்களும் கரம் கூப்பி தொழுதேத்தினர். மலைமங்கை வரைக்கும் சென்று அந்த அம்மையார் கல்விகரைகண்டவன் எம்புதல்வனே எனக் குறித்தபடியால், "கல்லசலமங்கை எல்லையில் விரிந்த கந்தவேள் கல்விகரைகண்ட புலவன்" ஆயினன்.

இதன் விரிவை "சுப்ரமண்ய பராக்ரமம்" எனும் நூலில் சகலகலாவல்லபமூர்த்தி" சரித்திரத்தை பார்க்க.

இத்தகு விஸ்தாரமான விளக்கத்தை, அருணகிரியார், வள்ளிமலை திருப்புகழ் வாயிலாக அறிவித்தது இவரது புலமை சாதுர்யத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு எனக் கொள்ளலாம்.



பாலமுருகப் பெருமான்

# 8. எட்டிரண்டுமறியாத என் செவியில் - திருப்புகழ்

அருணகிரியார் தாம் பாடிய திருப்புகழில் ஒரு சில பாடல்களின் மூலமாக தாம் இறைவனால் ஆட் கொள்ளப்பட்ட விதத்தினையும், அதன் மூலம் அடைந்த உபதேசச் சிறப்பையும் குறித்துப் பாடியுள்ளதை, பரக்கக் காணமுடிகிறது.

"கட்டிமுண்டகா" எனத்துவங்கும் சிதம்பரத்து பாடல் ஒன்று அறிவித்துள்ளதைப் பார்ப்போம். பாடல் : அருணகிரியார் உபதேசம் பெற்ற வரலாற்றினைக் குறித்து.

*கட்டி முண்டகா பாலி யங்கிதனை*
*முட்டி யண்டமொடு தாவி விந்துவெர்லி*
*கத்த மந்திரவ தான வெண்புரவி மிசையேற்க*
*கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்*
*பட்டி மண்டபமு டாடி யிந்துவொடு*
*கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ டசையாமற்;*

*சுட்டு வெம்புரதி றாக விஞ்சைகொடு*
*தத்து வங்கள்விழ சாடி யெண் குணவர்*
*சொர்க்கம் வந்துகையு ளாக எந்தைபத முறமேவித்*
*துக்கம் வெந்துவிழ ஞான முண்டுகுடில்*
*வச்சி ரங்களென மேனி தங்கமுற*
*சுத்த கம்புகுத வேத விந்தையொடு புகழ்வேனோ;*

*எட்டி ரண்டுமறி யாத என்செவியி*
*லெட்டி ரண்டுமிது வா மி லிங்கமென*
*எட்டி ரண்டும்வெளி யாமொ ழிந்தகுரு முருகோனே-*
*எட்டி ரண்டுதிசை யோட செங்குருதி*
*யெட்டி ரண்டுமுரு வாகி வஞ்சகர்மெ*
*லெட்டி ரண்டுதிசை யோர்கள் பொன்றஅயில் விடுவோனே;*

*செட்டி யென்று சிவ காமி தனபதியில்*
*கட்டு செங்கைவளை கூறு மெந்தையிட*
*சித்த முங் குளிர நாதி வண்பொருளை நவில்வோனே-*
*செட்டி யென்றுவன மேவி யின்பாக*
*சத்தி யின்செயலி னாளை யன்புருக*
*தெட்டி வந்துபுலி யூரின் மன்றுள்வளர் பெருமானே*

இப்பாடலில் 5-வது அடியில் பாடியுள்ளது, மிகவும் ஆழமான கருத்தினை பொருத்தி ஒரே அடியில் சுருங்கச் சொல்லி பாடியுள்ளது இவரது கவித்திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

5-வது அடியில் கூறியுள்ள கருத்தினைப் பார்ப்போம். எட்டு இரண்டு - அகார உகாரங்கள் அவற்றின் பிரபாவம் குருமுகமாக உணரற்பாலது. பட்டி மண்டபம் ஏற்றினையேற்றினை எட்டினோடிரண்டும் 'மாறியேனையவே' என்பது திருவாசகம். இங்கு எட்டினோடிரண்டும் அறியேனையே எனவரும் அடிக்குப் பண்டிதமணி, திரு. கதிரேசம் செட்டியார் கூறியுள்ள உரையையும் பொருத்திப் பார்க்கலாம்.

'உலகியலில் அறிவு இல்லாதவன் ஒருவனைக் குறித்து, "எட்டும் இரண்டும் எவ்வளவு" எனக் கேட்டால், சொல்ல தெரியாதவன் என்று இழித்து உரைத்தலை கேட்கின்றோம். அதனையே அடிகள் தம்பால் ஏறிட்டு, 'எட்டினோடு இரண்டும் அறியேனை' எனக் கூறினர். இனி எட்டினோடு என்பதற்கு அகரத்தோடு எனவும், இரண்டும் என்பதர்க்கு உகரமகரங்கள் எனவும் பொருள் கொண்டு, அகர உகர மகரங்களின் இயைபு ஆகிய பிரணவ மந்திரம் எனக் கொள்ளுதலும் ஒன்று, இவ்வுண்மையை எட்டும் இரண்டும், இனிது அறிகின்றவர் எட்டும் இரண்டும் அறியாத ஏழையர் எட்டும் இரண்டும் இருமூன்று நான்கு எனப்பட்டது சித்தாந்த சன்மார்க்கப்பாதமே எனக் கூறுவர் திருமூலர். ஈண்டு எட்டும் இரண்டும் பிரணவம் என்று அறியாத ஏழையர் இரு மூன்று நான்கு திருவாசக உரை திருப்புகழின் அடியின் கருத்தை நன்கு தெரிவிக்கின்றது.

அகரஉகரமகரங்கள் - ஓம் எனும் பிரணவமாம்.

மேலும், மற்றோர் பாடலில், 'எட்டு இரண்டும் அறியாத என் செவியில் - மொழிந்த குருநாதனே' என்பதற்கு எட்டும் இரண்டும் பத்து பத்து என்று எண்ணிக்கை கூட் அறியாத முட்டாளாகிய எனக்கும் உபதேசம் செய்து கரை ஏற்றினையே என்பது ஒரு பொருள் எட்டும். இரண்டுமறியாத அடியார்களுக்கு உரிய பத்து இலக்கணங்களுள் ஒன்றேனும் இல்லாத எனக்கும் உபதேசம் செய்த குருவே என்பதும் பொருளாம்.

10 இலக்கணங்களாவன :

1. கண்டமிசை தழுதழுத்தல்
2. நா அசைத்தல்
3. இதழ் துடித்தல்
4. கம்பமாதல்
5. விண்டு மயிர் பொடித்தல்
6. அங்கம் வெதும்பியேவிதிர் விதிர்த்தல்
7. நில்லா எண்டிகைகள் தள்ளாடிவிழல்
8. கண்ணீர் பிலிற்றல்
9. கலுழ்ந்திரங்கல்
10. ஆர்வம் கொண்டு பரவசப்படுதல்

இவை பத்தும் அடியார்க்குக் குறிகளாகும். அம்மா! (ஞானவரோதயர் உபதேச காண்டம் 92)

"*பத்து கொலாம் அடியார் செய்கைதானே*"
அப்பர் - (4-18-10)

"*பத்துடையீர் ஈசன்பழ அடியீர்*"
திருவாசகம் (திருவெம்பாவை)

"*பத்துடை அடியவர்க்கெளியவர்*" (திருவாய்மொழி 1-3-1)

"*பத்தாம் அடியார்க்கோர் பாங்கனுமாம்*" (அப்பர் 6-15-2)

இனி எட்டும் இரண்டும் பத்து - அது தமிழ் எண்ணில் "ய", "ய" பஞ்சாட்சரத்தில் ஆன்மாவைக் குறிக்கும். ஆதலால் எட்டும் இரண்டும் அறியாத என்பதற்கு ஆன்ம இலக்கணம் அறியாதிருந்த எனக்கு எனவும் பொருள் கொள்ளலாம்.

# 9. திருப்புகழில் ஞானசம்பந்தர்

அருணகிரியார், ஞானசம்பந்தப் பெருமானை, முருகனது அவதாரம் என்றே பல பாடல்களில் பாடியுள்ளார். இவருக்கு உமை அம்மையே பொற் கிண்ணத்தில் பாலைக் கொடுத்து ஆட்கொண்டதிலிருந்தே உறுதி செய்ய முடிகிறது.

உமாதேவியார், 'உண்ணுக, இது ஞானத்தைத் தரும்' என மொழிந்து பொற் கிண்ணத்தில் பொழிந்து தந்ததை உண்டபாலன். இதனை,"பகர்தற்கரிதான" எனத்துவங்கும் பழநிதலத்துப் பாடலில் 5-வது அடியில்

"*நுகர் வித்தகமாகுமென்றுமை மொழியிற் பொழிபாலையுண்டிடு*
*நுவல் மெய்ப்புளபாலன்*"

பாடியுள்ளது காணமுடிகிறது. இதனையே :

*எண்ணரிய சிவஞானத்தின்ன முதங்குழைத்தருளி*
*உண்ணடிசில் என ஊட்ட உமையம்மை*

(பெரியபுராணம் திருஞான 68 கூறுகிறது)

இதனால் சம்பந்தர் ஞானமும், வாய்மையும், புகழும் உடையவர் 'மெய்ப்புளபாலன்" என்பதற்குச் சான்று.

அருணகிரியார் ஞானசம்பந்தரது தேவாரத்தை படித்துள்ளார் என்பது, ஞானசம்பந்தர் பாடின திரச்சிராப்பள்ளி தலத்து திருக்கடைக்காப்பு பாடல்களையே கருத்தில் கொண்டு, தாம் பாடிய திருப்புகழ் பாடல்களில் புகுத்திபாடியுள்ளது கவனிக்கற் பாலது.

ஞானசம்பந்தர் பாடிய திருக்கடைக்காப்பு:

"*நன்றுடையானைத்தீய திலானை நரைவெள்ளே*
*றொன்றுடையானை உமையொருபாகம் உடையானைச்*
*சென்றடையாத திருவுடையானைச்சிராப்பள்ளிக்*
*குன்றுடையானைக் கூற என்னுள்ளம் குளிரும்மே*"

அருணகிரியார் பாடிய திருப்புகழில், "அரிவையர்நெஞ்சுருகா" எனும் பாடல் கடைசி அடியில் சம்பந்தரது சொற்பிரயோகத்தை

*அரிவையர் நெஞ்சுரு காப்புணர்*
*தருவிர கங்களி னாற்பெரி*
*தவசம்வி ளைந்துவி டாய்த்தடர் முலைமேல்வீழ்ந்-*
*தகிலோடு சந்தன சேற்றினில்*
*முழுகியெ ழுந்தெதிர் கூப்புகை*
*யடியின கம்பிறை போற்பட விளையாடிப்;*

*பரிமளம் விஞ்சிய பூக்குழல்*
*சரியம ருங்குடை போய்ச்சில*
*பறவைக ளின்குர லாய்க்கயல் விழிசோரப்-*
*பனிமுக முங்குறு வேர்ப்பெழ*
*இதழமு துண்டிர, வாய்ப்பகல்*
*பகடியி டும்படி தூர்த்தனை விடலாமோ;*

*சரியையு டன்க்ரியை போற்றிய*
*பரமப தம்பெறு வார்க்கருள்*
*தருகணன் ரங்கபு ரோச்சிதன் மருகோனே-*
*சயிலமெ றிந்தகை வேற்கொடு*
*மயிலினில் வந்தெனை யாட்கொளல்*
*சகமறி யும்படி காட்டிய குருநாதா;*

*திரிபுவ னந்தொழு பார்த்திபன்*
*மருவிய மண்டப கோட்டிகள்*
*தெருவில்வி ளங்குசி ராப்பளி மலைமீதே*
*தெரிய இருந்தப ராக்ரம*
*உருவளர் குன்றுடை யார்க்கொரு*
*திலதமெ னும்படி தோற்றிய பெருமாளே.*

ஞானசம்பந்தர் கையாண்ட விதத்தில், "அழுதழுதாசார" எனும் சிராப்பள்ளி பாடலிலேயே, திருவுடையானை, உமையொரு பாகமுடையானை போன்ற சொற்றொடர்களை, அருணகிரியார் கோடிட்ட வரிகளில் புகுத்தி பாடியுள்ளது சிறப்பாகும் :

*அழுதழு தாசார நேசமு முடையவர் போலேபொய் சூழ்வுறும்*
*அசடிகள் மாலான காமுகர் பொன்கொடாநாள்-*
*அவருடன் வாய்பேசி டாமையு முனிதலு மாறாத தோஷிகள்*
*அறுதியில் காசாசை வேசைகள் நஞ்சுதோயும்;*

*விழிகளினால்மாட வீதியில் முலைகளை யோராம லாரொடும்*
*விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத-*
*விரகிகள் வேதாள மோவென முறையிடு கோமாள மூளிகள்*
*வினைசெய லாலேயெ னாவியு யங்கலாமோ;*

*வழியினில் வாழ்ஞான போதக பரமசு வாமீவ ரோதய*
*வயலியில் வேலாயு தாவரை யெங்குமானாய்-*
*மதுரையின் மீதால வாயினில் எதிரம ணாரோ ரெணாயிரர்*
*மறிகழு மீதேற நீறுப ரந்துலாவச்*

*செழியனு மாளாக வாதுசெய் கவிமத சீகாழி மா முனி*
*சிவசிவ மாதேவ காவென வந்துபாடும்-*
*திருவுடை யாய் தீதி லாதவர் உமையொரு பாலான மேனியும்*
*சிரகிரி வாழ்வான தேவர்கள் தம்பிரானே*

இதனால் அருணகிரியாரது பாடல்கள் அனைத்துமே சமரஸ நோக்கிலே பாடியதோடன்றி, சொற்சுவை, பொருட்சுவை, பக்திச்சுவை இம்மூன்றிலும் தலைசிறந்து விளங்குவதைப் பார்க்க முடிகிறது.

அருணகிரியாருக்கு ஞானசம்பந்தர் மேல்மிக்க பற்றுடையவர் என்பதற்கு, இவரது பாடல்களில் இருந்தே அறிய முடிகிறது.

ஞானசம்பந்தரைப் போல் அமிர்தகவிதொடைபாட விருப்பப்பட்டவராவார்.

ஆதாரம் :- புவியதனிற் - ப்ரபுவ்ரின
"புகலியில்வித் - தகர்போல
அமிர்தகவித் - தொடைபாட
அடிமைதனக் - கருள்வாயே"

*இரசதகிரி திருப்புகழ் பாடலில் முற்பகுதியில் பாடியுள்ளார்.* சம்பந்தர், தமது திருக்கடைக்காப்பில், ஒருபாடலை நெட்டெழுத்து வராமலே “பிடியதனுருவுமைகொளமிகுகரியது” எனும் பாடலை பாடியுள்ளது போன்று தாமும் திருப்புகழ்ப் பாட ஆசைப்பட்டதற்கேற்ப நெட்டு எழுத்து வராமலே, திருவருணைத்தலத் திருப்புகழ் “குமரகுருபரகுணதரநிசிசர” எனும் பாடலில் நெட்டெழுத்து வராமலேயே பாடியுள்ளது, இவருக்கு சம்பந்தர் மேல் கொண்டுள்ள பற்றும், முருகனது அருளும் வாய்க்கப்பட்டவர் என்பது வெளிப்படுகிறது.

சம்பந்தர் 16000 பாடல்களைப் பாடியது போன்று அருணகிரியாரும் 16000 திருப்புகழ் பாக்கள் பாடியுள்ளதை நோக்கின், இருவருக்குமுள்ள ஒற்றுமை நயத்தை காண முடிகிறது.

மேலும் விரிப்பின் பெருக்கும்.

திருப்புகழ் அருளி
ஸ்ரீ அருணகிரிநாதர்

திருஞானசம்பந்தர்

# 10. உள்ளத்தை உறைய வைத்த சுந்தரர்

சிவனையே முழு முதற் கடவுளாகக் கொண்டு, தேவாரம், திருவாசகம் போன்ற பாடல்கள், நால்வர்களால் அருளிச் செய்யப்பட்டது. திருஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் போன்ற மூவர்களால் நிகழ்த்திய அற்புதச் செயல்களைச் சிந்தித்தல் அவசியம்.

1. **ஞானசம்பந்தர் :** பல வருடங்களுக்கு முன்னர் இறந்த பூம்பாவை எனும் பெண்ணங்கை, ஞானசம்பந்தர் உயிர்ப்பிக்கச் செய்ததற்கு, மூலப் பொருளாகிய அவளது அஸ்தியே பயன்பட்டது.

2. **நாவுக்கரசர் :** அப்பூதி அடிகளாரது மகன் அரவம் தீண்டி இறந்தான். அவனை உயிர்ப்பிக்கச் செய்ய நாவுக்கரசர், அவனது தேகத்தையே மூலப் பொருளாகக் கொண்டு உயிர்ப்பிக்கச் செய்தார்.

3. **சுந்தரர் :** அவிநாசியில் உள்ள ஏரியில் பல வருடங்களுக்கு முன்பு, முதலையுண்ட பாலனை, எவ்வித தடயங்களின் உதவி இன்றியே, சுந்தரர் பதிகம்பாடி, பிள்ளையை உயிர் பெற்று வரச் செய்தது.

மேற்கூறிய இருவர்களது அற்புத நிகழ்ச்சிகளைக் காட்டிலும், விஞ்சிவிடும் விதத்தில் சுந்தரரது செயல் அமையலாயிற்று. இதனால் மூவரில் சிறந்த நாயன்மார்களில் சுந்தரது அற்புதச் செயலே தலைசிறந்ததென கருத முடிகிறது.

பொதுவாகவே, "நூறு பொய் சொல்லி கல்யாணம் செய்" எனும் வழக்குச் சொல், இன்றும் வழக்கத்தில் இருந்தபோதிலும், உற்ற தோழனாகிய சுந்தரரது திருமணத்தையே பொய் சொல்லி சிவனே தடுத்து நிறுத்தினது எங்ஙனம்? விடை காணுவதற்கு, அருணகிரியாரது திருப்புகழ் "இருளளகமகிழமதி" எனத் துவங்கும் காஞ்சி தலத்துப் பாடலில் 5, 6-வது இரு அடிகளில்,

பாடியுள்ளதை கவனித்தல் அவசியம். அருணகிரியார் எந்த வரலாற்றினையும் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் தேர்ச்சிப் பெற்றவர். அதனால் "சொல்லின் செல்வர்" எனப் புகழ்வதில், பிழை என்ன இருக்கப் போகிறது.

திருப்புகழ்ப்பாடலைப் பார்ப்போம் :

1. *இருளளக மவிழமதி போத முத்த ரும்ப*
*இளகுகயல் புரளஇரு பார பொற்ற னங்கள்*
*இளகஇடை துவளவளை பூசலிட்டி ரங்க-எவராலும்*

2. *எழுதரிய கலைநெகிழ ஆசை மெத்த வுந்தி*
*யினியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டந்த*
*இதழமுது பருகியுயிர் தேக மொத்தி ருந்து முனிவாறி*

3. *முருகுகமழ் மலரமளி மீதி னிற்பு - குந்து*
*முகவனச மலர்குவிய மோக முற்ற ழிந்து*
*மொழிபதற வசமழிய ஆசை யிற்க விழுந்து*
*விடும்போதும்*

4. *முழுதுணர வுடையமுது மாத வத்து யர்ந்த*
*பழுதில்மறை பயிலுவள னாத ரித்து நின்று*
*முநிவர்சுரர் தொழுதுருகு பாத பத்ம மென்று*
*மறவேனே*

5. *ஒருசிறுவன் மணமதுசெய் போதி லெய்த்து வந்து*
*கிழவடிவு கொடுமுடுகி வாச லிற்பு குந்து*
*உலகறிய இவனடிமை யாமெ னக்கொ ணர்ந்து*
*சபையூடே*

6. *ஒருபழைய சருகுமடி ஆவ ணத்தை யன்று*
*உரமொடவ னதுவலிய வேகி ழிக்க நின்று*
*உதறிமுறை யிடுபழைய வேத வித்தர் தந்த*
*சிறியோனே*

7. *அரியவுடு பததடவி யாட கச்சிலம்பொ*
*டழகுவட மணிமுடியாள மிட்டமுந்த*
*அமரரொடு பலர் முடுகி ஆழியைக் கடைந்து*
*அமுதாக*

8. *அருளுமரி திருமருக வாரணத்தையன்று*
*அறிவினுட னொருகொடியி லேதரித்துகந்த*
*அருணகிரி நகரிலெழு கோபுரத்தமர்ந்த பெருமாளே*

பாடலின் 5-வது அடியில் ஒரு சிறுவன் எனக்குறிப்பிட்டது சுந்தரரையே.

சிறுவன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். இவருடைய திருமண வாசலில் சிவபிரான் ஒரு கிழவேதியரின் வடிவங் கொண்டு வந்து, சுந்தரா! நீ என் அடிமை. எனது உத்திரவு இன்றி எப்படி மணஞ் செய்ய இருந்தாய். இதோ பார், உனது பாட்டனார் எழுதித் தந்த அடிமைச்சீட்டு எனக் கூறித் திருமணத்தை தடை செய்து நிறுத்தினார். இதனால் சுந்தரர் வெகுண்டு எழுந்து, ஏ! பித்தா! ஒரு அந்தணன் மற்றொரு அந்தணனுக்கு அடிமை ஆவதுண்டா எனக்கூறி, அந்த ஓலைச் சீட்டை பற்றிக் கிழித்தெறிந்தார்.

கிழவரோ, சிறிதும் மனம் தளராது, சுந்தரரை திருவெண்ணெய் நல்லூரிலுள்ள பஞ்சாயத்தார்களிடம் கொண்டு போய் நிறுத்தி, சுந்தரர் கிழித்தெறிந்தது நகல் ஓலையாகும் மூல ஓலையை சபையோரிடம் காட்டினார்.

சபையோர்கள், கையெழுத்தைப் பரிசோதித்து ஒற்றுமை கண்டதும், சுந்தரரை நோக்கி இவ்வோலையில் உள்ள கையெழுத்து உன் பாட்டனாருடையதே. நீ அடிமை புரிய வேண்டியதே ஏற்றது எனத் தீர்ப்பளித்தனர்.

பின்னர், கிழவேதியரை, உங்கள் வீடு, மனை, மக்கள் எங்கே என சுந்தரர் வினவ, வேதியரும் காட்டுவதாக ஒப்புக் கொண்டு, தான் முன் செல்லவும் சுந்தரர் முதலானோர், அவரை பின்பற்றி சென்றனர். வேதியரோ, திருக்கோவிலுனுள்ளே நுழைந்ததும் மறையலானார்.

சுந்தரருக்கு ஞானம் பிறந்தது. "என் அப்பனே! நீயே இவ்வேதியர் வடிவத்துடன் வந்து, தக்க தருணத்தில் தடுத்தாட் கொண்டாய்" எனக் கூறி விம்மி விம்மி, கண்ணீர் மல்கி வணங்கிய, அவருக்கு இறைவன் காட்சி தந்து, என்னைப் பித்தா என்றே பாடுக என அருளிச் செய்து மறைந்தார்.

சுந்தரருக்கு, சிவன் தோழனாய் இருந்தது போல, அருணகிரியார்க்கும் முருகப் பெருமான் தோழராய் விளங்கினார் என்பது அருணகிரியாரின் பாடலால் விளங்கும்.

வில்லிபுத்தூராரிடம் செய்த வாதிலும், சம்பந்தாண்டா னோடு செய்த வாதிலும் வெற்றி பெறச் செய்ததும், பெருத்தகாட்டில், வழிதவறி விழித்த போது, மகாடவியில் நிற்பதொர் சகாயக்காரனாய் உதவியதும், அபரிமித வித்தைகளும் அறியென இமைப்பொழுதில் வாழ்வித்து உதவியும், அருள் புரிந்த காரணத்தால், "நேயா" - "அமிர்த தோழா" எனப் பலவாறு மனங்குழைந்து உருகுகின்றார் அருணகிரியார்.

# 11. அருணகிரியார் வடமொழிச் சொற்கள் பயின்றவர்

அருணகிரியாரின் வாக்கு சாதுர்யத்திற்கு, இவரது பாடல்கள் பலவற்றிலும் சான்றாக விளங்குவதை காண முடிகிறது.

அருணகிரியார் பாடிய "இடையித்தனை" எனத் துவங்கும் பாடலில், வடமொழிச் சொற்களை, பேதமின்றி தமது பாடலில் பாடியுள்ளது இன்னாரது சமரஸ நோக்கை அறிய முடிகிறது. சந்தத்தைப் பொருத்தி தமிழ் பாக்களோடு பேதமின்றி அழகாக புனைந்து பாடியுள்ளது மிகவும் பாராட்டத்தக்கது.

*இடையிந்தனை யுளதத்தைய ரிதம்துய்ந்தவ ரநுபோகம்-*
*இளகிக்கரை புரளப்புள கிதகற்புர தனபாரம்;*

*உடன்மற்கடை படுதுற்குண மறநிற்குண வுணர்வாலே-*
*ஒருநிஷ்கள வடிவிற்புக வொருசற்றருள் புரிவாயே;*

*திடமற்றொளிர் நளினப்ரம சிறைபுக்கன னெனவேகுந்-*
*தெதிபட்சண க்ருதபட்சண செகபட்சண னெனவோதும்;*

*விடபட்சணர் திருமைத்துனன் வெருவச்சுரர் பகைமேல்வேல்-*
*விடுவிக்ரம கிரியெட்டையும் விழவெட்டிய பெருமாளே.*

இப்பாடலில், 6, 7-வது அடிகளில் பாடியுள்ளது போன்று ஏனையோரது தமிழ்கவிகளில், வடமொழி சொற்களை பொருத்தி பாடியுள்ளதாக காண இயலவில்லை.

5, 6 & 7-வது அடிகளின் கருத்தை நோக்கற்பாலது.

*"திடமற்றொளிர் நளினப்ரம்சிறை புக்கெனனெனவேகுந்*
*தெதிபட்சண, க்ருதபட்சண செகபட்சண னெனவோதும்*
*விடபட்சணர் திருமைந்தன்"*

**கருத்து :** அறிவின் திடமில்லாது விளங்கினவனும், தாமரையில் வீற்றிருப்பவனுமான பிரம்மன் அகப்பட்டுக் கொண்டான் என அறிந்து, சிவபிரானிடம் சென்றவரும்,

தயிர் உண்டவர், நெய் உண்டவர், உலகையுண்டவர் எனப் போற்றப்படுபவரும், விஷத்தை உண்ட சிவபிராற்கு அழகிய - மைந்தனே என்பதாகும். திருமாலை இவ்வாறு அழகாகப் புனைந்த அழகுக்கு இணை கூற முடியுமோ - இதனால் சொல்லின் செல்வர் என்பதற்கு இப்பாடலின் 6 & 7வது அடிகள் ஒரு நல்ல சான்று.

மற்றுமோர் பாடல் : திருச்செங்கோட்டு திருப்புகழ் "துஞ்சுக்கோட்டி" எனத்துவங்ககும் பாடலின் 3-வது அடியில்

*<u>தஞ்சம் வாய்த்திட் டவர்க்குங் கூட்டிக்</u>*
*<u>கன்று மேய்த்திட் டவர்க்குங் கூற்றைக்</u>*
*<u>கன்ற மாய்த்திட் டவர்க்குந் தோற்றக்</u> <u>கிடையாநீ</u>-*
*கண்டு வேட்டுப் பொருட்கொண் டாட்டத்*
*தின்ப வாக்யத் தெனக்குங் கேட்கத்*
*தந்து காத்துத் திருக்கண் சாத்தப் பெறுவேனோ;*

*வஞ்ச மாய்ப்புக் கொளிக்குஞ் சூற்கைத்*
*துன்று சூர்ப்பொட் டெழச்சென் றோட்டிப்*
*பண்டு வாட்குட் களிக்குந் தோட்கொத் துடையோனே-*
*வண்டு பாட்டுற் றிசைக்குந் தோட்டத்*
*தண்கு ராப்பொற் புரக்கும் பேற்றித்*
*தொண்டர் கூட்டத் திருக்குந் தோற்றத் திளையோனே;*

*கொஞ்சு வார்த்தைக் கிளித்தண் சேற்கட்*
*குன்ற வேட்டிச் சியைக்கண் காட்டிக்*
*கொண்டு வேட்டுப் புனப்பைங் காட்டிற் புணர்வோனே-*
*கொங்கு லாத்தித் தழைக்குங் காப்பொற்*
*கொண்ட லார்த்துச் சிறங்குங் காட்சிக்*
*கொங்கு நாட்டுத் திருச்செங்கோட்டுப் பெருமாளே-*

**இப்பாலின் 3-வது அடியின் கருத்து :**

**முருகன் பெருமையை, "மூவருக்கும் தோற்றக்<u>கிடையாநீ</u>" எனப் பொருள்படும்படி பாடியுள்ளதின் கருத்து.**

"*தாமரையில் வீற்றிருக்கும் பிரமனுக்கும், ஒன்று சேரச்*
*செய்து பசுவின் கன்றுகளை மேய்த்திட்ட திருமாலுக்கும்,*
*யமன் வாட்டமுற்றுமாயும் படிசெய்த*
*சிவபிரானுக்கும் காண்பதற்குக் கிடைக்காத நீ*"

என இணையிலா சொல்லழகுடன் அமைத்த சொற்பிரயோகம் ஆயிரம் கோடி பெறும்.

இதுபோன்று பல அரிய சொற்றொடர்களை அமைத்து பாடியதில் கைதேர்ந்த அருணகிரியாரை, சொல்லாமலே சொல்லிய திறம் படைத்தவர் என அறிய முடிகிறது.

திருப்புகழ் அருளி ஸ்ரீ அருணகிரிநாதர்

# 12. பூமியைச் சமநிலைச்செய்த வரலாறு

அருணகிரியார் பல தலங்களுக்கும் சென்று தரிசித்து, பாடாத பாடல்களே பெரும்பாலும் இரா. ஆனால் காஞ்சிக்குச் சென்று, திருப்புகழ்பாக்களை சந்தத்தோடு இசைத்து பாடிய போதிலும், ஏனைய தலங்களின் பாடல்களைக் காட்டிலும், சிறிது கடினமாகவே இருக்கும். பொருள் எளிதில் விளங்காது. அருணகிரியார் காஞ்சியை தரிசித்து வந்த நாளில், பார்வதி திருமணம் நினைவுக்கு வரவே, காஞ்சி தலத்து பாடல்களில், ஒரு பாடலாகிய "அயிலப்புக்கயல" எனத் துவங்கும் பாடலில், பார்வதி திருமணத்தின் போது நிகழ்ந்த வரலாற்றை அப்படியே நம் மனக்கண்முன் நிறுத்தியுள்ளார்.

*அயிலப்புக் கயலப்புத் தலைமெச்சுற் பலநச்சுக்*
*கணுரத்தைக் கனவெற்புத் தனமேகம்*
*அளகக்கொத் தெனவொப்பிப் புளுகிச்சொற் பலகற்பி*
*திளகிக்கற் புளநெக்குத் தடுமாறித்*

*துயில்விட்டுச் செயல்விட்டுத் துயர்வுற்றுக் கயர்வுற்றுத்*
*தொடியர்க்கிப் படியெய்த்துச் சுழலாதே*
*சுருதிப்பொற் பொருள் செக்கர்க் குரவிட்டுத் தமர்பற்றித்*
*தொழு செக்கைக் கழல்பற்றிப் பணிவேனோ*

*புயலத்தைக் குயிர்தத்தைக் கிளைபுக்குத் தொளைபச்சைப்*
*புனமுத்தைப் புணர்சித்ரப் புயவீரா*
*புரவிக்கொட் பிரதற்றத் திருள்திக்கிப் படிமட்கப்*
*புகல்பொற்குக் குடவெற்றிக் கொடியோனே.*

*கயிலச்சுத் தரதத்துச் சயிலத் துத் தரநிற்கக்*
*கரணிச்சித் தருள்கச்சிப் பதியோனே*

<u>உத்தரம் நிற்க அகத்தியர் உதவிய வரலாறு :</u>

**பார்வதி திருமணத்தின்போது இமயமலையில் கூடிய தேவர்கள், முனிவோர்கள் ஆகியோரின் பெருங்கூட்டத்தால்**

பூமியின் வடதிசை (இமயம் தாழ்ந்தது) தென்திசை உயர்ந்தது. அது சமயம் அங்கு குழுமியிருந்தோர்கள் அஞ்சினார்கள். சிவபிரான், அகத்தியரை நோக்கி, நீ உடனே தென் திசைக்கு ஏகுக. அங்ஙனமே அகத்தியரும் தென்திசை நோக்கிச் சென்று, பொதியமலையை அடையவும், வடதிசைக்கு நேர்ந்த ஆபத்து நீங்கி வடதிசையும் தென்திசையும் சமமான நிலைகளை அடைந்தன.

இதனைக் குறித்து,

*"தென்னாநண்ணி பொதியமலை மேவுதிவையமெல்லாம்*
*மேனாளெனவே நிகராகி விளங்கும் என்றான்"*
*பொதியமதென்னும் வெற்பிற் புனிதமாமுநிவன்வைகத்*
*துதியுமாறு வடபால் தென்பால் புவனியோர்*
*துலைபோல் ஒப்ப"*

- கந்தபுராணம் 1-10-53-64

இப்பாடலில் வரும் சித்தருள் கச்சிப் பதியோனே

சித்தா - உள் - கச்சி எனப்பிரித்து,

அகத்தியா் எனும் பெரியார் (உள்) தியானித்து வணங்கின காஞ்சி எனப் பொருள் கொள்ளல் வேண்டும்.



அகத்தியர்

# 13. இலங்கையை எரித்த வரலாறு

அருணகிரியார், தாம் இயற்றிய பாடல்களில் கூறப்படாத செய்திகளே பெரும்பாலும் இராது எனலாம். அதனடிப்படையில், இராமபிரான் சீதையை மீட்ட பின்னரே, இலங்கைக்கு அனுமன் வாயிலாக தீயிட சீதை உத்தரவிட்டார். அது சமயம், யார் யாருக்கு தீபற்றாவண்ணம் தடுத்து காப்பாற்றும்படியும் கூறியுள்ளதை, அருணகிரியார் "தலங்களில் வருங்கன" எனும் பாடலில், பட்டியலிட்டு அறிவித்துள்ளதை, தெளிவுற சந்தப்பாக்களால் பாடியுள்ளது மிகவும் புகழத்தக்கது. 'வாக்கிற்கு அருணகிரி' எனும் மூதுரைக்கு எடுத்துக்காட்டு, இந்த ஒரு அடியே போதும்.

*தலங்களில் வருங்கன இலங்கொடு மடந்தையர்*
*தழைந்தவு தரந்திகழ் தசமாதஞ்*
*சமைந்தனர் பிறந்தனர் கிடந்தன ரிருந்தனர்*
*தவழ்ந்தனர் நடந்தனர் சிலகாலந்*

*துலங்கு நலபெண்களை முயங்கினர் மயங்கினர்*
*தொடுந்தொழி லுடன் தம க்ரகபாரஞ்*
*சுமந்தன ரமைந்தனர் குறைந்தன ரிறந்தனர்*
*சுடும்பினை யெனும்பவ மொழியேனோ*

*இலங்கையி லிலங்கிய இலங்களு ளிலங்கரு*
*ளிலெங்கணு மிலங்கென முறையோதி*
*இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட*
*எழுந்தருள் முகுந்தனன் மருகோனே.*

*பெலங்கொடு விலங்கலு நலங்கஅ யில்கொண்டெறி*
*ப்ரசண்டக ரதண்டமிழ் வயலூரா*
*பெரும்பொழில் கரும்புக ளரம்பைகள் நிரம்பிய*
*பெருங்குடி மருங்குறை பெருமானே.*

இப்பாடலில் 5, 6-வது அடிகளில் கூறியுள்ளதைப் பார்ப்போம்.

இலங்கை நகரில் விளக்கமுற்றிருந்த வீடுகளுள், விளக்கமுற்ற அருள், அன்பு இல்லாத எவ்விடத்தும் ஏ! அக்னியே, நீ பற்றி எரிவாயாக எனக் கட்டளையிட்டு அல்லது நீதியை எடுத்துரைத்து, (கனல் இடும்) நெருப்பை வைத்த அனுமனோடு, பெரிய கடலும் நடுக்கம் கொள்ள எழுந்தருளின ராமபிரானது மருகனே. கண்ணகி மதுரைக்கு தீயிட்டபோதும், பார்ப்பார், அறவோர் பசுப்பத்தினிப் பெண்டினர், மூத்தோர், குழவி யெனுமிவரைக் கைவிட்டு தீத்திறத்தார் பக்கமே சேர்க - என சிலப்பதிகாரத்தில் (21-53) வந்துள்ளதை ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது.

# 14. வாமனாவதாரச் சிறப்பு

முருகனது திருவருளால் அன்றி, வேறோர் துணையுமின்றி வேதனைப்பட்ட அருணகிரியாருக்கு, முருகன் புகழையே பாடும் பணிக்கு அர்ப்பணித்துக் கொண்டதின் பயனே தமது திருப்புகழில் சமரஸ நோக்கத்தில், வாமனாவதாரத்தைக் குறித்து, காஞ்சி தலத்து திருப்புகழாகிய **"செறிதரும்செப்பத்"** எனும் பாடலில், 5-வது அடியில் ஒரேவரியில், சுருங்கச்சொல்லி விளக்கியுள்ளது, இவரது புலமைக்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.

*செறிதரும் செப்பத் துற்பல வெற்பும்*
*பிறிதுமங் கத்தைக் குற்ற விருப்பஞ்*
*சிகரிதுண் டிக்கக் கற்ற தனிச்செஞ் சுடர்வேலும்*
*திரள்புயங் கொத்துப் பட்ட வனைத்துந்*
*தெளியநெஞ் சத்துப் புற்று மயக்கம்*
*திகழ்ப்ரபஞ் சத்தைப் புற்புத மொக்கும் படிநாடும்;*

*அறிவறிந் தத்தற் கற்றது செப்புங்*
*கடவுளன் பத்தர்க் கச்சம றுத்தன்*
*பருள்மவன் பொற்புக் கச்சியுள் நிற்கும்*
*பெருமானென்-*
*றவிழுமுன் புற்றுக் கற்றும னத்தின்*
*செயலொழிந் தெட்டப் பட்டத னைச்சென்*
*றடைதரும் பக்வத் தைத்தமி யெற்கென்*
*றருள்வாயே.*

*<u>குறியவன்</u> செப்பப் பட்ட எவர்க்கும்*
*பெரியவன் கற்பிக் கப்படு சுக்ரன்*
*குலைகுலைந் துட்கச் சதய மிழற்றுஞ் சிறுபாலன்*
*குதலையின் சொற்குத் தர்க்க முரைக்குங்*
*கனகனங் கத்திற் குத்தி நிணச்செங்*
*குடர்பிடுங் கத்திக் குற்ற முகச்சிங் கமுராரி,*

*பொறிவிடுந் துத்திக் கட்செவி யிற்கண்*
*துயில்கொளுஞ் சக்ரக் கைக் கிரி சுத்தம்*
*புயலெனும் பொற்புப் பெற்ற நிறத்தன் ஜகதாதை*
*புனிதசங் கத்துக் கைத்தல நிர்த்தன்*
*பழையசந் தத்தைப் பெற்ற மடப்பெண்*
*புகலு கொண்டற்குச் சித்தி யளிக்கும் பெருமாளே*

5-வது அடியின் துவக்கத்தில் வரும் **குறியவன்** என்பதில் வாமனர் வரலாற்றை ஒரு பதத்திலேயே கோடிட்டு காட்டி உள்ளார் அருணகிரியார்.

**வரலாறு :** குறியவன் - வாமநர் - திருமாலின் ஐந்தாவது அவதாரம் என வைணவ நூல் கூறுகிறது. குறளுருவம் எடுத்தவன் சொல்லப்படும் எவரினும் பெரியவன் இவர் மாவலியின் செருக்கை அடக்க, அவனிடம் குள்ளமான (குறுகிய) உருவுடன் சென்று, மூவடிமண் வேண்டினர். அசுரகுரு சுக்கிரன் தடை சொல்லியும், உதாசீனப்படுத்திய மாவலி, திருமாலுக்கு மூவடி மண்ணைத்தானம் செய்து தாரைவார்க்கும் போது, சுக்கிரன் மனம் பொறாது, கமண்டலத்தினின்றும் நீர் விழாதவகை, சிறுவண்டுருவம் எடுத்து குண்டிகையிலிருந்து தடை செய்யலானார். நீர்வெளிவர தடைபட்டதைக் கண்ட வாமநர், தர்ப்பையால் நீர்த்தாரை வரும் துவாரத்தைக் குத்தலானார். அதனால் சுக்கிரன் ஒரு கண் பொட்டையாயினான் பின்பு வாமநர், நெடிய உருவம் (திருவிக்ரம ரூபம்) கொண்டு விண்ணுலகிலும், மண்ணுலகிலும் பாதங்களை பொருத்திவிட்டு, மூன்றாவது அடியை வைக்க வேறிடம் கேட்கவும், அந்த ஒரு அடியை மாவலி சிரத்தின் மேலேயே வைக்கலானார். அதனால் மாவலி பாதாளத்தில் அழுத்தி, அங்குச் சகல போகங்களையும் அனுபவிக்கும் வாய்ப்பினை பெற்றான்.

இத்தனை வரலாற்றுச் செய்திகளை அருணகிரியார் அறிந்திருப்பார் எனத் தெரிகிறது. ஒரே பதத்தில் இதன் விரிவை புகுத்தி பாடியுள்ளது மிகவும் அருமை. மேலும், இதே வரலாற்று

செய்திகளை திருவண்ணாமலை திருப்புகழ் பாடலாகிய **"குமரகுருபரகுணதர"** எனத்துவங்கும் பாடலின் 7-வது அடியில் மிகவும் விரிவாக கூறியுள்ளார் அருணகிரியார்.

பாடல் :- 7வது அடி

*"அமரர் பசிகெடவுதவிய க்ருபைமுகில்*
*அகில புவனமும் அளவிடு குறியவன்*
*அளவு நெடியவன் அளவிட அரியவன்"*

**கருத்து :** தேவர்களுடைய பசி நீங்க உதவின கிருபை வாய்ந்த மேகவண்ணன், எல்லா உலகங்களையும் அளக்கவல்ல வாமனன் (குட்டை வடிவினன்) உலகை அளந்தபோது நெட்டை (நீண்ட) வடிவினன், (அளவிட) மதித்து எண்ணுதற்கு அரியவன் - திருமால். மேலும், வாமனனுக்கு பெருமை சேர்க்கும் விதத்தினை கொண்டது இப்பாடல்.



வாமனாவதாரம்

# 15. இராமபிரான் - சுக்ரீவனுக்கு அறிவுரை கூறியது

அருணகிரியார், இராமாயணத்தில் கம்பருக்கு இருந்த 'ஆராய்ச்சி திறனை' படித்திருப்பார் என்று நினைக்கத் தோன்றுகிறது. இராமபிரான், இலக்குவன் வாயிலாக, சுக்ரீவனுக்கு அறிவுரைச் சொன்னதை அருணகிரியார், திருவானைக்கா திருப்புகழில் **"நிறைந்ததுப்பிதழ்"** எனத் துவங்கும் பாடலில் 5, 6-வது அடியில் சுருக்கமாக பாடி விளங்கவைத்தது, இவரது கவித்திறனும், சொல்லழகும் பாராட்டத்தக்கது.

*நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென*
*மறந்த ரித்தக ணாலால நேரென*
*நெடுஞ்சு ருட்குழல் ஜீமூத நேரெனநெஞ்சின்மேலே*
*நெருங்கு பொற்றன மாமேரு நேரென*
*மருங்கு நிட்கள ஆகாச நேரென*
*நிதம்ப முக்கணர் பூணார நேரென நைந்துசீவன்*

*குறைந்தி தப்பட வாய்பாடி யாதர*
*வழிந்த ழைத்தணை மேல்வீழு மாலொடு*
*குமண்டை யிட்டுடை சோராவி டாயில*
*மைந்துநாபி*
*குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்*
*மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய*
*குரங்கை யொத்துழல் வேனோம னோலய*
*மென்றுசேர்வேன்;*

*மறந்த சுக்ரிப மாநீசன் வாசலி*
*லிருந்து லுத்தநீ யோராத தேதுசொல்*
*மனங்க ளித்திட லாமோது ரோகித முன்புவாலி*

*வதஞ்செய் விக்ரம சீராம னானில*
*மறிந்த திச்சர மோகோ கெடாதினி*
*வரும்ப டிக்குரை யாய்பார் பலாகவ மென்றுபேசி;*

*அறந்த ழைத்தநு மானோடு மாகடல்*
*வரம்ப டைத்ததின் மேலேறி ராவண*
*னரண்கு லைத்தெதிர் போராடு நாரணன்*
*மைந்தனான.*

*அநங்கன் மைத்துனவேளே கலாபியின்*
*விளங்கு செய்ப்பதி வேலா யுதாவிய*
*னலங்கயப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.*

5, 6-வது அடிகளின் கருத்து : கார்காலம் (ஆவணி - புரட்டாசி) கழித்ததும் சேனையுடன் வந்து உதவுகின்றேன் என்று சுக்ரீவன் ஸ்ரீ ராமருக்கு வாக்கு தத்தம் செய்திருந்தான்.

தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றாது கள்ளுண்டு - சுக்ரீவன் காலம் கழித்தான்.

ஸ்ரீ ராமர் கோபங்கொண்டு, இலக்குமணரை நோக்கி சுக்ரீவன் சொன்னதை மறந்து தூங்குகின்றான். இன்று வரை வரக்காணோம். தருமநெறியை மறந்துவிட்டான் போலும். வாழ்வில் மயங்குகின்றான். நீ அவனிடம் சென்று, அவன் உள்ளத்தை அறிந்து வருவாயாக. தருமத்தை நிலை நிறுத்த நான் எடுத்துள்ள வில்லுண்டு, அம்பு உண்டு, காலனும் உண்டு என்று சொல், வானரப்பேரே அழிந்துபோகும் என்று சொல் எனக் கூறி அனுப்பினார். இத்தனை செய்திகளையும், இரண்டே அடியில் பொருத்தி பாடியுள்ளதை கீழ்வரும் கம்பராமாயண அடிகள் நன்கு காட்டுவனவாம் :

*அன்னகாலம் அகலும் அளவினில்*
*முன்னவீரன் இளவலை மொய்ம்பினோய்*
*சொன்ன எல்லையினூங்குமத் தூங்கிய*
*மன்னன் வந்திலன் என்செய்தவாறரோ*
*அறம் மறந்தனன் அன்புகிடைக்கதம்*

*மறனதிந்திலன் வாழ்வின் மயங்கினான்*
*இம்பர் நல்லறஞ் செய்ய எடுத்தவிற்*
*கொம்பும்உண்டு அம்பும் உண்டே என்று*
*சொல்லு நம் ஆணையே.*

*(கம்.ராமா. கிட்கிந்தை படலம் 1-4)*

கம்பரால் 10 வரிகளில் விளக்கப்பட்ட செய்தியை, அருணகிரியார் இரண்டே அடிகளில் சுருங்கச் சொல்லி விளங்கச் செய்தது, அருணகிரியாருக்கே கைவந்தகலை.



**இராமர் சுக்ரீவனுக்கு அறிவுரை கூறியது**

# 16. திருப்புகழில் - இராமாவதாரம்

"ஆலகால படப்பை" எனத்துவங்கும் திருச்செங்கோட்டு திருப்புகழ் பாடலின் பின்பகுதியின் அடிகளால் இராமாயணச் சுருக்கத்தை, சந்தப்பாக்களால் சுருங்கச் சொல்லி விளக்கியுள் ளதை சிறிது ஆராய்வோம்.

*ஆல காலப டப்பைம டப்பியர்*
*ஈர வாளற வெற்றும்வி ழிச்சியர்*
*யாவ ராயினு நத்திய ழைப்பவர் தெருவூடே-*
*ஆடி யாடிந டப்பதொர் பிச்சியர்*
*பேசி யாசைகொ டுத்தும ருட்டிகள்*
*ஆசை வீசிய ணைக்குமுலைச்சியர் பலரூடே-*

*மாலை யோதிவி ரித்துமு டிப்பவர்*
*சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்*
*வாசம் வீசுமணத்தில்மி னுக்கிகள் உறவாலே-*
*மாயை யூடுவி ழுத்திய ழுத்திகள்*
*காம போகவி னைக்குழு னைப்பணி*
*வாழ்வி லாமல்ம லச்சன னத்தினி லுழல்வேனோ-*

*மேலை வானொரு ரைத் தச ரற்கொரு*
*பால னாகியு தித்தொர்மு நிக்கொரு*
*வேள்வி காவல்ந டத்திய கற்குரு அடியாலே*
*மேவி யேமிதி லைச் சிலை செற்றுமின்*
*மாது தோள்தழு விப்பதி புக்கிட*
*வேறு தாயட விக்குள் விடுத்த பினவனோடே-*

*ஞால மாதொடு புக்கவ னத்தினில்*
*வாழும் வாலிப டக்கணை தொட்டவ*
*னாடி ராவண னைச்செகு வித்தவன் மருகோனே-*
*ஞான தேசிக சற்குரு உத்தம*
*வேல வாநெரு வைப்பதி வித்தக*
*நாக மாமலை சொற்பெற நிற்பதொர் பெருமாளே-*

பாடலின் பின்பகுதியில் 5, 6 & 7 - அடிகளின் கருத்தைப் பார்ப்போம்.

தேவர்களின் வேண்டுகோளால், கைகேயியை தேர் ஓட்டச் சொல்லி, சம்பரன் எனும் அரக்கனைக் கொன்ற பெருமைக் குரியவரான தசரதனுக்கு ஒருமதலையாய் பிறந்து, ஒப்பற்ற விசுவாமித்திரர் செய்த வேள்விக்கு காவல் புரிந்து, வேள்வியை நிறைவேறச் செய்து, சாபம் பெற்று கல்லாயிருந்த அகலிகையின் மேல் ராமபிரானது திருவடிப் பட்டு சாபம் நீங்கப் பெற்று தன் சுய உருவோடு விளங்கச் செய்து, மிதிலாபுரியில் யாவராலும் முறிக்கப்படாத வில்லை முறித்து, மிக்க அழகுப் பொலிவோடு விளங்கிய சீதாதேவியின் தோளைத் தழுவி மணம் புரிந்த கோலத்தோடு அயோத்தி வந்து சேர்ந்த இராமபிரானின் மாற்றந் தாயான கைகேயி, காட்டுக்குப் போகும்படி செய்து, தம்பி இலக்குவனோடு, சீதாதேவியுடன் புறப்பட்டுச் சென்று, வழியில் காட்டுமலைப் பகுதியில் வாழ்ந்து வந்த வாலி இறக்கும்படி அம்பை எய்தியதோடு, இருக்கும் இடம் தேடி இராவணனை அழித்தவனுமான ஸ்ரீ இராமபிரானது மருமகனாம் - முருகனே - என மேற்கூறிய அத்தனைச் செய்திகளையும், பாடலில் 5, 6 & 7 - அடிகளில் பொருத்தி பாடியுள்ளது போன்று, வேறு எந்தப் புலவர்களும் பாடல்கள் புனைந்துள்ளதாக காணவில்லை.

மேலும் பாட்டின் 5-வது அடியின் இறுதியில் அகற்குருஅடியாலே எனும் சொல்பிரயோகம் மிகவும் ஆராய்ச்சிக்குரியது.

அ - கற்கு - உரு - அடியாலே - மேவி எனப்பிரித்து பொருள் கொள்ளல் வேண்டும்.

இதன் வரலாற்றை மேலும் விரிவாக நோக்கின், கல்உரு எய்திய வரலாறு - என்று பாடினதில் உள்ள வரலாற்று செய்தியைப் பார்ப்போம்.

கௌதம முனிவரின் மனைவி அகலிகையை சேர எண்ணின இந்திரன், முனிவர் இல்லாத சமயம் பார்த்து முனிவர் உருவம் தாங்கி அவளைச் சேர எண்ணி அவளிடம் நெருங்கிய தருணத்தில், கணவன் இதனைக் கண்டதும், இந்திரன் உடலில் 1000 பெண் குறிசேரவும், அகலிகை கல்லாகவும் சாபமிட்டார்.

தவறையுணர்ந்த அகலிகை, கணவரிடமே சாபவிமோசனம் வேண்ட, ஸ்ரீ ராமபிரானது காலின் தூசிப்பட்டதும், உன் சாபம் நிவர்த்தியாகும் எனக் கூறினார்.

மிதிலைக்கு செல்லும் தருணத்தில் ஸ்ரீ ராமபிரான் அவருடைய பாதங்கள், கல்லாக இருந்த அகலிகையின் மேல் படவும், மீண்டும் பெண்ணுருவைப் பெற்றாள். இத்தனைச் செய்திகளையும், "கல் உருஎய்திய" எனும் வாக்கினால் அறியச் செய்தது, அருணகிரியாரை "வாக்கிற்கு அருணகிரி" எனப் பாராட்டுவதோடு, "சொல்லின் செல்வர்" எனவும் பாராட்டலாமே.

இதே அகலிகை வரலாற்றுச் செய்தி,

*"அஞ்ன வண்ணத்தான் தன் அடித்துகள் கதுவா முன்னம்,*
*வஞ்சிபோலிடையாள் முன்னை வண்ணத்தளாகி நின்றாள்"*

என செய்யுளை நீட்டி, கம்பர் அகலிகை - 85 சருக்கத்தில் பாடியுள்ளதை நோக்கின், அருணகிரியார் இதே வரலாற்றுச் செய்தியை "அகற்குரு அடியாலே" எனும் சொல்லிலேயே புகுத்தி பாடியுள்ளது, இவரது சொல்வன்மையை அறிய முடிகிறது.

அகற்குருஅடியாலே - என்பதை
அ - கற்கு - உரு - அடியாலே எனப்பிரித்து பதவுரை கொள்ள வேண்டும்.



அகல்யை சாபம் தீர்ந்தது

# 17. போதனை நீதியற்ற வேதன்

அருணகிரியார் தாம் பாடிய பாடல்களில் எல்லா மூர்த்தங்களையும் பெருமை சேர்த்து பாடியுள்ளது யாவரும் அறிந்தே இருப்பினும், பிரம்மாவை மட்டும் புகழாது போயினும், சாடுவதில் தவறியதில்லை.

1. பிரம்மா தாம் காதலித்த திலோத்தமையை காதலித்தது.

2. பிரம்மா எழுதிய தலை எழுத்து, செந்தூர் முருகனின் கால் பட்டழிந்தது எனக் தரக்குறைவாக, கந்தர் அலங்காரப் பாடலின் மூலம் அறிய முடிகிறது.

கந்தர் அலங்காரம் :

*"சேல்பட்டழிந்தது செந்தூர்வயற்பொழில் தேங்கடம்பின்*
*மால்பட்டழிந்தது பூங்கொடியார் மனம், மாமயிலோன்*
*வேல்பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் அவன்*
*கால்பட்டழிந்தது இங்குஎன் தலைமேல் அயன்கையெழுத்தே"*

என்பதிலிருந்து அறிய முடிகிறது.

3. செங்கோட்டு வேலனை தரிசித்ததும், அருணகிரியார் கந்தர் அலங்காரப் பாடலின் மூலம் பிரம்மாவை சாடியுள்ளது அறிய முடிகிறது. பாடலைப்பார்ப்போம்.

*"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை, வானவர்க்கு*
*மேலானதேவனை, மெய்ஞ்ஞான தெய்வத்தை, மேதினியிற்*
*சேலார்வயற் பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ*
*நாலாயிரம் கண்படைத்திலனே அந்தநான்முகனே"*

4. திருத்தணியில் வீற்றிருக்கும் முருகனது அழகைக் காண, கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றமென்? என கந்தரலங்காரப் பாடலின் மூலம் குறைபட்டு கொண்டதைப் பார்க்க முடிகிறது. கந்தர் அலங்காரப் பாடல்

*"கோடாதவேதனுக்கு யான்செய்த குற்றமென், குன்றெறிந்த*
*தாடாளனே, தென்தணிகைக்குமர, நின்தண்டையந்தாள்*

*சூடாத சென்னியும், நாடாதகண்ணும் தொழாத கையும்*
*பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே"*

அதனால், "போதனை (பிரமாவை) நீதியற்ற வேதன்" எனத் தரக்குறைவாக, மேலும் திருவருணைத் திருப்புகழ் "தேனெனவாச" எனும் பாடலில் 3-வது அடியில் பாடியுள்ளது நோக்கற்பாலது.

*தேதென வாச முற்ற கீதவி நோத மெச்சு*
*தேனளி சூழ மொய்த்த மலராலே*
*சீறும ராவெ யிற்றி லூறிய காளம் விட்ட*
*சீத நிலாவெ றிக்கு மணலாலே*

*<u>போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட</u>*
*போர்மத ராஜ னுக்கு மழியாதே*
*போக மெலாநி றைத்து மோக விடாய்மி குத்த*
*பூவையை நீயணைக்க வரவேணும்*

*மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை*
*மாயனு மாதரிக்கு மயில்வீரா*
*வானவர் சேனை முற்றும் வாழம ராப திக்குள்*
*வாரண மான தத்தை மணவாளா*

*மேதினி யோர்த மைக்க வேயரு ணாச லத்து*
*வீதியின் மேவி நிற்கு முருகோனே*
*மேருவை நீறெழுப்பி நான் முகனார் பதத்தில்*
*வேலடையாளமிட்ட பெருமாளே.*

பாடலின் 3-வது அடியின் கருத்து :

முன்னர் கூறிய காரணங்கள் தவிர, இந்தப் பாடலில் கூறிய கருத்தை ஆராய்வது அவசியம்.

இனி, நீதியற்ற வேதன் என்பதற்கு வேறு காரணத்தைப் பற்றி இப்பாடல் அறிவிக்கிறது.

முருகப் பெருமான் - சூரனை சங்கரித்துத் தேவர்களைக் காத்துத் தேவசேனையை திருப்பரங்குன்றத்தில் மணந்த பின்னர்,

"நமக்கு வெற்றியை தந்தது இவ்வேல்தான்" என்றார் முருகப்பெருமான். அது சமயம் அருகிருந்த பிரமன் இதனை ஏற்று புகழ்ந்திருந்தால், இவனது மதிப்பு மேலும் சிறப்புற்றிருக்கும். அதைத் தவிர்த்து, நான் தான் எனும் அகங்காரத்தால், இவ்வேலிற்கு இந்த சக்தி என்னால் தான் வந்ததல்லவா? என நீதியற்ற கருத்தைக் கூறலானான்.

இக்கடுஞ்சொற்களைக் கேட்ட முருகவேள் தம் கையில் இருக்கும் வேலுக்கு, நீர் கொடுப்பதற்கு ஒரு சக்தி உண்டோ எனக் கூறிக் கோபித்து, இவ்வாறு கூறிய நீர் மண்ணிடைச் செல்வாய் எனச் சாபமிட்டார் (திருமுருகாற்றுப்படை - 163-165)

போதனை நீதியற்ற வேதன் - என்பதற்கு போதனை அதாவது (ஞானமும்) நீதியும் அற்றபிரமன் எனவும் பொருள் கொள்ள இடமளிக்கிறது.

இதுபோன்ற அரிய வரலாற்றினை அருணகிரியார் திருப்புகழ் பாக்களில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளதை காணலாம்.



நீதியற்ற வேதன்

# 18. திசைமுகன், முராரி

அருணகிரியார், திருவண்ணாமலையில் முருகப் பெருமானால், தடுத்தாட் கொள்ளப்பட்டதும், சந்தப்பாக்களாக எண்ணில பாடியருளினார் என்பது ஆன்றோர்கள் கருத்து.

சந்தப்பாக்களில் ஒன்றாகிய, 'முழுகிவடவாமுகத்தி' எனும் பாடலில் கடைசி அடியாகிய எட்டாவது அடியில் பாடியுள்ளதின் கருத்து.

*முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேபி றக்கு*
*முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்*
*மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கு*
*முதியமத ராஜ னுக்கு மழியாதே*

*புழுகுதிகழ் நீப மத்தி வழகியகு ராநி ரைத்த*
*புதுமையினி லாறி ரட்டிப் புயமீதே-*
*புணரும்வகை தானி னைத்த துணரும்வகை நீலசித்ர*
*பொருமயிலி லேறி நித்தம் வரவேணும்;*

*எழுமள வாவி சுற்று பொழிலருணை மாநகர்க்கு*
*ளெழுதரிய கோபு ரத்தி லுறைவோனே-*
*இடைதுவள வேடு வச்சி படமசைய வேக னத்த*
*இளமுலைவி டாத சித்ர மணிமார்பா;*

*செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த*
*சிவனைமுத லோது வித்த குருநாதா*
*திசைமுகன்மு ராரி மற்று மரியபல வேத ருற்ற*
*சிறையடைய மீள விட்ட பெருமாளே.*

எட்டாவது அடியில்,

*திசைமுகன்மு ராரி மற்று மரியபல தேவ ருற்ற*
*சிறையடைய மீள விட்ட பெருமாளே.*

பிரமனுக்கு திசைமுகன் எனும் பெயர், அருணகிரியாரது பாடலில் வந்துள்ள வரலாற்று செய்தி சிந்திக்கற்பாலது.

திசைமுகன் - நான்முகன் - பிரமன் :-

தான்படைத்த திலோத்தமையைக் கண்டு, பிரமன் காதல் கொண்டு, அவளை நோக்கலானான். இதனை அறிந்த திலோத்தமை, வேறோர் திசைக்குச் செல்லலானாள். அவள் மேல் மோகம் கொண்டதால், அத்திசைப்பக்கம் தனக்கு ஒரு முகத்தை படைத்துக் கொண்டான். இவ்வாறு அவள் 4 திசைகளிலும் செல்லவே, அவளைப் பார்க்கப் பிரமனும் நான்கு திசை பக்கங்களுக்கும் முகங்களை படைத்துக் கொண்டான். அதனால் அன்று தொட்டு, பிரமன் திசைமுகன் ஆயினன்.

அடுத்து முராரி எனும் பெயர் வழங்கியதைப் பற்றிய வரலாற்றுச் செய்தியை, அருணகிரியார் விளக்கியுள்ளதை அன்னாரது பாடல் மூலம் அறியக் கிடைக்கிறது.

முராரி - முரன் என்னும் அசுரனுக்கு பகையாய் நின்று அவனை அழித்த திருமால். முரன், நரகாசுரனுடைய சேனாபதியும், மந்திரியும் ஆவான். இவன் கோட்டையை காத்துக் கொண்டிருந்த போது, கண்ணனால் கொல்லப்பட்டான். முரன் என்னும் அசுரனை அழித்ததால் முராரி எனும் திருநாமம் வழங்கலாயின. இவ்விரு வரலாற்றினை, பெயரளவில் அருணகிரியார் குறித்துப் பாடிய பாட்டின் கடைசி அடியில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது மிகவும் சிறப்பாகும்.



திசைமுகன் முராரி

# 19. பரமன் பார்த்தனுக்கு அருளிய பாசுபதாஸ்திரம்

அருணகிரியார், இராமாயணம், பாரதம் போன்ற நூல்களை படித்திருப்பார் என்பது இவரது பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. அர்ஜுனன் வில்லால் சிவன் அடிபட்டதைக் குறித்து சிறிதும் துவேஷ மனப்பான்மையின்றி பாடியுள்ளது மிகவும் ஏற்கத்தக்கது. இதனை விளக்கும் மாடம்பாக்கம் தலத்திருப்புகழ் "விலையறுக்கவும்" எனத்துவங்கும் பாடலில் 5-வது அடி ஒன்றிலேயே அர்ஜுனன் பற்றிய ஒரு பகுதியை குறித்து விளக்கப்பட்டுள்ளது.

பாடலின் 5வது அடியில் அதன் கருத்தையும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

*கலைநெ கிழ்க்கவு மயல்வி ளைக்கவு*
*நயங்கொண் டங்கி ருந்தே*
*குணுகி யிட்டுள பொருள்ப றித்தற*
*முனிந்தங் கொன்று கண்டே*
*கலக மிட்டவ ரகல டித்தபின்*
*வரும்பங் கங்கு ணங்கோர் புதியபே ருடனே*

*கதைகள் செப்பவும் வலச மர்த்திகள்*
*குணங்கண் டுந்து ளங்கா*
*மனித னிற்சிறு பொழுது முற்றுற*
*நினைந்துங் கண்டு கந்தே*
*கடிம லர்ப்பத மணுகு தற்கறி*
*விலன் பொங்கும்பெ ரும்பா தகனையாளுவையோ*

பாடலின் 5-வது அடி :

*சிலைத னைக்கொடு மிகஅ டித்திட*
*மனந்தந் தந்+த ணைந்தா*

*மரைமலர்ப்பிர மனைந டுத்தலை*
*யரிந்துங் கொண்டி ரந்தே*
*திரிபு ரத்தெரி புகந கைத்தருள்*
*சிவன்பங் கங்கி ருந்தா ளருளுமோ முருகா*

*செருவிடத் தலகைகள் தெனத்தென*
*தெனந்தெத் தெந்தெனந்தா*
*என இடக்கைகள் மணிகணப்பறை*
*டிகுண்டிங் குண்டி குண்டா*
*டிகுகு டிக்குகு டிகுகு டிக்குகு*
*டிகுண்டிங் குண்டி குண்டீயென இராவணனீள்*

*மலையெனத்திகழ் முடிகள் பத்தையும்*
*இரண்டஞ் சொன்ப தொன்றேய்*
*பணைபுயத்யையு மொருவகைப்பட*
*வெகுண்டம் பொன்றெறிந்தோன்*
*மதலை மைத்துன அசுரரைக்குடல்*
*திறந்தங்கம் பிளந்தே மயிலின்மேல் வருவாய்*

*வயல்களிற் கயலின மிகுத்தெழு*
*வரம்பின் கண்புரண்டே*
*பெருகயற்கொடு சொரியுநித்தில*
*நிறைந்தெங் குஞ்சிறந்தே*
*வரிசை பெற்றுயர் %தமனியப்பதி*
*யிடங்கொண்டின் புறுஞ்சீர் இளையநாயகனே*

(% தமனியப்பதி - என்பது மாடம்பாக்கம்)

<u>அர்ச்சுனனுடைய வில்லால் சிவன் அடிபட்டது</u>

தவம் செய்து கொண்டிருந்த அருச்சுனனைக் கொல்ல துரியோதனனுடைய ஏவலின்படி மூகாசுரன் என்ற அசுரன் பன்றி ரூபமாய் அருச்சுனனிடம் வந்தான். அது சமயம் சிவபிரான் வேடனாக வந்து பாணம் செலுத்தி, அந்த பன்றியைக் கொன்றார். அருச்சுனனும் அதே பன்றியின் மீது அம்பை எய்தினான்.

முன்னதாக, ஒருவர் அம்பு விட்டிருக்கும் போது, நீ ஒரு அம்பைச் செலுத்தினது முறையன்று என்று வேடனுடன் வந்தவர்கள் உரைக்கலாயினர். இதனால் வாதம் ஏற்படலாயிற்று.

அடுத்து விஜயன் (அர்ஜுனன்) வேடனோடு வில்யுத்தம், மல்யுத்தம் புரியலானான். கடைசியில் அர்ஜுனன் வில் முறிபட்டது. இதனால் கோபமடைந்த அர்ச்சுனன் முறிபட்ட வில்லால் வேடனை முடிமீது அடித்தான். அந்த அடி பிரமன், திருமால் முதலிய யாவர் மீதும் பட்டது. மற்போரில் விஜயனை வேடன் தனது பாத மலரால் உந்தி விண்ணில் எறிந்தான். கீழே விழும் அர்ச்சுனனுக்கு இறைவன் காட்சி தர, அவன் வணங்கி நின்றான். இறைவனும் அர்ச்சுனனுக்கு பாசுபதாஸ்திரம் முதலிய தந்து மறைந்தருளினார்.

'நின்னுடன் அமர் செய்து நின்வில் நாணறுத்தநெடு-வில்லினால் அடியும் உண்டான்' (வில்லிபாரதம் அர்ச்சுனன் தவம் - 27.)

இப்பாடலில் + இக்குறியிட்டுள்ள பதம் "அந்தணன் தா" எனும் பதம் அந்தணந்தா எனச் சந்தம் நோக்கி மருவிற்று. இனி, அம் - தண் - அம் தாமரை எனப்பிரித்து, அழகிய குளிர்ந்த நீரில் தோன்றும் தாமரை எனலுமாம் (அம் - அழகுநீர்)

அதே போன்று @ எனக்குறியிட்டுள்ளதின் கருத்து, பிரமன் நடுத்தலையை அரிந்தது எனக் கொள்ளவும். பிரமன் தலையில் பலி ஏற்பது - வயிரவக்கடவுள் பிரமனது அறுபட்ட தலையை கையில் ஏந்தி முனிவர், தேவர், திருமால் முதலியோரிடம் சென்று இரத்த பிச்சை வாங்கி அவரவர் ஆணவத்தை அடக்கினர்.



அர்ஜுனன் தவம் செய்து, பாசுபதம் பெற்றது.

# 20. திருவானைக்கா வரலாறு

அருணகிரியார், 'உரைக்காரிக்கை' எனத் துவங்கும் திருவானைக்கா திருப்புகழில் 7-வது அடியின் இறுதியிலும் 8-வது அடியிலும் திருவானைக்கா தலத்து பெருமையைப் பற்றி ஒரே வரியில் சுருங்கச் சொல்லி பாடியுள்ளது, இவரது கவித் திறமையும், சந்தத்தோடு பொருத்தி பாடியுள்ளது மிகவும் அற்புதம் எனலாம். திருப்புகழ் பாடல் :

*உரைக்கா ரிகைப்பா லெனக்கே முதற்பே*
*ருனக்கோ மடற்கோவை யொன்றுபாட*
*உழப்பா திபக்கோ டெழுத்தா ணியைத்தே*
*டுனைப்பாரி லொப்பார்கள் கண்டிலேன்யான்*

*குரைக்கான வித்யா கவிப்பூ பருக்கே*
*குடிக்காண் முடிப்போடு கொண்டுவாபொன்*
*குலப்பூ ணிரத்நா திபொற்றூ செடுப்பா*
*யெனக்கூ றிடர்ப்பாடின் மங்குவேனோ*

*அரைக்காடை சுற்றார் தமிழ்க்கூட லிற்போம்*
*அனற்கோ புனற்கேவ ரைந்தஏடிட்*
*டறத்தா யெனப்பேர் படைத்தாய் புனற்சே*
*லறப்பாய் வயற்கீழ மர்ந்தவேளே*

*திரைக்கா விரிக்கே கரைக்கா னகத்தே*
*சிவத்யான முற்றோர் ...... சிலந்திநூல்செய்*
*திருக்கா வணத்தே யிருப்பா ரருட்கூர்*
*திருச்சால கச்சோதி தம்பிரானே*

பாடலின் 7-வது அடியின் இறுதி

*"சிலந்தி நூல் செய்*
*திருக்காவணத்தே யிருப்பாரருட்கூர்*

*திருச்சாலகச்சோதி - தம்பிரானே"*

**வரலாறு :** சிலந்தி நூல் செய் திருக்காவணம் திருவானைக்கா ஒரு சமயம் புட்பவந்தன், மாலியவான் எனும் இருகண நாதர்கள் சிவபக்தியினால் பொறாமை கொண்டனர். ஒருவர்க்கொருவர் சினம் கொண்டு, தம்மைத் தாமே சபித்து, சிலந்தியாகவும், ஆனையாகவும் உருவெடுத்தனர். புட்பவந்தன் வெள்ளை யானை உருக்கொண்டவன். மாலியவான் சிலந்தி உருக் கொண்டான். வெள்ளை யானை, வெண்ணாவல் மரத்தின் கீழ் வீற்றிருக்கும் இறைவனைக் கண்டு மகிழ்ந்து பூஜித்து வரலாயிற்று.

சிலந்தியும் அதே இறைவனைத் தொழுது, எவ்வித கெடுதியும் அசுத்தமும் ஏற்படாது, தன் வாய் நூலால் பந்தலிட்டு வணங்கி வரலாயிற்று. சிலந்தி வலையைக் கண்ட யானை மிகவும் வருந்தி அந்த அநாசாரத்தை அழித்தது. சுத்தம் செய்து பூஜை செய்து வரலாயிற்று.

சிவனுக்கு தான் அமைத்த வலையை சிதைந்துள்ளதைக் கண்ட சிலந்தி வருந்தியது. இச்செயலை செய்தது யார் என பார்த்துக் கொண்டிருக்கும் வேளையில், யானை வந்து வழக்கம் போல் வலையை துதிக்கையால் அழித்து பூஜை செய்யும் சமயம், சிலந்தி கோபம் கொண்டு யானையின் தும்பிக்கை துவாரத்தில் புகுந்தது குடைந்தது. யானை வலி தாங்காது துதிக்கையை நிலத்தில் அடித்து மாண்டது. அத்துடன் துதிக்கை துவாரத்தில் நுழைந்த சிலந்தியும் வெளியே வர இயலாது இறந்தது. இறந்த யானையே சிவகணநாதன் ஆயிற்று. இறந்த சிலந்தி சோழர் குலத்தில் பிறந்து கோச்செங்கட்சோழன் எனும் பெயர் பெற்றது.

போது காலத்துக்குப் பின்னே பிறந்த காரணத்தால் செங்கண் பெற்று 'கோச் செங்கணான்' ஆனான். 63 நாயன்மார்களில் ஒருவராக திகழலானார். இவர் பூர்வீக வாசனை காரணத்தால், யானை புகாத வண்ணம் மாடக் கோயில் பல நிறுவினான்.

*"எண்டோள் ஈசற்கு எழில்மாடம் எழுபதுசெய்து*
*உலகம் ஆண்ட திருக்குலத்து வளச்சோழன்"*

(6-6-8 பெரிய திருமொழி)

*"புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால் பொதுப்
பந்தர் அது இழைத்துச் சருகால் மேய்ந்த சித்தியினால்
அரசாண்டு சிறப்புச் செய்ய சிவகணத்து புகுப் பெய்தார்;
திறலால் மிக்க வித்தகத்தால் வெள்ளானை விள்ளஅன்பு
விரவியா கண்டதற்கு வீடுகாட்டி பக்தர்களுக்கின்னமுதாம்
பாசூர்மேய, பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே"*

(அப்பர் தேவாரம் - 6-83-6)

மேலும் மற்றோர் அப்பர் பாடலில்,

*"சிலந்தியும் ஆணைக்காவிற் திருநிழற் பந்தர்செய்து
உலகந்தவன் இறந்தபோதே கோச் செங்கணானுமாகக்
கலந்தநீர் காவிரிசூழ் சோணாட்டு சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித்திட்டார், குறுக்கை வீரட்டனாரே"*

பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

யானை பூஜித்து அருள் பெற்ற காரணத்தால் ஆனைக்கா என ஆயிற்று.

*"செறிகவுட் கடாத்த ஆனைக்கு ஆரருள் புரிதலின்
ஆனைக்கா ஆயிற்று"*

திருவானைக்கா புராணம் கூறுகிறது.



திருவானைக்கா திருக்கோயிலின் வரலாற்று நிகழ்ச்சிகள்

# 21. கச்சியப்பரைப் பற்றிய செய்தி

அருணகிரியாரின் புலமைக்கும், கவித்திறனுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக அமைந்த திருப்புகழ் :

*வாய்ந்தபிடை நீடு குலாவிய*
*நீந்திப்பது மாதியை மீதினி*
*லூர்ந்துற்பல வோடையில் நீடிய உகள்சேலை*
*வார்ந்துப்பக ழீயேதி ராகிமை*
*கூர்ந்துப்பரி யாவரி சேரவை*
*சேர்ந்துக்குழை யோடுச லாடிய விழியாலே*

*சாய்ந்துப் பனை யூணவ ரானபொ*
*லாய்ந்துப் பாணி னாரிரு தாளினில்*
*வீழ்ந்திப்படி மீதினி லேசிறி தறிவாலே*
*சாந்தப்பிய மாமலை நேர்முலை*
*சேர்ந்துப்படி வீணினி லேயுயிர்*
*மாய்ந்திப்படி போகினு மோர்மொழி மறவேனே*

*சார்ந்தப்பெரு நீர்வெள மாகவே*
*பாய்ந்தப்பொழு தாருமி லாமலெ*
*காந்தப்பெரு நாதனு மாகிய மதராலே*
*தாந்தக்கிட தாகிட தாகிட*
*தோந்திக்கிட தோதிமி தோதிமி*
*சேஞ்செக்கண சேகெண சேகெண வெனதாளம்*

*காந்தப்பத மாறியு லாவுய*
*ராந்தற்குரு நாதனு மாகியே*
*போந்தப்பெரு மானமுரு காவொரு பெரியோனே*
*காந்தக் கலு மூசியு மேயென*
*ஆய்ந்துத்தமி ழோதிய சீர்பெறு*
*காஞ்சிப்பதி மாநகர் மேவிய பெருமாளே*

இப்பாடலின் கடைசி அடியினால் கச்சியப்பரைப் பற்றி அறிய முடிகிறது.

*"காந்தக்க லுமுசியுமேயென*
*ஆய்த்துத்தமிழோதிய சீர்பெறு*
*காஞ்சிப்பதி மாநகர் மேவிய - பெருமாளே"*

காஞ்சி குமரகோட்டத்து அருச்சகர் கச்சியப்பசிவாச்சாரியார் தாம் பாடிய கந்தபுராணப் பகுதியைத் தினம், தினம் அர்த்தஜாமம் ஆனபின், முருகனது திருவடிக் கீழ் வைப்பது வழக்கம். மறுநாள் காலையில் அதில் திருத்தங்கள் காணப்படுவதை பார்க்கலானார்.

ஆதலால், "காந்தக்கலும் ஊசியுமே" என ஆய்ந்து "தமிழ் ஓதிய சீர்பெறு காஞ்சிப்பதி" என்பது கந்தபுராணத்தை அதன் ஆசிரியரது அன்புக்கு இரங்கி முருகவேள் அப்போதைக்கப்போது பார்த்துத் திருத்திக் கொடுத்த கருணையின் பேற்றைக் குறிக்கும் போலும்.

அங்ஙனமாயின், அருணகிரியாரின் காலம் கச்சியப்ப சிவாச்சாரியாரின் காலத்துக்குப் பிற்பட்டதாகும். சைவ சித்தாந்த மகா சமாஜத் திருப்புகழ் பதிப்பிலேயும் பாடல் 525-ல் "குதலைமொழினார்" 793-வது பாடலில் "தித்தித்த மொழிச்சிகள்" என கச்சியப்பசிவாச்சாரியாரை பற்றி வந்துள்ளதையும் கவனிக்கற்பாலது.

# 22. கச்சபேசர் தல வரலாறு

பூவுலகில் மக்கள் பேரின்பநிலை அடைய இறைவனை காதலால் கசிந்து பாடி வழிபடுதல் இயல்பு. இதனைக் கருத்தில் கொண்டே, திருமால், தேவர்கள், முனிவர்கள் யாவரும் இறைவனை வழிப்பட்டதலங்களில், காஞ்சியிலுள்ள கச்சபேஸ்வரர் ஆலயமும் ஒன்றாகும்.

இவ்வாலயத்து மதிலுக்குள் இரு சிவாலயம் உள்ளடக்கிய பெருமையும் இதற்குண்டு.

இத்தலம் 7-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட தண்டி அலங்காரம் எனம் இலக்கண நூலில்

*"நீல மணியிடற்றன் நீண்ட சடைமுடியன்*
*நூலணிந்த மார்பன் நுதல் விழியன் - தோலுடையான்*
*கைம்மான் மறியன் கனல் மழுவன் கச்சாலை*
*எம்மான் இமையோர்க் கின்ற",*

இக்கோயிலின் சிறப்பை அறிய முடிகிறது. அதனால் தேவார காலத்துக்கு முன்பே உள்ள தலம் என்பது அறியப்படுகிறது. இருப்பினும், தேவாரப்பாடல்கள் கிடைக்கப் பெறாதது ஒரு வேளை கரையானால் அரிப்புண்டு, இத்தலத்துப் பாடல்கள் அழிந்திருக்கலாம் எனக் கருத முடிகிறது.

ஏனைய தலத்து பாடல்களைக் காட்டிலும் காஞ்சிபுரத்து பாடல்கள் எளிதில் புரிந்து கொள்ளாத வகையில், கரடுமுரடாக தோன்றும். பதங்களைப் பிரித்து, பொருள்காணின், அதில் பொதிந்துள்ள கருத்துக்களை அறியலாம். அவற்றுள் ஒரு பாடலாகிய : "அயிலப்புக்கயல்" எனும் பாடலில் வரும் 7-வது அடியின் உட்கருத்தை ஆராய்வோம்.

*"கயிலச்சுத் தரதத்துச் சயிலத்துத் தரநீற்கக்*
*கரணிச்சித் தருள்கச்சிப் - பதியோனே"*

உத்தரம் நிற்க அகத்தியர் உதவிய வரலாறு பார்வதி திருமணத்தின் போது, வடதிசையில் உள்ள இமயம் தாழ்ந்தது, தென் திசை உயர்ந்தது. அங்கு குழுமியிருந்தோர் அஞ்சினர். சிவன், அகத்தியரை அழைத்து, நீ உடனே தென் திசைக்கு ஏகுக - நீதென் திசையில் உள்ள பொதிய மலைக்கு சென்றதும், பூமி சமன் நிலை எய்தும் என கூறலாயினர். மற்றுமோர் காஞ்சி தலத்துப்பாடல் : "இறைச்சிப்பற்றிய" கடைசி அடியில்,

*"பணப்பத்திக் கணத்துத்திப் படுக்கைக்கச் சபத்திச்சைப்*
*படுக்கச்சிப் பதிச்சொக்கப் - பெருமாளே"*

இதில் பொதிந்துள்ள வரலாற்றினைப் பார்ப்போம். கச்சபம்: திருப்பாற்கடல் கடையப்பட்ட பொழுது அழுந்தின மத்தாகிய மந்தரமலையை திருமால் (கச்சபம்) ஆமையாக உருவெடுத்து முதுகினால் தாங்கிப் பின்னர் இறுமாப்படைந்து கடலைக் கலக்க ஆரம்பித்தார். அந்த ஆமையை, விநாயகர் அடக்கி மடிவித்து அதன் ஓட்டைச் சிவபிரான் அணியத்தந்தனர்.

பின்னர், திருமால் தனது குற்றம் தீர்ந்து ஈடேறவேண்டிக் காஞ்சியில் சோதிலிங்கத்தைப் பூசித்து, இம்மூர்த்தி "கச்சபேசர்" எனும் திருநாமத்தோடு விளங்க வேண்டும் என்ற வரத்தை பெற்றனர். அந்த லிங்க மூர்த்தி உள்ள ஆலயமே, காஞ்சியில் கச்சபேசர் கோயில் என விளங்குகின்றது.

இத்தலம் பிருத்வி (மண்) தலம் ஆதலால் மூல லிங்கம் மண்ணால் ஆனது. இதற்கு புனுகுசட்டம் சாத்தப்பட்டு அபிஷேகம் நடைபெறுவது வழக்கம். மேலும், சிறந்த அமைப்பாக மூலவருக்குமேல் உள்ள விமானம் கருங் கல்லாலேயே கட்டப்பட்ட பெருமையுடையது. இது வேறெந்த சிவாலயத்திலும் காண முடியாத சிறப்பு அம்சமாகும்.

சித்திரை மாதத்தில் 12 நாட்கள் உத்திரக் திருக்கல்யாண பெரு விழாவும், கார்த்திகையில் ஞாயிற்றுக்கிழமைகளிலும், மார்கழி திருவாதிரையும் சிறப்பு திருநாட்களாகும்.

# 23. உயிர்பெற்று . . . . உடலுற்றது (திருப்புகழ்)

அருணகிரியார் தாம் பாடிய பாடல்களில் எந்த ஒரு வரலாறானாலும், விரிவாகக் கூறாது, சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதில் தேர்ச்சி பெற்றவர் என்பது இவரது பாடல்களிலிருந்தே அறிய முடிகிறது. உதாரணத்திற்கு, "ஐங்கரனை யொத்தமனம் ஐம்புலம்" எனத் துவங்கும் பாடலைப் பார்ப்போம் :

*ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவள*
*ரந்திபக லற்றநினை வருள்வாயே -*
*அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை*
*அன்பொடுது திக்கமன மருள்வாயே;*

*தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற*
*சந்திரவெ ளிக்குவழி யருள்வாயே -*
*தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்*
*சம்ப்ரமவி தத்துடனெ யருள்வாயே;*

*மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமன*
*முன்றனைநி னைத்தமைய அருள்வாயே -*
*மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரகைஷபுரி*
*வந்தணைய புத்தியினை யருள்வாயே,*

*கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்*
*கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே -*
*குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு*
*கொங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே.*

இப்பாடலில் வரும் 7-வது அடியில்

*கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்*
*கொண்டுஉட லுற்றபொருள் - அருள்வாயே*

பாடியுள்ளதை நோக்கின், சுந்தரர், முதலையுண்ட பாலனை உயிர்ப்பிக்க எழுப்பினாரே, அதன் ரகசிய வழியை அடியேனுக்கும் அருளுக என விண்ணப்பிக்கிறார்.

**உயிர் பெற்று - உடலுற்றது :- வரலாறு**

திருப்புக்கொளியூர் ஏரியில் குளிக்கச் சென்ற பாலனை ஒரு முதலை உண்டது. இந்நிகழ்ச்சிக்கு சில வருடங்கள் கழிந்தபின், தலயாத்திரையின்போது, சுந்தரர் முதலையுண்ட பாலனது ஊருக்குச் சென்ற சமயம் இத் துக்கச் செய்தியை அறியலானார். சிறுவனுடைய பெற்றோர்கள் உள்ளம் பூரிக்கும் வகையில், பதிகம் பாடி மீண்டும் அந்த ஏரியில் நீர் நிரம்பி வழியவும், முதலையும் வந்து சேரலானது, அந்நாளில் இருந்த வளர்ச்சியுடன் உயிர் பெற்று, எந்த முதலை விழுங்கியதோ அதே முதலை ஏரியின் கரையில் பாலனை உமிழவும் செய்தது. இவ்வற்புதத்தின் ரகசியத்தை அடியேனுக்கும் அருளுக என முருகனிடம் வேண்டுகிறார். இத்தனை வரலாற்றுச் செய்திகளையும், "உயிர்பெற்று . . . . . . . . . உடலுற்றது" எனும் அடியிலேயே பொருத்தி பாடியுள்ளது, இவரது வாக்கு சாதுர்யத்தை அறிய முடிகிறது.

"வாக்கிற்கு அருணகிரி" என புலவர் பெருமக்களால் புகழப்பட்டது மிகவும் பொருத்தமே.

ஞானசம்பந்தர், திருமயிலையில், சிவனேசஞ் செட்டியார் மகளாகிய பூம்பாவையை உயிர்ப்பிக்கச் செய்தது யாவரும் அறிந்ததே. அதே போன்று, நாவுக்கரசரும், அப்பூதி அடிகளின் மகன், அரவம் தீண்டி இறந்தவனை உயிர்ப்பிக்கச் செய்ததையும் யாவரும் அறிந்ததே. சுந்தரரும், முதலையுண்ட பாலனை அவிநாசியில் உயிர்ப்பிக்கச் செய்ததைக் குறித்து மேற்கூறிய செய்திகளால் அறிவிக்கப்பட்டுள்ளது. பட்டினத்தடிகள், மகனை வாளால் அரிந்து, ஒரு சிவனடியார்க்கு அமுது படைத்ததையும், பின்னர் அவனை உயிர்ப்பிக்கச் செய்த நாவுக்கரசரின் அற்புதத்தையும், மாது சொன்ன சூளால் இளமையை துறக்க வல்லமையையும் உலகிற்கு ஓர் எடுத்துக்காட்டாக வாழ்ந்து

காட்டிய நீலகண்ட குயவனாரின் குறிக்கோளும், ஆறே நாளில், கண் இடந்து அப்பவல்ல திண்ணனின் ஒப்பில்லா திடபக்தியையும் புகழ்ந்து பாடியுள்ளதில், சிறப்பாக திருநீலகண்டரது வாழ்க்கையே இடம் பெற்றுள்ளது.

அது போன்றே, ஞானசம்பந்தர், பூம்பாவையை உயிர்பிக்கச் செய்த அற்புதத்தையும், நாவுக்கரசர், அரவம் தீண்டி இறந்தவனை உயிர்பிக்கச் செய்த திறனையும், அவிநாசியில் முதலையுண்ட பாலனை உயிர் பெற்றுவரச் செய்த ஆற்றலையும் அகக்கண் கொண்டு ஆராய்தல் அவசியம்.

ஞானசம்பந்தரோ, பூம்பாவை எனும் பெண்ணின் அஸ்தியையே மூலப் பொருளாகக் கொண்டு உயிர்பிக்கச் செய்தார். அதுபோன்றே, நாவுக்கரசரும், அப்பூதியடிகளின் மகனது உடலையே மூலப்பொருளாகக் கொண்டு உயிர்பிக்கச் செய்தார்.

ஆனால், சுந்தரரோ, எந்த வித மூலப் பொருளின்றியே முதலையுண்ட பாலனை உயிர்பிக்கச் செய்தார். இதனால் மூவரில் உயர்ந்த நிலையில் அற்புதச் செயலை உலகினர்க்கு நிகழ்த்திக் காட்டியவர் சுந்தரர் என்பது சொல்லாமலே விளங்குகிறது. அதனால், அருணகிரியாரும், சுந்தரரை மிகவும் போற்றித்திருப்புகழில் பாடியுள்ளதை காணமுடிகிறது.

இதனால், “செயற்கரிய செய்தவர் சுந்தரர்” எனப் பாராட்டுவதில் பிழையொன்றுமில்லை.



முதலையுண்ட பாலனை உயிர்ப்பித்தல்

# 24. அகத்தியர் வரலாறு

அருணகிரியார் பெரும்பாலும் சமரஸ நோக்கில் பல விதமான செய்திகளின் சுருக்கத்தை தமது பாடலில் புகுத்தி பாடியுள்ளதை அறிய முடிகிறது. இவரது பாடல்களை ஆராயுங் கால், பல சரித்திர வரலாறுகளை அறியும் வாய்ப்பு, வாசகர்களுக்கு ஏற்படும் என்பதில் ஐயமில்லை. ஆகையால் இவரை "சகலகலா வல்லவன்" எனும் தலைப்புக்கு ஏற்றவர் என்றே கருத முடிகிறது. உதாரணத்திற்கு, காஞ்சி தலத்து திருப்புகழாகிய, "மகுடக் கொப்பாடக்" எனம் பாடலில் 6-வது அடியில் மிகவும் துல்லியமாக அகத்தியர் வரலாற்று செய்தியை எந்த அளவு சுருங்கச் சொல்லி விளங்கச் செய்ததை காணமுடிகிறது.

*மகுடக்கொப் பாடக் காதினில்*
*நுதலிற்பொட் டேரக் கோதிய*
*மயிரிற்சுற் றோலைப் பூவொடு வண்டுபாட*

*வகைமுத்துச் சோரச் சேர்நகை*
*யிதழிற்சொற் சாதிப் பாரியல்*
*மதனச்சொற் பாடுக் கோகில ரம்பைமாதர்*

*பகடிச்சொற் கூறிப் போர்மயல்*
*முகவிச்சைப் பேசிச் சீரிடை*
*பவளப்பட் டாடைத் தோளிரு கொங்கைமேலாப்*

*பணமெத்தப் பேசித் தூதிடு*
*மிதயச்சுத் தீனச் சோலிகள்*
*பலரெச்சிற் காசைக் காரிகள் சந்தமாமோ;*

*தகுடத்தத் தானத் தானன*
*திகுடத்தித் தீதித் தோதிமி*
*தடுடுட்டுட் டாடப் பேரிகை சங்குவீணை*

*தடமிட்டுப் பாவக் கார்கிரி*
*பொடிபட்டுப் போகச் சூரர்கள்*
*தலையிற்றிட் டாடப் போர்புரி கின்றவேலா;*

*திகிரிப்பொற் பாணிப் பாவனை*
*மறைகற்புத் தேளப் பூமனை*
*சினமுற்றுச் சேடிற் சாடிய கந்தவேளே*

*தினையுற்றுக் காவற் காரியை*
*மணமுற்றுச் தேவப் பூவொடு*
*திகழ்கச்சித் தேவக் கோன்மகிழ் தம்பிரானே*

இப்பாடலில் 6-வது அடியில் கூறியுள்ளதைப் பார்ப்போம். தடமிட்டுப் பாவக்கார்கிரி - தன்னகத்தே வழிகாட்டி உள்ளே வந்தவர்களை மாயையினால் தடுத்து மாய்வித்த கிரௌஞ்சன் எனும் அசுரன், ஒரு சமயம் அகத்திய முனிவர் வருவதைக் கண்டு, வழியில் மலையுருவில் நின்று, அம்மலையிடையே ஒரு வழியை காட்டலானான் இவரும் அவன் சொல்லை நம்பியே, அவ் வழியாக உள்ளே செல்லலானார். சிறிது தூரம் சென்றதும் வழி தடுமாறலானார். உடனே தனது தவவலிமையால், இது அசுரனது மாயம் எனத் தெரியலானார்.

உடனே, கோபமுற்று, தன் கைத்தண்டினால் அடித்து, கொடியோய்! "நீ உன் சொந்த உருவை இழந்து, இந்த மலையாகவே இருக்கக் கடவாய்" எனச் சாபமிட்டார். அசுரன் தான் இழைத்த செயலை மன்னித்து அருள வேண்டினான்.

பின்னர் அகத்தியரும், எம்பிரான் முருகன் கைவேலால் மாளக் கடவாய் எனக் கூறிவிட்டு, அவன் மாயையில் இருந்து விலகி வெளிவந்தனர். இதே வரலாற்றினை,

*"நின்தொன்மை நீங்கி நீண்மலையாகி ஈண்டேநின்று*
*தீத்தொழில் இழைத்தி, செவ்வேள் வேற்படைதன்னிற்*
*பின்னாள் விளிகுதி என்றான்"*

*- கந்தபுராணம் (2-24-11,12)*

இதனால் அருணகிரியார் புலமையும் சொல் ஆராய்ச்சி யோடு அனுபவ வாயிலாக பாடியுள்ளது மிகவும் பாராட்டத்தக்கது. இதுபோன்று பல நூல்களிலிருந்தும் புராணங்களிலிருந்தும், காவியங்களிலிருந்தும் பல அரிய வரலாறுகளை அறிய விரும்புவோர், இவரது பாடல்களை படிக்கும் போதே அறியலாம். இவர் "வாக்கிற்கு அருணகிரி" எனப் புகழ்வதோடு, சகலகலா வல்லவன் என்றே புகழ்வதற்கும் தகுதியுடையவர் என்றே கூறலாம்.



அகத்தியர்

# 25. திரிபுரம் எரித்த வரலாறு

அருணகிரியார், காஞ்சிதலத்து திருப்புகழ் "கருப்பற்றிப் பருத்" எனும் பாடலில், 6-வது அடியில் திரிபுரத்தகனம் பற்றி கூறவந்தவர், அம்மூவர்க்கும் அளித்த பேற்றினைப்பற்றி விளக்கியச் செய்தி மிகவும் அற்புதமெனக் கொள்ளலாம். பொதுவாக யாவர்க்கும் தெரிந்திரா வரலாறு.

*கருப்பற்றிப் பருத்தொக்கத் தரைக்குற்றிட் டுருப்பெற்றுக்*
*கருத்திற்கட் பொருட்பட்டுப் பயில்காலங்*
*கணக்கிட்டுப் பிணக்கிட்டுக் கதித்திட்டுக் கொதித்திட்டுக்*
*கயிற்றிட்டுப் பிடித்திட்டுச் சமனாவி*

*பெருக்கப்புத் தியிற்பட்டுப் புடைத்துக்கக் கிளைப்பிற்பொய்ப்*
*பிணத்தைச்சுட் டகத்திற்புக் கனைவோரும்*
*பிறத்தற்சுற் றமுற்றுற்றிட் டழைத்துத்தொக் கறக்கத்துப்*
*பிறப்புப்பற் றறச்செச்சைக் கீழல்தாராய்;*

*பொருப்புக்கர்ப் புரக்கச்சுத் தனப்பொற்புத் தினைப்பச்சைப்*
*புனக்கொச்சைக் குறத்தத்தைக் கினியோனே*
*புரத்தைச்சுட் டெரித்துப்பற் றலர்க்குப்பொற்*
*பதத்துய்ப்பைப்*
*புணர்த்தப்பித் தனைக்கற்பித் தருள்வோனே.*

*செருக்கக்குக் கரைக்குத்திச் செருப்புக்குப் பிடித்தெற்றிச்*
*சினத்திட்டுச் சிதைத்திட்டுப் பொரும்வீரா,*
*திருத்தத்திற் புகற்சுத்தத் தமிழ்ச்செப்புத் த்ரயச்சித்ரத்*
*திருக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமானே!*

இப்பாடலில் 6-வது அடியில் பாடியுள்ளதின் கருத்து :- பற்றலர்க்குப் பொற்பதத்துய்ப்பைப் புணர்த்தியது. திரிபுரம் எரிபட்ட பொழுது சிவவழிபாட்டில் சிறந்து விளங்கிய மூவரையும்

சிரித்து எரித்த சிவபெருமான் அருளால் மாளாது பிழைத்தனர். மூவரில், இருவர், சிவபிரானது திருக்கோயில் காவலாளர்களாகவும் (துவாரபாலகர்கள்), பின் ஒருவன், சிவபிரானது நடனத்தின் போது முழவுவாத்தியம் முழங்கும் பேற்றினை அடைந்தான்.

இவ்வரலாற்றினை குறித்து சுந்தரரது பாடல்கள் அணி சேர்கின்றன.

*"மூ எயில் செற்ற ஞான்று உய்ந்த மூவரில் இருவர் நின் திருக்*
*கோயிலின் வாய்தல் காவலாளரென் றேவிய பின்னை*
*ஒருவநீ கரிகா டரங்காக, மானை நோக்கியோர் மாநடம் மகிழ*
*மணிமுழா முழக்க அருள் செய்த தேவதேவநின் திருவடி*
*யடைந்தேன் செழும் பொழில் திருப்புன் கூருளானே"*

*சுந்தரர் - 7-55-8*

இதுபோன்று, பெரும்பாலும் அறிந்திராத, கேட்டிராத வரலாற்றுச் செய்திகள் பலவற்றை அருணகிரிப் பெருமான், தான் பாடிய பாடல்களில் பரக்க காணமுடிகிறது.

அதனால், "நன்னெறிக்கு அருணகிரி" எனப்புகழ்வதில் பிழை என்ன இருக்கப்போகிறது.

# 26. இலக்குமி, சரஸ்வதி

தொல்காப்பியத்தில், இலக்குமி, சரஸ்வதி பற்றிய குறிப்புகள் காணவில்லை, கொற்றவைப்பற்றி குறிப்புகள் காணப் படுகின்றன.

சங்க இலக்கியங்களில் கொற்றவைப்பற்றி விளக்கங்கள் மிகுதியாக உள்ளன. இலக்குமியைப் பற்றிய குறிப்புகளை மேலே கூறியதைவிட குறைவுதான். சரஸ்வதியைப் பற்றிய குறிப்புகள் எதிலும் காணப்படவில்லை.

**சிலப்பதிகாரம்** -- முப்பெரும் தேவிகளைக் குறித்து பாடல்கள் வந்துள்ளன. சரஸ்வதியை மிகத் தெளிவாகக் குறிப்பிடுகின்ற நூல் சிலப்பதிகாரமேயாகும்.

**மணிமேகலை** -- இது பௌத்த மத காவியம். இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியது. இதில் சரஸ்வதியைப் பற்றி குறிப்புகள் வருகின்றன.

**திருமந்திரம்** -- திருமந்திரத்தில் 1066-67-ம் பாடல்கள் சரஸ்வதியின் திருவுருவத்தைப் பற்றியதாகும்.

**திருக்கடைக்காப்பு** -- சம்பந்தர் திருக்கடைக்காப்பில் முதல் திருமறையில் "சினமலியறுபகை" எனத் துவங்கும் பாடலில் சரஸ்வதியைப் பற்றி வந்துள்ளதைக் காண முடிகிறது.

**தேவாரம்** -- நாவுக்கரசர் தேவாரத்தில் ஐந்தாம் திருமுறையில், "காமியஞ் செய்து காலம் கழியாதே" எனத் துவங்கும் பாடலில் சரஸ்வதியைப் பற்றி வந்துள்ளதைக் காண முடிகிறது.

**சீவக சிந்தாமணி** -- சமணப் பெருங் காப்பியம், "நாமகள் இலம்பத்தோடு" தொடங்குகிறது. இந்நூலில் இலக்குமியை விமலை, பதுமை எனக் குறிக்கிறது.

"தக்கயாக பரணி திரட்டு" எனும் நூலில் சரஸ்வதியை காளமேகப் புலவர் பாடியுள்ளார். கம்பர், சரஸ்வதி அந்தாதியில் 30 பாடல்கள் பாடியுள்ளார். முதல் வழிபாட்டு நூல் இதுவேயாகும். அண்மையில் வாழ்ந்த குமரகுருபரர், வள்ளலார் போன்றோர்கள் சரஸ்வதியைப் பற்றி பாடல்கள் புனைந்துள்ளார் கள்.

சரஸ் = ஆறு, வதி = உறைகின்றவள்.

சரஸ்வதி நதி இமயத்தில் தோன்றி, இந்தியாவில் வடமேற்கு பகுதி வழியாக அரபிக் கடலில் சங்கமம் ஆகிறது. நதியின் தோற்றம் புலனாகும். இயக்கம் புலனாகாது. சரஸ்வதி எல்லா நாட்டவர்க்கும் பொது, சரஸ்வதியை <u>அதினே</u> என கிரேக்கர்களும், <u>மினர்வா</u> என உரோமியர்களும், <u>பென்டென்</u> என ஜப்பானியர்களும், <u>யாங்-சனம்</u> என திபெத்தியரும் வழிபடுவதாக அறியப்படுகிறது. சரஸ்வதி அவதரித்த நட்சத்திரம் மூலம் என்பர். அதனால் ஆரம்ப கல்விக்கு மூல நாளும் அதுவே.

ஆனால் இலக்குமி எனும் பெயர் முதன் முதலில் மணிமேகலையில் தான் காணப்படுகிறது. மணிமேகலை முற்பிறவியில் இலக்குமி எனும் பெயரைக் கொண்டிருந்தாள். பெரியபுராணத்தில் 36 மாதர்களைப் பற்றி வருகின்றன. இதில் இலக்குமி பெயரைச் சூடியவர்கள் மூவராவர்.

1. காரைக்காலம்மையார் -- புனிதவதி
2. நாவுக்கரசர் தமக்கையார் -- திலகவதி
3. கோச்செங்கண் தாயார் -- கமலவதி

இவைகளைக் கருத்தில் கொண்டே, மணிமேகலை எனும் காவியத்தை அடியேன் ஆராயத் தூண்டியதில் வியப்பொன்று மில்லை. ஆரம்பத்தில் சிற்சில இடங்களில் விளங்காத புதிய புதிய பரிபாஷைகளான அரூபபிடமரும், உரூப்பிடமரும் எனும் பதங்கள் கண்களில் குறுக்கிட்டன. இன்னும் பல தத்துவங்களும் தென்பட்டன. இவைகளுக்கு பொருள் விளங்காது தவித்த நேரத்தில், தமிழ்த்தாய் மணிமேகலையை இழந்து பொலிவின்றி

தோன்றியது போன்று என் மனத்திரையில் தோன்றி மறைந்தன. அதுசமயம், ஒரு நண்பர் மூலம் அந்நூலின் மூலப் பிரதியொன்று கிடைத்தது மிகவும் பேருதவியாக இருந்தது.

பற்பல தமிழ் அறிஞர்களைக் கண்டு, அரூப பிடமர் உரூப பிடமர் என்பதற்கு விளக்கம் கேட்டேன். பலர் பலவிதமாக கருத்து தெரிவித்தனர், என் மனம் ஏற்கவில்லை, கடைசியில் இலக்கியத்தில் தேர்ச்சி பெற்ற நண்பர் ஒருவரை அணுகியபோது, அவர்கள் தந்த விளக்கம் என் அறிவிற்கு மின்னலைப் போன்று தோன்றி மறைந்தது. இலக்கணத்தில், ர-கரத்திற்கு, ட-கரம் வர விதியுள்ளதாகவும், அதனால், அரூப பிரமரும், உரூப பிரமரும் எனக் கொள்ளுதல் வேண்டும் எனக் கூறியதோடு, உதாரணத்திற்கு - முகரி என்பதற்கு முகடி என்னும் சொல் வழக்கத்தில் உள்ளத்தையும் கோடிட்டு விளக்கினார்.

எரிவாயு தீர்ந்து விட்ட பேருந்துக்கு, எரிவாயு நிரப்பியதும் எப்படி ஓடத் துவங்குமோ, அது போன்று என் மனம் சோர்ந்து கலங்கிய நேரத்தில், நண்பர் அளித்த விளக்கம் மனோவேகத்தை துவக்கியது. அதன் பின்னர், மணிமேகலையில் நிலவுகின்ற பௌத்த உலக காட்சிகள் எனக்கு ஒவ்வொன்றாக தெளிய லாயின. தலைச்சுமை குறைந்ததுபோல் தோன்றின. இழந்த மணிமேகலையை மீண்டும் தமிழ்த்தாய் இடையை அலங்கரித்து பொலிவுடன் தோன்றச் செய்ததில் எனக்கு உண்டான இன்பத்தை விளக்க வார்த்தைகளும் தோன்றவில்லை. சொல்வதற்கு நாவும் எழவில்லை.



# 27. திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா

அருணகிரிப் பெருமான், தலங்கள் தோறும் சென்று திருப்புகழ் பாடல்கள் பாடி மகிழ்ந்தவராவார். தேவாரத்துக்கு பண்வகுத்ததோடு சரி. திருப்புகழ் பாடல்களுக்கு சந்தம்வகுத்து, தாளமும் வகுக்கப்பட்டது.

பொதுவாகவே, ஞானிகளோ, அருளாளர்களோ, சித்தபுருஷர்களோ, தாங்கள் இயற்றிய கவிகளுக்கு தாங்களே தலைப்பு தந்தும், தலைப்பு பெறாத கவிகளுக்கு ஆன்றோர்களால் தலைப்பு வழங்கப்படுவதுண்டு.

அருணகிரியார் பாடல்களுக்கு, வயலூர் பொல்லாப் பிள்ளையாரே, திருப்புகழ் எனும் தலைப்பினை தந்தது, இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று. அன்னாரது பாடல்களே இதனை உறுதி செய்துள்ளது. வினாயகரது பாடலாகிய, "பக்கரைவிசித்ரமணி" எனத்துவங்கும் பாடலில் 4-வது அடியில்,

*"செய்ப்பதியும் வைத்து, உயர்திருப்புகழ் விருப்பமோடு*
*செப்பு எனக்கருள்கை - மறவேனே"*

(செய்ப்பதி - வயலூர்) எனப்பாடியதிலிருந்து அறியலாம். வினாயகரால் தலைப்புத்தந்த திருப்புகழ் பாடல்களை அச்சிட்டு வழங்கியவர் அமரர் வ.த. சுப்ரமணியப்பிள்ளை எனும் புண்ணிய சீலராவார்.

வள்ளிமலை திருப்புகழ் சச்சிதானந்தா அவர்கள் பழநியில் தங்கியிருந்தபோது, பழனி முருகன் தங்கத்தேரில் பவனிவரும் போது, தேவதாஸியானவள், "வங்காரமார்பில்" எனத்துவங்கும் திருசெங்காட்டங்குடி திருப்புகழின் பின் பகுதியான (4-5 அடிகள்)

*"சிங்காரரூபமயில் வாகன நமோநமென*
*கந்தாகுமார சிவதேசிக நமோநமென*
*சிந்தூர பார்வதிசுதாகர நமோநமென - இருதோதை*
*சிந்தானஜோதி கதிர்வேலவ நமோநமென*
*கங்காளவேணி குருவானவ நமோநமென*
*தீண்சூரராழிமலை தூள்படவை - வேலை விடுவோனே"*

என்பதனை பிரித்துப் பிரித்து மடக்குப்போட்டு பாடிவந்ததை கேட்ட வள்ளிமலை குருநாதர், அப்பாடலால் ஈர்க்கப்பட்டு அன்று தொட்டு, திருப்புகழ் பாடல்களை பாடி பரப்புவதே தொண்டு என்று கொண்டார்.

சென்னையில் வாழ்ந்த தணிகை மணி வ.சு. செங்கல்வராயர் வீட்டில் குருநாதர் திருப்புகழ் பாடி வருவது வழக்கம். அது சமயம், ஆங்கிலேயர் ஆட்சியில் பணிபுரிந்தவர்கள், புது வருடத்தன்று, பழங்களையும், மாலையையும் கொண்டு சென்று துரைமார்களை சந்தித்து, நன்றி செலுத்தி வருவதைக் கண்டார் வள்ளிமலை சுவாமிகள். நிரந்தரமற்ற உயர் அதிகாரிகளைக் கண்டு மரியாதை செலுத்துவதை நிராகரித்தார். நிரந்தரமான முருகப்பெருமானை புதுவருடதினத்தன்று, திருத்தணி சென்று திருப்புகழால் துதி செய்து வருவதே சிறப்பு என கருதினார். இதனடிப்படையில் தான் 1917-18-ம் ஆண்டு முதன் முதலாக தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளையோடு, ஆறு அடியார்களையும் சேர்த்து, திருத்தணி முருகனை திருப்புகழால் பாடி தரிசித்தார். "திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா" எனும் தலைப்பினையும் தந்து, அடியார்கள் யாவரும் கொண்டாடிவர அன்புக் கட்டளையிட்டார்.

அதனடிப்படையில், இந்நாள் வரை, குருநாதரின் சீடர்களால், ஒவ்வொரு புதுவருட முதல்தேதியன்று திருத்தணிக்குச் சென்று, திருப்புகழ் பாடிக் கொண்டே முருகனை வழிபட்டு, அன்னதானமும் நிகழ்த்தி வருவது குருபக்தியின் சிறப்பை உணர முடிகிறது.

குருநாதர் காலத்தில், மலைமேல் வீற்றிருக்கும் முருகனைத் தரிசிக்க, மலைப்பாதைதான் இருந்தது. நாளடைவில் படிகளும், மின்விளக்குகளும் அமைக்கப்பட்டதால்

திருத்தணித் திருப்புகழ்த் திருவிழாவானது, திருத்தணிப்படி விழா என மருவலாயிற்று.

> *"திருப்புகழோதும் கருத்தினர் சேரும்*
> *திருத்தணிமேவும் - பெருமாளே"*

எனும் அருணகிரியாரின் வாக்குறுதி, மெய்ப்பிக்கும் வகையில் தணிகேசனை, புதுவருடத்தினத்தன்று, கண்மலராலும், மனமலராலும், கைம்மலராலும் போற்றி செய்து வருவினைகள் தீர்ப்போமாக.



வாக்கிற்கு அருணகிரி



திருத்தணி திருக்கோயில்



ஸ்ரீ வள்ளிமலை சுவாமி

திருக்கோயில் தோற்றம்



# 28. "பிரபஞ்சமெனும் சேறு"

கந்தரலங்காரம் "பேற்றைத்தவம்" எனத் துவங்கும் பாடலில் அருணகிரியார், முருகனது கருணையை வியந்து புகழ்கிறார்.

நாம் இதுகாறும், உடம்பு உடம்பாக புகுந்து புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம் இந்த அலைச்சல் என்று துடங்கியது என்பது நமக்கே புலப்படாததொன்று.

*"மண்ணும் தனலாறவும் வானும் புகையாறவும் எண்ணரிய தாய்மார்கள்*
*இளைப்பாறவும் பண்ணும் அயன் கையாறவும் அடியேன் காலறவும்"*

எனப் பட்டினத்தடிகள் அறிவுறுத்தியுள்ளது யாவரும் அறிந்ததே.

நீரினின்று எடுத்துப் போட்ட மீன், கரையில் போட்டதும் தன்னுடைய சொந்த இடமில்லை எனத்துள்ளிக் குதிக்கும். அடுத்து முயற்சித்தவுடன் அருகில் உள்ள சதுப்பு நிலத்தில் துள்ளி எட்டியதும் சிறிது ஆறுதல் பெறும். பின்னர் அவ்விடத்தைவிட்டு துள்ளி சேற்றுப்பகுதியில் வந்து விழுந்ததும் சிறிது நிம்மதி பெறுகிறது.

பின்னர் முயற்சித்ததும் அருகில் ஆழமற்ற நீர் நிலையை எட்டி விடுகிறது. அப்பொழுது மேலும் கொஞ்சம் உய்வு கிடைத்தாக உணர்கிறது. அதன் வாயிலாகவே சிறிது நேரத்தில் சிற்றோடைக் கிடைத்ததும், பயம் நீங்கியதாக நினைக்கிறது.

பின்னர் சிற்றோடை மூலம் அருகில் ஓடும் ஆற்றின் நீரில் கலந்ததும் சிறிதும் கவலையின்றி இருந்தது. அந்த சிற்றோடை நீர் சமுத்திரத்தில் கலந்ததும், தனக்கேற்ற வீடு பெற்றதாக நினைக்கிறது.

கடவுளின் கருணையால் பிரபஞ்ச வாழ்வுக்கு வந்த மனிதன்; அந்த மீனின் நிலையில் இருக்கின்றான். பேரின்ப வீட்டைப்பெற அவன் அல்லலினின்று விடுபட்டு மெய்வீட்டை அடைய முயற்சிக்கிறான். இதனை மனதில் கொண்ட அருணகிரியார் தாம் பாடிய கந்தரலங்கார பாடலின் மூலம் முருகனது கருணையினால் பிரபஞ்ச சேற்றை கழித்ததைக் குறித்து விதந்து பாராட்டுகிறார். பாடல் :

*"பேற்றைத் தவம்சற்றும் இல்லாத என்னை, ப்ரபஞ்சம் என்னும்*
*சேற்றைக் கழிய விழிவிட்டவா! செஞ் சடாடவிமேல்*
*ஆற்றைப் பணியை, இதழியைத், தும்பையை, அம்புலியின்*
*கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே"*

மேலும் உறுதி செய்யும் வகையில் மற்றொரு கந்தரலங்காரப் பாடலின் மூலம் விரித்து பாடியுள்ளதை காண முடிகிறது.

*"காட்டில் குறத்தி பிரான் பதத்தே கருத்தை புகட்டின்*
*வீட்டில் புகுதல் மிக எளிதே, விழி நாசி வைத்து,*
*மூட்டிக் கபால மூலாதார நேர் அண்ட மூச்சை யுள்ளே*
*ஓட்டி பிடித்(து) எங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே"*

அருணகிரியாருக்கு முன்னமேயே தோன்றிய மணிவாசகரும் தாம் பாடிய சிவபுராணத்தில் இதே கருத்தினை

*"மெய்யே உன் பொன்னடிகள் கண்டு வீடுற்றேன்"*

என கையாண்டுள்ளார். இந்நிலையே, புண்ணிய சீலர்கள் தபசிகள், ஞானிகள் அடைகின்ற முடிவான உச்ச நிலையாகும்.

அருணகிரியாரது பாடல்களையும், ஏனைய அனுபூதி மகான்கள் அருளிச்செய்த பாடல்களையும் ஆராயுங்கால், இவர்களுக்குள்ளே வேறுபாடுகள் தோன்றாதுபோயினும், அந்த அனுபவத்தைச் சொல்லுகின்ற விதத்திலேதான் வேறுபாடு தோன்றுகிறது. நல்ல உயர்ந்த இறைத் தத்துவங்களை மக்களுக்கு அறிவிக்க முயன்ற வெகுசிலருக்குள் அருணகிரியாரும் ஒருவராக உயர்ந்த நிலையில் வைத்து கருதப்படுவராவார்.

அருணகிரியார், இப்பிறவியை மலம் என்றே கருதுவதை அன்னாரது பாடல் "அறுகுநுனிபனியனைய" எனத்துவங்கும் பாடலில் கடைசி 3 வரிகள் பகர்கிறது.

*இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்*
*ஏசி டார்களோ பாச நாசனே*
*இருவினைமு மலமுமற @இறவியொடு பிறவியற*
*ஏக போகமாய் நீயு நானுமாய்*

*இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்*
*ஏக நாயகா லோக நாயகா இமையவர் பெருமாளே.*

@ இறப்பு - பிறப்பை - இறவி பிறவி - என்றது அருமைப் பிரயோகம்
'பிறவி யிறவி யிலாதார் போலும்' - அப்பர் 6-28-9.
'பெருந்தகை பிறவி னொ டிறவு மானான்' - சம்பந்தர் 1-110-1.

மலம் - என்பது மூன்று வகையான பிரிவுகளைக் கொண்டது. அதாவது மாயை, கன்மம், ஆணவம் எனப்படுவதே யாகும்.

மாயை - பிரபஞ்சத்திற்கு மற்றோர் பெயர் மாயை தாயின் கர்ப்பத்தில் கருமுற்றி சிசுவாக வெளிவரும்போது வளர்த்த கர்ப்பமானது சிசுவிற்கு மலமாகிறது. அம்மலத்தினின்று சிசுவெளிவராவிடில், கருசிதைந்துவிடும் இதனை கருத்தில் கொண்டே மாயை எனும் பிரகிருத்தாய் ஜீவனை வளர்த்து பக்குவப்படுத்தி பரமாத்மாவிடம் ஒப்படைக்கிறது. அப்பொழுது மாயை என்பது மலம் என கருதப்படுகிறது. அவ்வாறு நிகழா வண்ணம், ஜீவாத்மா உலகவாழ்க்கையில் உழன்று கொண்டே இருக்குமானால் மறுபடியும் மாயையில் அகப்பட்டு பிறவி எடுத்துக் கொண்டே வருகிறது.

மணிவாசகர் அருளிச்செய்த சிவபுராணத்தில், புல்லாய், புழுவாய், பூடாய், மரமாய் என்றெல்லாம் பலவாறாக வர்ணித்துள்ளதைக் காண முடிகிறது. அருணகிரியாரும்,

*"எழுகடல் மணலை அளவிடினதிகம்*
*எனதிடர் பிறவி"*

என திருப்புகழிலும் கூறப்பட்டுள்ளார்.

கன்மம் : பிரபஞ்சம் முழுவதுமே கன்ம சொரூபம். இது ஜீவாத்மாவிற்கு முன்னேற உதவியாயிருக்கிறது. மனம், வாக்கு, காயம் என்ற மூன்றினால் நிகழ்வதே கன்மமாகும். கடைசியில் ஜீவாத்மா, பரமாத்வோடு ஐக்கியமாகும்போது கன்மம் முடிவடைகிறது. அப்பொழுது மலம் என அழைக்கப்படுகிறது.

ஆணவம் : அணு எனும் அடிச் சொல்லில் பிறந்ததே ஆணவம். முதலில் சிறிய அணுவாகப் பிரமித்த ஜீவன் தன்னை ஒரு நுண்ணிய உருவாக எண்ணிக் கொள்ளும் ஆணவம் பரமாத்மாவோடு ஒன்றுபடும்போது அழிந்து போகிறது. உதா. :- நீர்நிலைகளில் கலந்து விட்டபிறகு மழைத்துளி எனும் ஆணவம் அல்லது நாம ரூபம் அதற்கில்லை. ஆகவே, ஆணவம் எனும் மலத்தைவிட்டு பரத்தில் லயமாவதே ஜீவாத்மாவின் குறிக்கோள்.

தேனியானது, செடிகளில் உள்ள தோஷங்களைக் காணாது, பலவித மணமுள்ள பூக்கள் ஆனாலும் அவற்றை ஆராயாது, அந்தந்த மலர்களில் இருக்கிற தேனை மட்டும் சேகரிக்கிறதோ, அதே போன்று பரமாத்மாவை விரும்பும் சீல புருஷர்கள் எந்த மொழியில் எந்த நிலையில் பாடல்கள் பாடப்பட்டிருந்தாலும், அதில் கூறப்பட்டுள்ள சாரங்களை மட்டும் அனுபவித்து பேரின்ப நிலையை அடைந்தனர். இவற்றிற்கெல்லாம் மொழித் துவேஷம் வேண்டியதில்லை.



அருணகிரிநாதர்

# 29. அரியும் அரனும் கைகோர்த்து விளையாடிய இரண்யூர்

குடும்ப வாழ்க்கையை பெரிய சாகரம் என்பர். அதில் மூழ்கி திளைக்காதவர்கள் எவரும் இலர் எனலாம். அலைகளாகிய சுக துக்கங்களில் மோதுண்டு வாழ்க்கைச் சாகரத்தில் அமிழ்ந்து விடுபவர்கள் அதிகம். ஏதோ ஒரு சிலரே இச்சாகரத்தில் மூழ்கியும், கரையேறவும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அன்னார்களையே, நாயன்மார்கள், ஆழ்வார்கள் எனக்கருதப் படுகிறது. வைணவ சமயத்தில், இளமையிலேயே பழுத்த அனுபவம் பெற்றவர்களில் இரண்யன் மகனான பிரகலாதனும் ஒருவராவார். இவரது பக்தியினை அருணகிரியார் பாடிய பாடலொன்றும் சிற்பிகளின் கைத்திறன் மூலமாகவும் நமக்கு இன்றைய நாளில் பறை சாற்றுகிறது இரணியூர் என்னும் ஊர்.

அருணகிரியார் பாடிய "செஞ்சொற்பண்" எனத்துவங்கும் பாடலின் 5, 6, 7 அடிகளில் பாடியுள்ளதைப் பார்க்கலாம்.

*மஞ்சொக் குங்கொத் தளகமெ னாமிடை*
*கஞ்சத் தின்புற் றிடுதிரு வேயிள*
*வஞ்சிக் கொம்பொப் பெனுமயி லேயென முறையேய*
*வந்தித் திந்தப் படிமட வாரொடு*
*கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு*
*மந்தப் புந்திக் கசடனெ நாளுன தடிசேர்வேன்;*

*நஞ்சைக் கண்டத் திடுபவ ராரொடு*
*திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்*
*நம்பர்ச் செம்பொற் பெயரசு ரேசனை யுகிராலே*
*நந்தக் கொந்திச் சொரிகுடல் சேர்வர*
*நந்திக் கம்பத் தெழுநர கேசரி*
*நஞ்சக் குண்டைக் கொருவழி யேதென மிகநாடி*

*வெஞ்சச் சிம்புட் சொரூபம் தானவர்*
*பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி*
*விந்தைச் செங்கைப் பொலிசுத வேடுவர் புனமீதே*

குறிப்பு :

*"தமதீஞ்சொல் வெச்சென்றிடச் சொல்லி"*

(சிந்தாமணி - 2015)

*"இரணியனைவதைத்த நரசிங்கம்"* (திருமால்)

இரணியனது ரத்தம் ஒரு துளி கூடச் சிந்தாமல் அதை உறிஞ்சி உண்டனர்; அதனால் வெறி ஏறி உக்கிரம் கொண்டு உலகங்களை வருத்தத் தொடங்கினர். இதைக் கண்ட தேவர்கள் அஞ்சிச் சிவபெருமானை வேண்ட அவர் வீரபத்திரரை ஏவ, வீரபத்திரர் சரபப்பக்ஷயின் உருவம் எடுத்து அந்த நரசிங்கத்தை அடக்கிக் கொத்திக் கீறி, அதன் தோலையும், முகத்தையும் சிவபிரானுக்கு முன்பு வைத்தனர். சிங்கத்தோலை உடையாக அணிந்தார். அதனாற் சிவபிரானுக்குச் 'சிங்க உரி'யும் "நாரசிங் காம்பரன்" எனப் பெயரும் கிடைத்தன. சிங்கமுகத்தைப் பிரமனது வெண்டலை மேல் அணிந்து கொண்டனர்.

வீர! *நர சிங்கத்தையே வதைத்துப் பிறங்கும் ஆனனத்தை யும்** சருமந் தனையும் நல்குதி** என்றுரைத்தான்*

*"சரப உருக் கொண்ர்ந்தே .. ஆர்ப்பரித்து .. வள்ளுகிரால் நரமடங்கல்"*

*"வடிவனைத்தும் உரித்த கற்றதளும் திருமுகமும் முற்றுமெடுத்*
*தமலன் துலங்கவைமுன் சயவீரன் இலங்கிட வைத்தனனே.*
*வீரன் முன்பாய் வைத்த திறை.*
*..... பராபரன் .... விரித்துடுத்து ....*
*நாரசிங்காம்பரன் என்றே பெயர்தரித்து முகத்தை*
*நளின அயன் வெண்டலைமேல் நாயகமாய்த் தரித்தான்"*

ஞானவரோதயர் உபதேச காண்டம் - 1830, 1839, 1842, 1843.

வீரபத்திரர் எனக் கூறாது சிவனே சரபமானார் எனக் காஞ்சிப் புராணம் கூறும்.

*"அஞ்சலீரென் றளித்தனன் சிம்புளாய்*
*வஞ்ச மானிட வாளரி யாயுளைத்*
*துஞ்சு வித்துரி கொண்டொளி தோற்றினான்*
*தஞ்ச முண்டவர் தஞ்சர ணாயினான்"*

- காஞ்சிப்புராணம்; நாரசிங்கீச - 12

சிலப்பதிகாரத்தில் காவிரிபூம்பட்டினத்தைப் பற்றி புகார் எனவும், அரசாண்ட சோழ மன்னனை "காவிரி நாடன்" எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குதான் காப்பிய நாயகன், நாயகியான கோவலனும், கண்ணகியும் பிறந்து வளர்ந்து மணம் புரிந்திருக் கிறார்கள். இப்பகுதியினர், எந்த பொருளையும் விரும்பி வேறு ஊர்களுக்கு செல்ல மாட்டார்கள். ஆகவே இவர்களை, "புகார்" எனும் தலைப்பிலேயே வழங்கலாயினர். பின்னர், இப்பட்டினம் கடல் கொள்ளப்பட்டபின் இங்கு வசித்த தனவந்தர்கள் எல்லாம் இராமனாதபுரத்தை தேடி வந்து குடியேறினர். அன்னார்களையே இன்று நகரத்தார் என அழைக்கப் படுகிறார்கள்.

இவர்கள் ஒன்று கூடி தங்களுக்கென 9 குலமரபுக் கோயில்களை அமைத்துக் கொண்டனர். அவற்றுள் ஒன்றுதான் இரணியூர் எனும் கோயில்.

இரண்யகசிபு சம்ஹாரத்துக்குப் பிறகு, சீற்றம் தணியாத சிங்கபிரான், சிவனை நோக்கி பூஜித்த பகுதியாதலால் இவ்வூரை இரணியூர் எனவும், சிவனால் சிங்கபிரானின் உக்ரத்தைத் தணித்து ஆட்கொண்டதால், இவ்வாலயத்தில் வீற்றிருக்கும் இறைவனை "ஆட்கொண்டநாதர்" எனத் தமிழிலும் "நரஸிம் மேஸ்வரர்" என வடமொழியிலும் அழைக்கலாயினர். சுமார் 700 ஆண்டுகளாகவே இவ்வூரை இரணியூர் என்றே அழைக்கப் பட்டதாக அறிய முடிகிறது.

இப்பகுதியில் தான் இரண்ய சம்ஹாரம் நிகழ்ந்ததாக கருதுவதற்கு வாய்ப்பில்லை என்பதை வாசகர் நினைவில் கொள்ளுதல் அவசியம்.

இன்றைய காலகட்டத்தில், கூட்டணி அமைத்து ஆட்சி செய்வதற்கு முன்னரே, கூட்டாச்சி நடந்துள்ளதை பிரகலாதன் சரித்திரம் நினைவூட்டுகிறது. நரசிம்ம அவதாரம் கூட்டணிக்கு ஓர் எடுத்துக்காட்டு.

நரம் - அறிவு. சிம்மம் - ஆற்றல் - இரண்டும் சேர்ந்ததே நரசிம்ம அவதாரம். இதனை சிலேடையாக கொண்டால் நரம்- மனிதன்; சிம்மம் - சிங்கம். ஆக இரண்டும் சேர்ந்தே நரசிம்மவதாரம் புகட்டுகிறது எனவும் கொள்ள வாய்ப்புள்ளது.

நரசிம்ம அவதாரத்தைக் குறித்து கம்பன் காவியமாக படைத்ததை, சிற்பக்கலைஞர்கள் சிலா வடிவத்தில் இவ்

வாலயத்தில் வடித்துள்ளது மிகவும் ரசிக்கத்தக்கதாகும். நாராயணனின் ஏனைய 9 அவதாரங்களை ரசித்தவர்களுக்கு நரசிம்ம வடிவம் பார்ப்போர்க்கு உள்ளங்களில் அச்சத்தை விளைவிக்கும் பயங்கரமான அவதாரம். பாதி மனித உடலும் பாதி சிங்க உடலுமாக தத்ரூபமாக கலைஞர்கள் வடிவமைத் துள்ளதை, பார்ப்பதற்கே அஞ்சுவோம். உபாசிப்பதற்கும் துணிவு தோன்றாது.

*"ஊன் கொண்டவன் உகிரால் இரணியனை உடல் கிழித்த"*

எனக் கம்பன் வர்ணித்ததோடு தூணில் வெளிப்பட்ட நரசிம்மன் தோற்றத்தைக் குறித்து,

*"நசை பிறந்து இலங்கப் பொங்கி நன்று நன்று என்ன நக்கு*
*விசை பிறந்து உருமுவீழ்ந்தது என்ன ஒரு தூணின்வென்றி*
*இசை திறந்து அமர்ந்து கையால்எற்றினான் ஏற்றலோடும்*
*திசை திறந்து அண்டம் கீறிச்சிரித்தது செங்கட்சீயம்"*

என விவரித்துள்து கவனிக்கற்பாலது.

செங்கட்சீயம் சிரித்த காட்சியே இத்தனை பயங்கரம் எனின், சீறி எழுகின்ற சிங்கபிரானது திருவுருவம் எத்தன்மையதாய் இருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். அருணகிரியார் பாடிய மற்றோர் திருப்புகழில், "இருகுறைமீதோடி" எனத் துவங்கும் பாடலில் பாடியுள்ளதைப் பார்ப்போம். பாடலின் பின்பகுதி :

*"அருமறை நூலோதும் வேதியன்*
*இரணிய ரூபா நமோவென*
*அரிகரி நாராயணாவென - ஒருபாலன்*
*அவனெவனாதாரமேதன*
*இதனுளனோவோதுநீயென*
*அகிலமும் வாழ்வான நாயகன் - என வேகி;*
*ஒருகணை தூணோடுபோறுவாளரி*
*யுகிர் கொடுவாரா நிசாசுரன் - உடல்பீறும்*
*உகவொருதாளான மாமன் - (மாமனாகிய நாராயணன்)*

இதிலிருந்து முருகனை முழுமுதற் கடவுளாகப் பாவித்து அருணகிரியார் பாடியிருப்பினும் நாராயணனது பெருமையை பாடல்களில் தக்க இடத்தில் பாடியுள்ளது இவரது புலமையும் சமரஸ நோக்கமும் அறியமுடிகிறது. இவரது பாடல்களுக்கு

இதனால் ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று. இத்தனையும் கேட்டறிந்த அன்பர்களுக்கு மனச்சாந்தி அளிக்க மூலவரான அ/மி. ஆட்கொண்டநாதரை தரிசிக்க செல்வோம்.

மூலத்தானத்திற்கு செல்லும் முன்பே, இடது பக்க தூணில் அர்த்தநாரீஸ்வரரை சிற்பி வடித்துள்ளது மிகவும் அற்புதம். சற்று நிதானத்தோடு அனுபவிப்பதற்கு பொறுமையும் வேண்டும். சிலையைக் கண்டதும் என் நாடி நரம்பெல்லாம் ஸ்தம்பித்து என்னையும் அறியாது பாடல்கள் பாடலானேன்.

இவ்வடிவத்தை வடித்த சிற்பிக்கே என் முதற்கண் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, மூலத்தாரத்தில் வீற்றிருக்கும் அ/மி. ஆட்கொண்டநாதரை உளம் குளிர தரிசிக்கலானேன். தொடர்ந்து அ/மி. சிவபுரந்தேவியையும் தரிசித்ததும், என்னையும் அறியாது அபிராமபட்டர் பாடிய பாடல் நினைவுக்கு வரவே, பாடலைப் பாடினேன்.

*"பூத்தவளே, புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்*
*காத்தவளே, பின்காந்தவளே, கறைக்கண்டனுக்கு*
*மூத்தவளே, என்று மூவாமுகுந்தவர்க்கு இளையவளே*
*மாத்தவளே, உனையன்றிமற்றோர் தெய்வம் வந்திப்பதே"*

அடுத்து சண்டிகேஸ்வரரையும் தரிசித்தேன். உட்பிரகாரத்தில் அ/மி. வள்ளிதேவசேனா சமேத முருகப்பெருமானை தரிசித்ததும் நெஞ்சக்கனகல்லும் நெகிழ்ந்துருக அருணகிரியாரது பாடல் நினைவூட்டியது.

*மாலோன் மருகனை மன்றாடி*
*மைந்தனை வானவர்க்கு*
*மேலான தேவனை மெய்ஞ்ஞான*
*தெய்வத்தை மேதினியில்*
*சேலார் வயல்பொழில் செங்கோ*
*டனைச்சென்று கண்டுதொழ*
*நாலா யிரம்கண் படைத்தில*
*னே! அந்த நான்முகனே* (கந்தரலங்காரம்)

சகல ஜீவராசிகளுக்கும் விதியை நிர்ணயிக்கும் பிரம்மா என்றுதான் தன்விதியை நிர்ணயிக்கப் போகிறாரோ?

அடுத்து நரசிம்மனின் உக்ரத்தைத் தவிர்க்க சிவபெருமானும் கூட்டணிக்கு அணி சேர்க்கும் விதத்தில் சரபமூர்த்தி வடிவம் எடுத்துள்ள நோக்கின் நரசிம்ம அவதாரத்திற்கு அணி சேர்க்கும் வகையில் உள்ளது.

சிங்க முகமும், மனித தேகமும், மிருகத்தின் காலும், வாலும், பட்சியின் இறக்கையும் ஒருசேர காணும் காட்சியாக சரபமூர்த்தியை காணமுடிகிறது.

அடுத்து அ/மி. நீலமேகப் பெருமாளையும், திருமகள், நிலமகள் ஆகியோரது 3 பஞ்சலோக மூர்த்திகளைக் காண "இப்பிறவி வேண்டுவதே இந்த மானிலத்தே" என அப்பர் பெருமான் வேண்டியதற்கேற்ப அனைவரும் பிரார்த்திக் கொள்வோமாக.

தாமரை இருக்கையின் மீது 4 கரங்களுடன் நேர்முகமாக நின்ற கோலத்தில் அமைந்துள்ளது மிகவும் அற்புதம் எனலாம். நீலமேகவர்ணனை, செட்டி நாட்டுச் சாக்கோட்டைச் சிற்பிகள் வடித்துள்ளதாக அறியலானோம். கற்சிலை சிற்பங்கள் யாவும் செட்டி நாட்டைச் சேர்ந்த சிற்பிகளின் சிற்றுளி ஆற்றலை நிலைத்து நிற்க செய்கிறது.

இவ்வாலயத்தில் உள்ள செப்புத் திருமேனிகள் யாவும், 1930-லிருந்து 1944-க்கு இடைப்பட்ட காலகட்டத்தவை சேர்ந்தவைகள் என அங்குள்ளோர்களால் கூறக்கேட்டோம்.

இவ்வூருக்குச் செல்வோர் காரைக்குடியிலிருந்து, கீழ்சேவல்பட்டிக்கு பேரூந்து மூலமாக சென்றடைந்ததும், அங்கிருந்து டாக்ஸி மூலமாகவோ, ஆட்டோக்களின் மூலமாகவோ, 5 கி.மீ. இரணியூர் சேரலாம்.

அன்பிற்கும் பாசத்திற்கும் உரிய சி.வெ.சி. சின்னக் கருப்பன் அவர்களது அழைப்பின் பேரில் இரணியூர் செல்லும் வாய்ப்பு கிடைத்ததால் இதுகாறும் அறிவித்த செய்திகளை உங்களோடு பகிர்ந்து கொள்ள பேருதவியாயிருந்தது.

முதன்முறையாக இவ்வூர் ஆலயத்துக்கு சென்றதால் இறைவனுக்கு புஷ்பம், பழம், தேங்காய் முதலியன எடுத்துச் செல்ல நினைவு தோன்றவில்லை.

மூலநாதரான அ/மி. ஆட்கொண்டநாதரைத் தரிசித்ததும், மெய் சிலிர்த்து உளக்கண்ணால் அவனது எழிலை அனுபவிக்கலானேன்.

அது சமயம் அங்கிருந்தோர்கள் இவர் என்ன வெறுங் கையோடு தரிசிக்கிறாரே கரங்களை கூப்பித் தொழக்கூடத் தெரியாது போலும் என முணுமுணுத்தனர்.

இறைவன் யாவரது உள்ளத்திலும் இருக்கிறான் என்பதை உலகத்தவர் ஏற்றுக் கொண்டபோதிலும், எத்தனை பேர் அத்தகுதிக்கு தங்களை பக்குவப்படுத்திக் கொள்கிறார்கள் என்பதை விரல் விட்டு எண்ணிவிடலாம்.



இரணியூர்க் கோயில்

# 30. சைவமும் வைணவமும் உணர்த்தும் ஒற்றுமை நயங்கள்

வைணவம் - திருமாலையும், சைவம் - சிவனையும், சாக்தம் - சக்தியையும், காணாபத்யம் - கணபதியையும், கௌமாரம் - முருகனையும், சௌரம் - சூரியனையும் போற்று கின்ற 6 மதங்களை தோற்றுவித்து, அவ்வவ்வற்றிற்குரிய தெய்வங்களையும், பிரிவினை நோக்குடைய சந்தர்ப்பவாதி களால் பிரித்துக் காட்டப்பட்டது.

இதனால், "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" எனக் கருதி வாழ்ந்த இந்து மதம் ஆறாக பிரிவுக்கொண்டு, பூசல்களும், பிணக்குகளும் உருவெடுத்தன. இத்துவேஷத்தைத் தவிர்க்கவே, பிரபந்தமும், தேவாரமும் பெரிதும் வழிகாட்டியா யுள்ளன. இதனால் சைவ வைணவப் பாடல்களால் உணர்த்திய வாசகத்தைப் பின்பற்றியே விளக்கப்பட்டுள்ளது.

படகு ஆற்றிலே நீரைக் கிழித்துக் கொண்டு போக எய்தினாலும் கிழிந்த நீர், படகு சென்றதும் உடனே ஒன்று சேர்ந்து பழைய நிலையிலேயே காட்சியளிப்பது போல், இறைவனுக்கு பல பெயர்களாலும், உருவங்களாலும் வேற்றுமையுறச் செய்தாலும், இறைவன் ஒருவனே என்பது தெளிவு உண்டாகிறது.

உதாரணத்திற்கு : பேயாழ்வார்

*"தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்*
*சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்*
*திரண்டருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு*
*இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து"* *(பாடல் 3446)*

**கருத்து :** அப்பெருமாயன் தாழ்ந்த சடையும் நீண்ட பொன் முடியும் கைகளில் மழுவாகிய ஆயுதமும் சக்கரமும் சங்கும்

மேனியில் சுற்றிக் கொண்டிருக்கும் பாம்பும், இடுப்பில் பொன்நாணும் கொண்டு திருமாலாகவும், சிவனாகவும் இருந்து காட்சி தருகின்றான். திருமலைமேல் வேங்கடமுடையானாக விளங்குகின்ற அந்நாயகன்.

இதே கருத்தின் அடிப்படையிலே, நாவுக்கரசரது பாடலிலும் ஒற்றுமை நயத்தை காணமுடிகிறது. மேலே குறிப்பிட்ட இருவரது பாடல்களின் கருத்தினை தழுவியே, திருமங்கையாழ்வார் பாடிய பாடல் ஒன்று உறுதுணையாய் அணி சேர்க்கிறது.

முதலாழ்வாராகத் திகழ்ந்த பொய்கை ஆழ்வாரும்,

*"ஒருவனான பரம்பொருள் நாரணனாகவும், சிவனாகவும் பெயர்களைக் கொண்டான்"*

திருமாலாக திகழ்ந்தபோது கருட வாகனத்தையும், சிவனாக விளங்கியபோது எருது வாகனத்தையும் கொண்டான் என்கிறார்.

*"நெறிவாசல் தானேயாய் நின்றானை ஐந்து*
*பொறிவாசல் போர்க்கதவம் சாத்தி அறிவானாம்*
*ஆலமர நீழல் அறம் நாலவர்க்கு அன்றுரைத்த*
*ஆலமர்கண்டத்தான்" (பேயாழ்வார் - 3187)*

இதில் சிவனை திருமாலாகவே காட்டி, பேதங்கள் நீங்கி யாவரும் ஒன்றுபட்டு வாழ வகையினை தெரிவித்துள்ளார். பாடல்கள் வாயிலாக சிவனே திருமாலாகவும், திருமாலே சிவனாகவும் தம் அடியார்களுக்கு அருள் சுரந்த நிலையை தெரிவிக்கின்றார். சிவனடியார்களான அகத்தியர், புலத்தியர், தட்சர், மார்கண்டேயர் ஆகிய நால்வருக்கும், ஆலமரத்து நிழலில் திருமால் ஆசிரியனாக வந்து, அறநெறி போதித்ததோடு, அந்த அருளாளன் நஞ்சினை யுண்ட நீலகண்டன் என்று கூறியுள்ளார் மற்றோர் வெண்பாவில் சூரியனை பரிதி என்றும், பகலவன் என்றும், கதிரவன் என்றும், ஆதித்தன் எனவும் பல்வேறு பெயர்களால் அழைத்தல் போன்று, இறைவனை திருமால் எனவும் சிவனென்றும் அழைத்து வழிபட்டு வந்தனர் முன்னோர்கள். அத்துடன் வடிவங்களையும்

அமைத்துப் போற்றியும் வந்தார்கள். ஆழ்வார்களும், நாயன்மார்களும் இந்நெறிமுறையினிலேதான் தம் தெய்வங்களை போற்றி வந்தாலும், அவர்கள் போற்றிப் பாடிய கருத்துக்களினால் ஒன்றுபட்டே இசைந்துள்ளார்கள். இரு சமயத்தினரும் ஒரே கருத்தினையே அடிப்படையாகக் கொண்டு, வேறுபாடின்றி பாடல்கள் மூலம் அருளிச் செய்துள்ளார்கள்.

ஆதாரத்திற்கு திருமங்கையாழ்வார் பாடலிலும் நாவுக்கரசர் பாடலிலுமுள்ள ஒற்றுமை நயத்தை ஆராய்தல் சிறப்பாகும்.

திருமங்கை ஆழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகத்தில் மாமாயனை போற்றும் பாடல் :

*"இந்திரற்கும் பிரமற்கும் முதல்தன்னை*
*இருநிலம் கால்தீநீர் விண்பூதம்ஐந்தாய்ச்*
*செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித்*
*திசைநான்குமாய்த் திங்கள் ஞாயிறாகி*
*அந்தரத்தில் மூவர்க்கும் அறியலாகா*
*அந்தணனை அந்தணர் மாட்டந்திவைத்த*
*மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும்*
*வாழுதியேல் வாழலாகும் மடநெஞ்சமே"*

இப்பாடலின் கருத்தினை ஒத்தே, நாவுக்கரசரும் பாடிய பாடலைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும். திருமங்கையாழ் வாரின் பாடலில் வரும் சொல்லையும் பொருளையும் அப்படியே நாவுக்கரசர் தமது பாடலில் பாடியுள்ளார்.

*"வானவன்காண் வானவர்க்கு மேலான்காண்*
*வடமொழியும், தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்*
*ஆனைந்தம் ஆடினான்காண் ஐயன் காண்கையிலனலேந்தியாடும்*
*கானவன் காண் கானவருக்கு அருள்செய்தான்காண்*
*கருதுவாரிதயத்துக் கமலத்தூறும் தேனவன்காண்*
*சென்றடையாச் செல்வன்தான் காண் சிவனவன்காண்*
*சிவபுரத்து என் செல்வன்தானே"*

**இங்கே இருவரும் கூறிய கருத்துக்கள் யாவும் ஒரே நிலையில் இருத்தல் காணமுடிகிறது.**

ஆழ்வாரோ வழிபடும் தெய்வத்தினை குறிக்காமல் பாடியுள்ள போதிலும், நாவுக்கரசர் சிவன் எனும் சொல்லைமட்டும் வைத்து பாடியுள்ளார். ஆதலால் இவர்களின் கருத்தொற்றுமை கண்டு பார்த்தால் பேதமின்றி இறைவன் உருவத்தில் வேறுபட்டிருந்தாலும், கருத்தினால் ஒருவனே எனக் காணமுடிகிறது.

அடுத்து, திருமங்கை ஆழ்வாரே, உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன் என்னையே நீ ஆட்கொண்டு அருள்சுரக்க வேண்டுகிறேன் எனும் கருத்தினுக்கேற்ப பாடிய பாடலைக் காணமுடிகிறது.

*“திருவுக்கும் திருவாகியசெல்வா! தெய்வத்துக்கரசே, செய்ய கண்ணா*
*உருவச் செஞ்சுடராழிவல்லானே! உலகுண்ட ஒருவா!*
*திருமார்பா! ஒருவற்காற்றியையும் வகையின்னால்*
*உடன்நின்று ஐவர் என்னுள் புகுந்து ஒழியாத தருவித்தின்றிட*
*அஞ்சி நின்னடைந்தேன், அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே”*

(திருமங்கையாழ்வார் 1608)

இதே வேண்டுதல் போன்று, நாவுக்கரசர் சிவனிடம் இறைஞ்சுதலை அன்னாரது பாடல் அறிவிக்கின்றது.

*“பொத்தார் குரம்மை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப*
*மத்தார் தயிர்போல் மறுகுமென்சித்தை மறுக்கொழிவி*
*அத்தா அடியேனடைக் கலங் கண்டாயமரர்கள் தம்*
*சித்தா திருச்சத்திமுற்றத்துறையும் சிவக்கொழுந்தே”*

மத்தைக் கொண்டு தயிரை கலக்குதல் போல் என மனத்தை புலன்கள் ஐந்தும் கலக்கி அலைக்கழிக்கின்றன. எனவே சத்தியமுற்றதுறையும் உன் சீரடியை பற்றுகின்றேன். சிவக் கொழுந்தே! என் அவலத்தை போக்கி, உவப்பு ஏற்படும் வகையில் உன்னருளைத்தருவாயாக - என்பதே பாடலின் கருத்தாகும். இனி, திருமங்கையாழ்வாரோடு ஞானசம்பந்தரும் இணைந்து பாடிய பாடலை ஒப்பு நோக்கி காணமுடிகிறது.

திருஞான சம்பந்தரும், திருமங்கை ஆழ்வாரும் ஒரே காலத்தவர் ஆவார்கள் என்பதை நினைவுக்கு கொள்ளுதல்

அவசியம். திருமங்கையாழ்வார் பாடிய பாடலொன்று, ஞானசம்பந்தர் பாடலோடு ஒப்பிட்டுப்பார்க்க உதவுகிறது.

*"ஊனேர் ஆக்கை தன்னை உழந்தோம்பி*
*ஊனேர் ஆக்கை தன்னை உழந்தேம்பி வைத்தமையால்*
*யானாய் என்றனக்காய் அடியேன்மனம் புகுந்த*
*தேனே! தீங்கரும்பின் தெளிவே! என் சிந்தைதன்னால்*
*நானே யெய்தப் பெற்றேன், நறையூர் நின்ற நம்பியே"*

(திருமங்கையாழ்வார் பாடல் 1566)

இதற்கிணையாக, ஞானசம்பந்தர் பாடல் ஒன்று பகர்கிறது.

*"ஊனத்திருள்நீங்கட வேண்டில்*
*ஞானப்பொருள்கொண்டடிபேணும்*
*தேனொத்தினியானமரும்சேர்*
*வானம் மயிலாடுதுறையே"*

மேலும் மற்றோர் இடத்தில், திருமங்கை ஆழ்வார், "நலம் தான் ஒன்றுமிலேன், நல்லதோர் அறம் செய்துமிலேன்" இப்பாசுரத்தின் கருத்தினை தன்பால் பொருத்தி பாடியுள்ளார். நலம் ஒன்று தாம் காணவில்லை எனவருத்தியும், உலகத்தார் இதை அறிய உணர்த்துகின்றார் - பிரிதோர் இடத்தில் கூறுகிறார்.

*"எம்பெருமான் எந்தை என்னுடைய சுற்றம் எனக்கு*
*அரசு என்னுடைய வாழ்நாள்"*

எனும் கருத்தினையே ஞானசம்பந்தர் பாடலாலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

*"சுற்றம் நீ பிரானும் நீ, தொடர்ந்திலங்கும் சேரிதநீ*
*கற்ற நூல்கருத்தும் நீ, அருந்தமிண்பம் என்றிவை*
*முற்றும் நீ புகழ்ந்து முன் உரைப்பதென்முகம்மனே"*

இவ்விருவரது பாடலின் கருத்தினை ஆராயுங்கால், ஒரே தன்மையுடையதான சொற்றொடர்களாகவே கூறி, தெய்வங் களின் பெயர்களை குறியாது பாடியுள்ளதை நோக்கின், பேதமின்றி, பொதுவாகவே கூறியுள்ள இச்சான்றோர்களின் உள்ளக்கிடக்கை மூலம் அறியமுடிகிறது.

உலகம் வாழவும், தான் நற்கதி அடையவும், இறைவனிடம் வேண்டிக் கொள்கிறார் திருமங்கை ஆழ்வார் தனது பாடல் வாயிலாக.

*"மையொண கருங்கடலும் நிலனும் மணிவரையும்*
*செய்ய சுடரிரண்டும் இவையாய நெஞ்சில்*
*உய்யும் வகையுணர்ந்தேன், உண்மையால் இனியாதும்-*
*தெய்வ பிறிதறியேன் திருவிண்ணகரானே.*

மற்றோர் இதே கருத்தினையொத்த, ஞானசம்பந்தர் பாடலொன்று உறுதுணையாக அணிசெய்கிறது.

*"கலையவன் மறையவன் காற்றொடுதீ*
*மலையவன் விண்ணொடு மண்ணும் அவன்*
*கொலையவன் கொடிமதில் கூட்டழித்த*
*சிலையவன் வளநகர் சிரபுரமே"*

நலமுடைய வாழ்வே பரமபதமாகும். அதுவே மேலான பதவியாகும். அத்தகு வாழ்வை பெறுகின்ற நாள் எந்நாளோ? என இறைவனிடம் ஆழ்வார் விண்ணப்பித்துள்ளது கவனிக் கற்பாலது.

திருமங்கையாழ்வார்:- (பாடல் 1475)

*"முனிந்தீந்த வெங்கடத்துமுரிப்பெருகளிற்றால்*
*வினைந்தீந்த மாமரம் போல் வீழ்ந்தாரை நினையாதே*
*அளிந்தோர்ந்த சிந்தைநின்பால் அடியேற்குவானுலகம்*
*தெளிந்தேயென்றெய் வதுதிருவிண்ணகரானே"*

காலமெல்லாம் உன்னையே நினைந்து போற்றும் அடியேனது உள்ளத்திற்கு உறுதுணையாய் ஏற்படுத்தி தந்த உடம்பால் தான் நறையூரில் இருக்கும் உன்னையே நினைக்கின்ற உள்ளமே விழைப்பெற்றது. இதே கருத்தினையே ஞானசம்பந்தரும் கூறியுள்ளார்.

*"இன்று நன்று நாளை நன்றென்று நின்ற இச்சையால்*
*பொன்றுகின்ற வாழ்க்கையைப் போக விட்டுப்போது மின்*
*மின்தயங்குசோதியான் வெண்மதிவிரிபுனல்*
*கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே"*

இவ்விருவரும் இறைவனை தேன் என்றும், வான் என்றும் அனைத்தும் என்றும், உறவு என்றும், ஞானம் என்றும் பாடி மகிழ்ந்து பாராட்டுகிறார்கள்.

இவர்கள் வணங்கும் தெய்வத்திற்கும், போற்றும் சமயங்களுக்கும் வெவ்வேறு பெயரிட்டிருந்தாலும் ஒருமித்த கருத்துக்களைப் பெய்து, பரம்பொருளைப் பாடிச் சிறப்பித்தார்கள்.



# 31. பக்தியே முத்திக்கு வழி

வடமொழி - பக்தி; தமிழ் - அன்பு.

| | | |
|---|---|---|
| கிரேதா யுகத்தில் | - | ஞானத்தினால் முத்தி |
| திரேதா யுகத்தில் | - | தானத்தினால் முத்தி |
| துவாபர யுகத்தில் | - | யாகத்தினால் முத்தி |
| கலி யுகத்தில் | - | பக்தியினால் முத்தி |

இறைவன் பக்தி எனும் வலையில்தான் அகப்படுவான். ஆகையால் பக்தியோ அன்போ இல்லாதவன் ஒரு மனிதனாக மாட்டான். அன்பில்லாதவனை பிணம் என்றும் சொல்லாது, என்புதோல் போர்த்த உடம்பு என்பர். பக்திக்கு செல்வம், இடம், குலம், காலம் - இவைகள் தேவையற்றது. தண்ணீர் பந்தலுக்கு செல்வம் (பணம்) தேவைப்படும். பக்திக்கு பணம் பொருள் தேவையில்லை. பரம தரித்திரர்களாலும் புரிய முடியும்.

பக்தி மூலமே இறைவன் திருவருள் பெற்றவர் குசேலர் ஆவார். தண்ணீர் பந்தல் அமைக்க - இடம் காலம் வேண்டும். மழை காலத்தில், தண்ணீர் பந்தல் நடத்தி, பானகம், மோர் வழங்கினால் எவருக்கும் பயனில்லை. மக்களே, அவர்களை குறை கூறுவார்கள். கோடை காலத்தில் வைத்தால்தான், மக்கள் பயன் பெறுவர். அதனால் காலம் தேவை. பக்திக்கோ காலமோ, நேரமோ தேவையில்லை. மழை நாட்கள், குளிர் மாதம், கோடை காலம், பகல் இரவு எதையும் பொருட்படுத்தாது இறைவனிடம் பக்தி செய்யலாம்.

இருக்கினும், நிற்கும்போதும், இரவு கண் துயிலும் போதும், நடக்கும் போதும், பொருந்தியுண் துய்க்கும் போதும் முருக்கிதழ் கனிவாயரை முயக்கி நெஞ்சழியும்போதும் திருக்களர் உடைய நம்பா, சிந்தையுன் பாலதாமே. தண்ணீர் பந்தல் அமைக்க வேண்டுமானால், தக்க இடம் பார்த்து நிறுவ வேண்டும். மலை அடிவாரத்தில் வருவார் போவார்க்கும், நாவறட்சி ஏற்படும் போது, மலைமேல் குளிர்ந்த நீரும், பானகமும் கிடைக்கும் என்று

கூறினால் எவர்தான் மலை உச்சி சென்று தாகத்தை தணிக்க முயலுவர். அதனால் தகுந்த இடத்தில் தண்ணீர் பந்தல் அமைக்க வேண்டும். பக்திக்கோ எந்த இடத்திலும் அமர்ந்து இறைவனை தியானிக்கலாம். மலை, காடு, இல்லம் எங்கினும் செய்யலாம்.

இதைக் குறித்து அருணகிரியார், "எதிரிலாத பத்திதனை-மேவி" என திருப்புகழில் கோடிட்டு பாடியுள்ளார்.

வள்ளலாரும், "பக்தி எனும் வலையில் அகப்படும் மலையே", "பத்தியால்யான் உனைப் பலகாலும்" என திருப்புகழ் பாடல் வாயிலாகவும் அறிவித்துள்ளனர்.

*"பத்திநெறி அறிவித்து, பழவினைகள் பாறும்வண்ணம்,*
*சித்தமலமறிவித்து சிவமாக்கி எனை ஆண்ட"*

என மணிவாசகரும் கூறிப் போந்துள்ளார். பக்தியின்றி, வெளிக்கு துறவு பூண்டு, காட்டிலிருப்பினும், கந்தையுடுத்தும், ஓடே எடுப்பினும் பலனில்லை. இயற்கையிலே பக்தியுடையவர்கள், தமது இல்லறத்தாளுடன் வீட்டிலேயே வாழினும், மெய்ஞானப் பேற்றை எய்துவர்.

*"காடேதிரிந்தென்ன, காற்றேபுசித்தென்ன, கந்தை*
*சுற்றி ஓடே எடுத்தென்ன, உள்ளன் பிலாதவர்*
*ஓங்கு விண்ணோர் நாடேயிடை மருதீசருக்கு*
*மெய்யன்பர் நாரியர்பால் வீடேயிருப்பினும்*
*மெய்ஞான வீட்டின்பம்மேவுவரே"*

என பட்டினத்தடிகள் குறிப்பிட்டுள்ளார். அதனால் பக்திக்கு, உயர்குலம், தாழ்ந்த குலம் என்பது தேவைப்படாது.

*"சங்கநிதி பதுமநிதியிரண்டுந்தந்து தரணியொடு வானாளத் தருவரேனும்*
*மங்குவார் அவர் செல்வம் மதிப் போமல்லோம் மாதேவர்க்கு*
*ஏகாந்தரல்ராகில்*
*அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயராய் ஆவுரித்து தின்றுழலும் புலையரேனும்*
*கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"*

என நாவுக்கரசர் பாடியுள்ளது நோக்கற்பாலது. மேலும்,

*"பத்திசித்திகாட்டி அத்தர் சித்தமீட்ட*
*பத்தருக்கு வாய்த்த - பெருமாளே"*

எனத் திருப்புகழிலும் பாடியுள்ளார் அருணகிரியார். இத்தகு பக்தியினால் நேர்ந்த விளைவுகளை, ஆதிசங்கரர் விவரித் துள்ளதை பார்ப்பது அவசியம்.

1. தேய்ந்த பழஞ்செருப்பு, சிவனுடைய புருவ நெற்றியில் பொருத்தப்பட்டது.
2. கொப்பளித்து உமிழ்ந்த நீர், பரமனுக்கு அபிஷேக நீராகியது.
3. சிறிது கடித்து எச்சில் செய்த புலால் துண்டு பரமனுக்கு உயர்ந்த உணவானது.
4. வேடனை நாளாறில் பக்தசிரோண்மணியாக்கியது.

மேலே கூறிய அத்தனைக்கும் கண்ணப்பரின் பக்தி நெறியேயாகும். இதனால் அன்பு எனும் பக்தி, சக்தியையும், முத்தியையும் தரவல்லது என்பதை உணர்ந்து இறைவனுக்கு பக்தியின் மூலமாக அன்பினைச் செலுத்தி, நாடிவரும் வினை களவை ஓடிட செய்வோமாக.

தண்ணீர் இல்லாத குளம், ஓடை, ஆறு எதுவுமே பயன்படாததுபோல், பக்தி இல்லாத, ஞானம், தவம், தானம், எதுவுமே பயன்படாது. பக்தி மட்டுமே பயன்தரக்கூடியது. இதுவே பக்தியின் தத்துவம் என உணர்தல் யாவர்க்கும் அவசியம்.

# 32. சேட்டாதேவியின் வரலாறு

தமிழ்நாட்டில் பலபெண் தெய்வங்களை இன்றைய நாளில் நடைமுறையில் சக்தி - வழிபாட்டின் மூலமாகவும், இலக்கியத்தின் வாயிலாகவும் அறிந்து கொள்ள முடிகிறது.

திருமகள், நிலமகள், கொற்றவை, காளி, மாரி அம்மன், கலைமகள், பச்சையம்மன் போன்றோர்களுக்கு விழா எடுத்த போதிலும் சேட்டாதேவிக்கு மட்டும் விழா எடுத்ததாக தெரியவில்லை.

"சேட்ட மூட்ட செவ்வாய்க்கிழமை" என்று வழங்கும் சொல், மனித வாழ்க்கைக்கு பொருந்தாதவைகளை குறிப்பிடுகிறது. சேட்டை எனும் சொல், தீயவற்றை குறிப்பதாகும், சேட்டை செய்யாதே என்றால் குறும்பு செய்யாதே என்பது பொருள். அதனால் தானோ என்னவோ, சேட்டாதேவியை வழிபடுவ தில்லை போலும்.

ஒரு காலத்தில் சிவனது பரிவாரத் தெய்வங்களில் ஒன்றாக சேட்டாதேவியையும் வழிபாடு செய்து வந்ததாக கல்வெட்டுகள் மூலம் அறியப்படுகிறது. பிற்காலத்தில் சேட்டாதேவியை யாரும் வழிபாடு செய்வதில்லை.

புதைப்பொருளாகக் கண்ட சேட்டாதேவி சிலைகளை மனிதர்களுக்கு ஆகாது என முடிவு செய்தனர். அதுபோன்று சிலைகளை கண்டெடுத்ததும், அதை அப்புறப்படுத்தி மண்ணில் குழி தோண்டி புதைத்து விடுவர். இவ்வாறு புறக்கணிக்கப்பட்ட சேட்டாதேவி எனும் தெய்வம், "மூதேவி" எனும் பெயரால் வழங்கப்பட்டது.

திருக்குறளில், திருமகளை- செய்யாள், செய்யவள், திரு, தாமரையினாள் என்று குறிப்பிட்டு பாடியிருந்தபோதிலும், திருமகளின் மூத்தவளாக விளங்கும் சேட்டாதேவியை தவ்வை, மாமுகடி, முகடி என்றே பாடியுள்ளனர்.

செல்வத்தைக் குறிக்கும் திருமகளை, செய்யவள் என்றும், அவ்வாறு செய்ய இயலாதவளான வறுமையைக் குறிக்கும் தெய்வமாக சேட்டாதேவியை தவ்வை என்று குறிப்பிடுகின்றனர்.

மாமுகடிக்கு, பரிமேலழகர் 'கரிடசேட்டை' என பொருள் கூறுகிறார். ஏனைய உரையாசிரியர்களான மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர் போன்றோர் மூதேவி என்றே பொருள் கொள்கின்றனர்.

இதனடிப்படையிலேதான், "நடந்தவன் காலில் சீதேவி, இருந்தவன் காலில் மூதேவி" எனும் பழமொழியும் ஏற்பட்டது.

சோம்பலால் ஏற்படும் கொடுமைக்கு உரிய கடவுளாக மூதேவி படைக்கப் பெற்றிருக்கிறாள் என்று தெரிகிறது.

"சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்து இருக்கின்றீரே" என தொண்டரடிப்பொடி ஆழ்வார் பாடியுள்ளதை கவனிக்கலாம். செல்வம் இன்பத்தைத் தருதலால் இளையவளாகவும், வறுமை துன்பந்தருதலால் மூத்தவளாகவும் கூறி இருக்கின்றனர். பிறக்கும் பொழுது எந்த பொருளையும் கொண்டு வருவதில்லை. இயற்கையாக இருந்தநிலை வெறும்நிலை - வறுமையே. அதனால், அதை மூத்தவள் என்றும், அதன்பின் செயற்கை நிலையில் சேர்த்த செல்வ நிலையை இளையவள் என்றும், அனுபவத்தின் வாயிலாக உணர்ந்து, மக்களை எச்சரித்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

கம்பர், கைகேயி ராமனது முடி சூட்டு விழாவை, கூனியின் மூலம் அறிந்து, அவளின் நயவஞ்சகச் சொல்லுக்கு மயங்கி, அலங்கோலமாக தசரதன் முன்தோன்றியதைக் குறித்து, மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் 88-வது பாடலில், கூறியுள்ளதை கவனிக்கற்பாலது பாடல் :-

*"நவ்வி வீழ்ந்தென நாடகமயில் துயின் முன்னக்*
*கவ்வை கூர்தர சனகியாங்கடிதகமழ் கமலத்து*
*அவ்வை நீங்குமென்று அயோத்தி வந்தடைந்து தவமடந்தை*
*தவ்வையாம் எனக்கிடந்தனள் கேகயன் தனயை"*

என்பதாகும்.

**கருத்து :** கைகேயி துன்பமிகுதியால், மான் வீழ்ந்தாற்போலவும், கூத்தாடுகின்ற மயில் அதைவிட்டு ஒடுங்கி கிடந்தாற்போலவும், சீதையாகிய வாசனை வீசுகின்ற பொன் தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி நீங்குவாள் என்று அயோத்தி வந்து சேர்ந்த இலக்குமியினது மூத்தவள் போலவும் வியந்து கிடந்தாள் - என அழகாக எடுத்துக் காட்டுகிறார். மூதேவியை இலக்குமியின் மூத்தவளாக கம்பர் வர்ணிக்கிறார்.

மூத்தவள் என்ற சொல்லும், மூத்ததேவி என்ற சொல்லும், காலப்போக்கில் மூதேவி என மருவி இருக்கிறது.

"மட்டில் பெரியம்மை வாகனமே" என்ற தனிப்பாடல் பகர்கிறது. இங்கே பெரியம்மை என்ற சொல் மூதேவி என்பதை குறிப்பிடுகிறது.

'நல்வழி' எனும் நூலில், "மூதேவி சென்றிருந்து வாழ்வாளே" என்று சேட்டாதேவியை, "மூதேவி" என்று அவ்வையார் அழைக்கிறார்.

சேட்டை என்பது தமிழ்ச் சொல். இதையே, வடமொழியில் சேஷ்டை என்றும் அதனடிப்படையில் சேஷ்டாதேவி என்றும் வழங்க ஆரம்பித்தார்கள். உதா. :- வேட்டி எனும் சொல்லை, வட மொழியில் வேஷ்டி என கூறுவது போலவேதான் நிட்டை செய்தல் என்பதை, வடமொழியில் நிஷ்டை செய்தல் என வடமொழியில் வழங்குவர்.

சேட் எனும் சொல் பெரியது எனும் பொருளில் வழங்குவதாகும். சேட்டன் என்பது பெரியவன், மூத்தவன் எனும் பொருளில் இப்பொழுதும் வழக்கத்திலுள்ளது. மலையாளச் சொல்லில் 'சேட்டன்' எனும் சொல் அண்ணனைக் குறிக்கிறது. தமிழ் நாட்டிலும் இதையே மூத்த மகனைக் குறிக்க சேஷ்ட புத்திரன் என சொல்கிறார்கள். சேட்டன் என்பது ஆண்பால் சொல்லாகும். பெண்பாலுக்கு சேட்டை என்பதாகும். அதனால் மூதேவியை சேட்டாதேவி என்றனர். சேட்டாதேவி, ஆண்களுக்கு சோம்பல், களைப்பு முதலியன வருவிப்பவள்.

இலக்குமணன் வனவாசம் செய்கையில், கங்கைக் கரையில் வந்தவுடன், தனக்கு சோம்பலோ, நித்திரையோ வராதிருக்க, நித்ராதேவியைப் பார்த்து வனவாசத்திற்கு பிறகு வருக எனக் கட்டளையிடுகிறான்.

சேட்டாதேவி சிலையை, புதைப்பொருள் ஆராய்ச்சி யாளர்கள் கண்டெடுத்து, அதன் வடிவத்தை விளக்கியுள்ளனர். அத்தேவிக்கு கழுதை வாகனமாக அமைந்துள்ளது. செங்குத்தான கோல் போன்ற அமைப்பின் முனையில் பருத்த பாகம் இருப்பது, அதன் ஆயுதமான துடப்பமாக இருக்கலாம் எனவும், இடது புறத்தில் காக்கையை கொடியாக உள்ளதாகவும் வடிவமைப்பைப் பற்றி கூறுகின்றனர்.

சேட்டாதேவியின் உருவத்தின் கீழ் சிறிய உருவத்தில் உள்ளது திருமகளாக இருக்கலாம் என விளக்கம் கூறுகின்றனர்.

இதுபோன்று கண்டெடுக்கப்பட்ட சிற்பத்தில் கழுதை வடிவத்தை மாந்தன் என்றும், இலக்குமியை மாந்தி எனவும், தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுவர். ஆனால், இக்கருத்தை எதனடிப்படையில் இப்படி சொல்கின்றனர் என்பது புதிராகவே உள்ளது.

# 33. காகாசுரன் வரலாறு

திருக்கைவேல் அழகிய பெருமானையே தெய்வமாகக் கொண்டு வழிபட்டுப் பேறுபெற்ற தவராஜயோகி ஸ்ரீ அருணகிரிநாதர், தமிழில் சந்தப்பாக்கள் பாடியவராவார். இவர் திருவண்ணாமலையில் வாழ்ந்தவர் என்பது கி.பி. 1450-ம் ஆண்டில் இருந்த பிரபுடதேவமாராஜர் காலத்தவர் என்பது ஆன்றோர்களின் கருத்து.

அருணகிரியார் சமரச நோக்கில் எல்லா மூர்த்தங்களையும் புகழ்ந்து பாடியுள்ளார் என்பது இவரது பாடல்களால் அறிய முடிகிறது. உதாரணத்திற்கு சுவாமிமலை தலத்துத் திருப்புகழ் பாடலொன்றில் அறிவித்துள்ளதே போதுமானதாகும்.

பாடல் :

*பாதி மதிநதி போது மணிசடை*
*நாத ரருளிய குமரேசா-*
*பாகு கனிமொழி மாது குறமகள்*
*பாதம் வருடிய மணவாளா;*

*காது மொருவிழி காக முறஅருள்*
*மாய னரிதிரு மருகோனே-*
*கால னெனையணு காம லுனதிரு*
*காலில் வழிபட அருள்வாயே;*

*ஆதி யயனொடு தேவர் சுரருல*
*காளும் வகையுறு சிறைமீளா-*
*ஆடு மயிலினி லேறி யமரர்கள்*
*சூழ வரவரு மிளையோனே;*

*சூத மிகவளர் சோலை மருவுசு*
*வாமி மலை தனி லுறைவோனே-*
*சூர னுடலற வாரி சுவறிட*
*வேலை விடவல பெருமானே.*

இப்பாடலில் 3-வது அடியில், சயந்தன் வரலாற்றை ஒரே அடியில் பாடியுள்ளது இவரது புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

சீதையின் ஆகத்தைத்தன் உகிரினால் கொத்தின காகத்தின் மீது புல்லையே படையாக்கி ஸ்ரீ இராமர் செலுத்த - அப்படைக்கு அஞ்சி அக்காகம் எங்கும் காப்பவரின்றி ஸ்ரீ இராமனையே சரணடைய, அவர் அக்காகத்துக்கு உயிர்ப்பிச்சை அளித்தார். பின்னர் கண்களுக்கே ஊனம் வருக என உரைத்ததால் காக்கையின் ஒரு கண் போய், இரு கண்ணிற்கும் ஒரு கண்மணியே பொருந்த அருளினார்.

இங்ஙனம் காக்கை உருக்கொண்டு காகாசுரனாக வந்தது இந்திரகுமாரன் சயந்தன் என்பர். இதனையே, "காகத்திருக் கண்ணிற்கொன்றே மணிகலந்தாங்கு" - என திருக்கோவையாரில் கூறப்பட்டுள்ளது.

*"சரணஞ்சரண் என்று அவன் அஞ்சி வணங்கிட, வள்ளல் மகிழ்ந்தே வெய்யவன் கண்இரண்டொடு போகென விட்ட தெய்வத வெம்படை" - கொடித்திரிள் கண்கள் தமக்கே வந்து ஓர் நன்ம யீநற்கென வைத்ததும் -*

*"வேகம் விண்டு சயந்தன் வணங்கி விசும்பிற்போக"*

என கம்பராமாயணத்தில் சூடாமணிப்படலத்தில் (77-82) கூறுகிறது.



திருப்புகழ் அருளிய ஸ்ரீ அருணகிரிநாதர்

# 34. பரமனும் சுந்தரரும்

அருணகிரியார், முருகன் அருளால் திறம்பட கவிகள் இயற்றும் ஆற்றலை பெற்றவராவார். இவர், இராமாயணம், பாரதம், தேவாரப் பாடல்களில் வந்துள்ள கருத்துக்கள் யாவும் கற்றுணர்ந்தவர் என்பது இவரது பாடல்கள் மூலம் அறியப்படுகிறது.

பொதுவாக, சிவனது திருவிளையாடல்களைப் பற்றி பல இடங்களில் கையாண்டுள்ளதைப் பார்க்க முடிகிறது. ஆயிரம் பொய் சொல்லியாவது திருமணம் செய்து வருவது யாவரும் அறிந்ததே. இதற்கு மாறாக, சிவனே, ஒரு முனிவராய் வந்து, சுந்தரரது திருமணத்தை பொய் சொல்லி தடுத்து சுந்தரரை தடுத்தாட் கொண்ட வரலாறும் உண்டு.

இதனைவிட, நாராயணனுக்கும், லட்சுமிக்கும் ஏற்பட்ட களங்கத்தையும் சிவனே, திருமாலிடம் சமாதானம் கூறி இருவரையும் ஒரு சேர வைத்த நிகழ்ச்சியும் உண்டு. அடுத்தாற்போல், சுந்தரரை திருமணத்தின் போது, தடுத்தாண்ட போதிலும், பரவையார், சுந்தரர் திருவாரூருக்கு வந்ததை அறிந்தார் அன்னார் தமது இல்லத்துக்கு வரக் கூடாதென்று தீர்மானித்த போதிலும், இறைவனே, சுந்தரரது மனவருத்தத்தை அறிந்து, பரவையின் கோபத்தைத் தணிக்க தூதாக சென்று ஊடலைத் தவிர்த்து ஒருமுறைக்கு இரு முறையாக சென்றதும் உண்டு.

இதனை அருணகிரியார், தாம் பாடிய திருப்புகழில் :

*"பரவைமனைமீதிலன்று ஒருபொழுது தூதுசென்ற*
*பரமனருளால் வளர்ந்த - குமரேசா"*

எனப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது. இந்நிகழ்ச்சியையே, 'பாசத்தால் விலைகட்டிய" எனத் தொடங்கும் பாடலில், 6-வது

அடியில் பாடியுள்ளதிலிருந்து, சுந்தரரது வரலாற்றினை அருணகிரியார் அறிந்திருப்பார் என கருத முடிகிறது.

பாடலின் 6-வது அடி :

> *"தேடிப்பாடிய சொற்புவர்க்கித*
> *மாகத்தூது செலத்தரில் கற்பக*
> *தேவர்க்காதி திருப்புகலிப்பதி - வருவோனே"*

அடியார்கள் பொருட்டு, எதனையும் புரியும் ஆற்றல் சிவ பெருமானுக்கே ஒரு கைவந்த கலை எனலாம்.



சிவபெருமான்



சுந்தரர்

# 35. "பிரணவ உபதேசம் பெற்ற அமுதவேணி"

அருணகிரியார், வயலூர் முருகனருளால் திருப்புகழ் பாடல்கள் புனையும் புண்ணியசீலராவார். இவர் தரிசிக்காத முருகத்தலமே இராது எனலாம். அருணகிரியார், திருவேரகத்திருப்புகழ் "மகரகேதனத்த" எனத் துவங்கும் பாடலில் 7-வது அடியில் வந்துள்ளதைப்பற்றி விரிவாக்கம் தெரிவிக்கிறது.

*மகர கேத னத்த னுருவி லாநெ டுத்து*
*மதுர நாணி யிட்டு நெறிசேர்வார்-*
*மலைய வேவ ளைத்த சிலையி னூடொ ளித்த*
*வலிய சாய கக்கண் மடமாதர்;*

*இகழ வாச முற்ற தலையெ லாம்வெ ளுத்து*
*இளமை போயொ யித்து விடுமாறு-*
*இடைவி டாதெ டுத்த பிறவி வேர றுத்து*
*னினிய தாள ளிப்ப தொருநாளே;*

*அகில மேழு *மெட்டு வரையின் மீது முட்ட*
*அதிர வேந டத்து மயில்வீர-*
*அசுரர் சேனை கெட்டு முறிய வான வர்க்கு*
*அடைய வாழ்வ ளிக்கு மிலையோனே;*

*மிகநி லாவெ றித்த அமுத வேணி நிற்க*
*விழைசு வாமி வெற்பி லுறைவோனே-*
*விரைய ஞான வித்தை யருள்செய் தாதை கற்க*
*வினவ வோது வித்த பெருமாளே.*

அமுதவேணி - சிவபெருமான். <u>அமுதன்</u> சம்பந்தர் (1-111-1) மற்றோர்இடத்தில் "வெண்ணிலாவிரிசடை" - சம்பந்தர்பாடல் (11-105-3) கூறுகிறது.

சிவபிரான் நிற்க முருகவேள் வீற்றிருத்தல் இந்த உபதேச நிலையில் மாத்திரம் அல்ல; பின்பு ஒருகால் சங்கப்புலவர்கள் (நக்கீரராதியோர்) முன்பு சிவபிரான் தன்கவிக்குக் குற்றம் கூறினவர் யார் என்று வினவி நின்று பேசவேண்டியிருந்தது.

முருகவேளோ சங்கப்புலவர்கள் நிற்கத் தாம் சாரதா பீடத்தமர்ந்து அவர்கள் கலகத்தைத் தீர்த்தருளினார். அதனால் "மூவர்கட்கரியான் நிற்ப, முத்தமிழ்சங்கத்தெய்வப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடுபோற்றி; "முருகன் சங்கத் திருப்பவன் நம் முக்கட்கடவுள் நிற்பவன்" என திருவால வாயுடையார் திருவிளையாடற்புராணம் போற்றுகின்றது.



சிவனுக்கு உபதேசித்த சாமிநாதன்

# 36. வராக அவதாரம் - வரலாறு

சந்தப்பாக்கள் எண்ணிலபாடி அழியா இன்பம் பெற்ற அருணகிரியார், சுவாமிமலை திருப்புகழ் "வாரமுற்றபண்பின்" எனத்துவங்கும் பாடலில், 6-வது அடியின் விரிவாக்கத்தில், வராக அவதாரம் பற்றிய குறிப்புகள் ஒரே அடியில் விரிவான வராக அவதாரத்தைப்பற்றி சுருங்கச் சொல்லியுள்ளது இவரது கவிப்புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

*வாரமுற்ற பண்பின் மரத முற்ற நண்பி*
*னீடு மெய்த் துயர்ந்து வயதாகி -*
*வாலை யிற்றி ரிந்து கோல மைக்கண் மங்கை*
*மார்க ளுக்கி சைந்து பொருள்தேடி;*

*ஆரமிக்க பொன்க ளால மைத்த மர்ந்த*
*மாப ணிக்கள் விந்தை யதுவான -*
*ஆட கொப்ப மைந்த வோலை முத்த முங்கொ*
*டாவி மெத்த நொந்து திரிவேனோ;*

*சூர னைத்து ரந்து வேர றப்பி ளந்து*
*சூழ்சு ரர்க்க ணன்பு செயும்வீரா -*
*சூக ரத்தொ டம்பு தானெ டுத்து வந்த*
*சூத னுக்கி சைந்த மருகோனே;*

*ஏரே திர்த்து வந்து நீர்கள் கட்டி யன்று*
*தானி றைக்க வந்த தொருசாலி -*
*யேமி குத்து யர்ந்த மாவ யற்கள் மிஞ்சு*
*மேர கத்த மர்ந்த பெருமானே -*

சூகரம்-என்றால் பன்றி. அம் பு அழகிய பூமியை; 'பூ' என்பது 'பு' எனக் குறுகிற்று.

சூதன் - தந்திரம் நிறைந்தவன் என்று பொருள்.

தேர்ப்பாகன் எனலுமாம்; பாரதப்போரில் அர்ச்சுனனுக்கு தேர்ச்சாரதியாய்க் கண்ணபிரான் உதவினர். அதனால் அவருக்குப் 'பார்த்தசாரதி' எனப்பெயர் வழங்கப்பட்டது.

திருமால் வராகமாய் பூமியை எடுத்துவந்த வரலாறு

இரணியாட்சன் எனும் அசுரன் பூமியைப்பாய்ப்போல் சுருட்டி எடுத்துக் கொண்டு, பாதாளத்திற்குச் சென்று ஒளிந்துக் கொண்டான். திருமால் பன்றி உருவம் கொண்டு பாதாளத்திற்குச் சென்று, தன்கொம்பினால் அவனைக் கொன்று பூமியை தனது கொம்பினால் தாங்கி, மேலே கொண்டுவந்து பழையநிலையில் வைத்தனர். இதனையே, "எயிறதன் துதிமிசை இதமமர் புவியது நிறுவிய எழிலர்" என சம்பந்தர் தேவாரம் (1-21-7) பகர்கின்றது.



வராக மூர்த்தி

# 37. இராவணன் கயிலையை எடுத்த வரலாறு

அருணகிரியார், தமது பாடலின் பின் 4 அடிகளில் தான், மூர்த்தங்களைகுறித்து பாடிவந்த போதிலும், முடிவில், பெருமாளே-தம்பிரானே எனும் பதங்களாலேயே முடிப்பர்.

"முதிரவுழையை" எனத்துவங்கும் பழநித்தலத் திருப்புகழில், 5-வது அடியில் இராவணனது வரலாற்று செய்தியை காணமுடிகிறது.

*முதிர வுழையை வனத்தில் முடுகி வடுவை யழித்து*
*முதிய கயல்கள் கயத்தி ளிடையோடி-*
*முரண வளரும் விழிக்குள் மதன விரகு பயிற்றி*
*முறைமை கெடவு மயக்கி வருமாதர்;*

*மதுர அமுத மொழிக்கு மகுட களப முலைக்கு*
*வலிய அடிமை புகுத்தி விடுமாய-*
*மனதை யுடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்*
*மகிழ வுனது பதத்தை யருள்வாயே;*

*சதுரன் வரையை யெடுத்த நிருத னுடலை வதைத்து*
*சகடு மருத முதைத்த தகவோடே-*
*தழையு மரமு நிலத்தில் மடிய அமரை விளைத்த*
*தநுவை யுடைய சமர்த்தன் மருகோனே;*

*அதிர முடுகி யெதிர்த்த அசுர ருடலை வதைத்து*
*அமரர் சிறையை விடுத்து வருவோனே-*
*அரிய புகழை யமைத்த பெரிய பழநி மலைக்கு*
*ளழகு மயிலை நடத்து பெருமாளே.*

மேலே கூறியபாடலில் 5-வது அடியில் கூறியுள்ள இராவணனைப்பற்றிய செய்திகள் பார்க்கலாம்.

திறமை வாய்ந்த இராவணன் திக்குவிசயம் செய்து வந்தபோது, அவனுடைய புஷ்பகவிமானம் கயிலைமலையை கடக்கமுடியாது தடைபட்டது.

இதனைக் கண்ட இராவணன் சீற்றமடைந்து, இந்தமலையை வேரோடு பறித்து எறிவேன் என்று விமானத்தினின்று அவன் கீழேஇறங்கி, மலையை தனது கைகளால் பெயர்த்து அசைக்கமுயன்றதும், சிவபிரான் தமது கால் விரலின் நகநுனியால் அம்மலையை அழுத்தினார். மலைக்கு கீழேயிருந்த இராவணன் நசுக்குண்டு அழுது புலம்பி, இறைவனை சாமகானத்தால் பாடி மகிழ்வித்து உய்ந்தனன். இதனைக் குறித்து சம்பந்தர் தேவாரத்தில்,

"*முந்திமா விலங்கலன் றெடுத்தவன் முடிகள் தோள்,*
*நெளிதரவே, உந்திமா மலரடி ஒருவிரல் உகிர்நுதியால்*
*அடர்ந்தார்*"(III-92-8)

"இலங்கையர் கோன்......எழுநரம்பின் இன்னிசை கேட்டின்புற்றான்" அப்பர் தேவாரம் (4-54-10) கூறுகிறது.



கயிலையை பெயர்க்க முயன்ற இராவணன்

# 38. கண்ணனது பெருமைகளைக் குறித்து

"தகரநறுமலர்" எனத்துவங்கும் பழநிதலத்துப் பாடலில், 5, 6-வது அடியில், கண்ணனது பெருமைகளை ஒன்று சேர்த்து கூறியுள்ளதைக் காணமுடிகிறது. பாடல் :

*தகர நறுமலர் பொதுளிய குழலியர்*
*கலக கெருவித விழிவலை படவிதி*
*தலையி லெழுதியு மலைவயி னுறவிடு வதனாலே-*
*தனயர் அனை தமர் மனைவியர் சினெகிதர்*
*சுரபி விரவிய வகையென நினைவுறு*
*தவன சலதியின் முழுகியெ யிடர்படு துயர் தீர;*

*அகர முதலுள பொருளினை யருளிட*
*இருகை குவிசெய்து ளுருகிட வுருகியெ*
*அரக ரெனவல னிடமுற எழிலுன திருபாதம்-*
*அருள அருளுடன் மருளற இருளற*
*கிரண அயில்கொடு குருகணி கொடியொடு*
*அழகு பெறமர கதமயில் மீசைவா இசைவாயே;*

*சிகர குடையினி னிரைவர இசைதெரி*
*கதுரன் விதுரனில் வருபவ னளையது*
*திருடி யடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்-*
*திகிரி வளைகதை வசிதநு வுடையவ*
*னெழிலி வடிவின னரவுபொன் முடிமிசை*
*திமித திமிதிமி யெனநட மிடுமரி மருகோனே;*

*பகர புகர்முக மதகரி யுழைதரு*
*வனிதை வெருவமுன் வர அருள் புரிக்க*
*பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே-*
*பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய*
*நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்*
*பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமானே.*

**கருத்து :-** (கோவர்த்தன) கிரியாம் குடையின்கீழ் பசுக் கூட்டம் வந்து சேர (குழல்) இசையைக் காட்டிய, சமர்த்தன், விதுரன் வீட்டுக்கு (உகந்து) வந்தவன், வெண்ணை திருடி அடி பட்டசிறியன் (திருவிக்ரமரூபங் கொண்ட) பெரியவன், மது எனும் அசுரனைக் கொன்றவன்.

சக்கரம் சங்கு கதை வாள் வில் என்னும் பஞ்சாயுதங்களை உடைய மேகநிறத்தை உடையவன் (காளிங்கன் எனும்) பாம்பின் அழகிய முடியின் மீது திமித திமி திமி என நடனம் செய்தவனு மாகிய-திருமால் என வர்ணித்து பாடியுள்ளது போன்று வேறு எந்த கவிகளிலும் பாடியுள்ளதாக அறிய முடியவில்லை.

இத்தனை வர்ணனைகளையும் கிருஷ்ணனுக்குப் பொருத்திப் பாடியுள்ளதை நோக்கின், வைணவர்கள் பாடலையும் விஞ்சி விடும் விதத்தில் அமைந்துள்ளதை நினைக்கின், உள்ளம் நெகிழ்கிறது.

# 39. சகடாசுரனை அழித்தது

அருணகிரியார், வைணவ சம்பந்தமான வரலாறுகளையும், சைவ சம்பந்தமான வரலாறுகளையும் ஒருங்கே கற்றுணர்ந்தவர் என்பது இவரது பாடல்களினால் அறியமுடிகிறது.

சமரஸ நோக்கில் பாடியுள்ளதால், இவரது பாடல்களுக்கு தோற்றமும் ஏற்றமும் உண்டாயிற்று என்றால் மிகையாகாது.

"வஞ்சனை மிஞ்சிய" எனத்துவங்கும் பழநித்தலத்து பாடலில், 5-வது அடியில், கம்சனால் ஏவப்பட்ட அசுரனது வரலாற்றினைப் பற்றி விளக்கம் அளித்ததை அறிய முடிகிறது.

பாடல் :-

*வஞ்சனை மிஞ்சிய மாய வம்பிகள்*
*வந்தவர் தங்களை வாதை கண்டவர்*
*வங்கண முந்தெரி யாம வன்புகள் பலபேசி-*
*மஞ்சமி ருந்தது ராத விந்தைகள்*
*தந்தக டம்பி களூற லுண்டிடு*
*மண்டைகள் கண்டித மாய்மொ ழிந்திடு முறையாலே;*

*சஞ்சல முந்தரு மோக லண்டிகள்*
*இன்சொல்பு ரிந்துரு காத தொண்டிகள்*
*சங்கம மென்பதை யேபு ரிந்தவ ளயராதே-*
*தங்களில் நெஞ்சக மேம கிழ்ந்தவர்*
*கொஞ்சிந டம்பயில் வேசை முண்டைகள்*
*தந்தசு கந்தனை யேயு கந்துடல் மெலிவேனோ;*

*கஞ்சன்வி டுஞ்சக டாசு ரன்பட*
*வென்றுகு ருந்தினி லேறி மங்கையர்*
*கண்கள்சி வந்திட வேக லந்தரு முறையாலே-*
*கண்டும கிழ்ந்தழ காயி ருந்திசை*
*கொண்டுவி ளங்கிய நாளி லன்பொடு*
*கண்குளி ருந்திரு மால்ம கிழ்ந்தருள் மருகோனே;*

*குஞ்சர வஞ்சியு மான்ம டந்தையு*
*மின்பமி குந்திட வேய ணைந்தருள்*
*குன்றென வந்தருள் நீப முந்திய மணிமார்பா-*
*கொந்தவி ழுந்தட மேநி ரம்பிய*
*பண்பு தருந்திரு வாவி னன்குடி*
*குன்றுக ளெங்கினு மேவ ளர்ந்தருள் பெருமாளே*

பாடலில் வரும் 5-வது அடியில் கூறப்படும் வரலாறு:- நந்தகோபனது வீட்டில் ஒருசகடத்தின் (வண்டியின்) கீழ்க்கோடியில் கிருஷ்ணபகவான் பள்ளிகொண்டிருந்த போது, கம்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் அந்த வண்டியில்புகுந்து, அவரைக் கொல்லவரும் சமயம், கிருஷ்ணன் பாலுக்கு அழுகிற பாவனையில் அவ்வண்டியை உதைத்த மாத்திரத்தில், அது கவிழவும் அசுரன் மாண்டான் எனும் வரலாற்றினை அறிவிக்கிறது.

# 40. ஞானசம்பந்தர் அவதரித்த தலம் - 12 பெயர்களைக் கொண்டது.

ஞானசம்பந்தர் சீகாழியில் சிவபாதஇருதயருக்கு மகனாக அவதரித்தார். இத்தலத்துக்கு வழங்கப்பட்ட பலபெயர்களின் பெயர்க்காரணம்.

1. கணபதியால் கொல்லப்பட்ட கஜமுக அசுரனுக்கு அஞ்சின வேணும் எனும் இந்திரன் பூசித்த தலமாதலின்- வேணுபுரம் என வழங்கலாயிற்று

2. சூரனுக்கு அஞ்சின தேவர்கள் புகலிடமாக வந்த தல மாதலின் - திருப்புகலி எனப்பட்டது.

3. தேவகுருவாம் பிரகஸ்பதி தான் இழந்த அதிகாரத்தை மீட்டுப் பெற அதிகாரத்தை பெற்றதலம்- வெங்குரு எனப்பட்டது.

4. பூவுந்தாராயும் பூஜித்தால், பூந்தாராய் எனப்பட்டது.

5. அமிர்தம் பங்கிட்ட போது, திருமாலால் சிரம் தறிபட்ட ராகு கேதுக்களின் இரண்டு சிரங்களும் தமது உடல் வேண்டி பூஜித்ததால் சிரபுரம் எனப்பட்டது.

6. கௌதம முனிவரின் சாபத்தால் புறாவான பிரசாபதி எனும் ரிஷி, தான் உண்ணத் தன் உடன் மாமிசத்தைக் கொடுத்த அரசன் நல்ல உடல் மீண்டும் பெறவும், தன் சாபம் தீரவும் பூசித்து பேறு பெற்ற தலமாதலின் புறவம் எனப்பட்டது.

7. துர்வாசருடைய சாபத்தால், கிருஷ்ணபகவானைச் சார்ந்த கோபாலரெல்லாரும் சண்பைக் கதிர்களால் குத்துண்டு மாண்டார்கள். கிருஷ்ணபகவானும் பரமபதம் அடைந்தார். அந்தத் தோஷம் தம்மைத் தாக்காதிருக்க துர்வாசர் பூசித்த தலமாதலின், துர்வாசர் சண்பைமுனி எனப்பட்டார். தவம் சண்பை எனப் பெயர் பெற்றது.

8. காளி என்கிற நாகம் பூசித்ததால் சீகாழி எனப்பட்டது.

9. மற்ற ரிஷிகளின் சாபத்தால் பராசரமுநிவர் மச்சகந்தியை மணந்து மச்சகந்தம் - துர்கந்தம் உடலில் பற்றப் பெற்றார். அவர் சீகாழியில் பூசித்து அந்த கொச்சை நாற்றம் நீங்க பெற்றார் ஆதலின் கொச்சை என வழங்கலாயிற்று.

10. இததலத்தில் ஆன்மாக்களின் மலம் கழுவப்படலால் கழுமலம் என்றாயிற்று.

11. பிரமன் பூஜித்ததால் பிரமபுரம் என வழங்கலாயிற்று.

12. பிரளயகாலத்தில் தோணிபோல மிதந்த காரணத்தால் தோணிபுரம் என வழங்கலாயிற்று.



**திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் வழங்கியருளிய பிரமதீர்த்தக்கரை**

# 41. சருவியிகழ்ந்து - பாடலில் முருகனது குணாதிசயங்கள்

அருணகிரியார், "சருவியிகழ்ந்து" எனத்துவங்கும் சீகாழிப் பாடலில், முதல் நான்கு அடிகளிலும் முருகனது குணாதிசயங் களைப்பற்றியும், பின் 4 அடிகளில் திருமாலின் 10 குணாதிசயங் களைப்பற்றியும் காணமுடிகிறது. பொதுவாக, முதல் 4 அடிகளில், இறைவனிடம் விண்ணப்பிக்கமாகவும், பின் 4 அடிகளில் முருகனுடைய கீர்த்திகளை புகழ்வதாயும் - குறித்துப் பாடின போதிலும், அந்த மேலே குறித்த பாடல் மட்டும், முதல் நான்கு அடிகளில் முருகனுடைய குணாதிசயங்களையும், பின் 4-அடிகளில் திருமாலின் 10 குணாதிசயங்களையும் குறித்து பாடியுள்ளது மிகவும் புதுமையானது. பாடல் :

*சருவி யிகழ்ந்து மருண்டு வெகுண்டுறு*
*சமயமு மொன்றிலை யென்ற வரும் பறி*
*தலையரு நின்று கலங்க விரும்பிய தமிழ்கூறுஞ்-*
*சலிகையு நன்றியும் வென்றியு மங்கள*
*பெருமைக ளுங்கன முங்குண மும்பயில்*
*சரவண மும்பொறை யும்புக ழுந்திகழ் தனிவேலும்*

*விருது துலங்க சிகண்டியி லண்டரு*
*முருகி வணங்க வரும்பத மும்பல*
*விதரண முந்திற முந்தர முந்தினை புனமானின்-*
*ம்ருகமத குங்கும கொங்கையில் நொந்தடி*
*வருடிம ணைந்துபு ணர்ந்தது வும்பல*
*விஜயமு மன்பின்மொ ழிந்துமொ ழிந்தியல் மறவேனே*

*கருதியி லங்கை யழிந்துவி டும்படி*
*அவுணர டங்கம டிந்துவி ழும்படி*
*கதிரவ னிந்து விளங்கி வரும்படி விடுமாயன்-*

*கடகரி யஞ்சி நடுங்கி வருந்திடு*
*மடுவினில் வந்துத வும்புய லிந்திரை*
*கணவன ரங்க முகுந்தன் வருஞ்சக டறமோதி;*

*மருது குலுங்கி நலங்க முனிந்திடு*
*வரதன லங்கல் புனைந்தரு ளுங்குறள்*
*வடிவனெ டுங் கடல் மங்கவொ ரம்புகை தொடுமீளி*
*மருகபு ரந்தர னுந்தவ மொன்றிய*
*பிரமபு ரந்தனி லுங்குக னென்பவர்*
*மனதினி லும்பரி வொன்றிய மர்ந்தருள் பெருமாளே.*

பாடலில் பொதிந்துள்ள கருத்தைப்பார்ப்போம்:- முன்பகுதி மதப்போராட்டத்தில் ஒருவனை ஒருவர் இகழ்ந்தும் மருட்சி அடைந்தும், கோபித்தும் வருவதான சமயங்களும் சமயமே இல்லை என்பவரும், பறிதலையராம் சமணரும் இங்ஙனம் யாவரும் கலங்கும்படியாக, தமிழ்ப் பாடல்களைச் சொல்லும் செல்வாக்கையும், உபகாரகுணத்தையும், வெற்றியையும் பலபெருமைகளையும், நற்குணத்தையும், உனது பொறுமையும் - புகழையும் விளங்கும் ஒப்பற்ற வேலாயு தத்தையும் வெற்றிச் சின்னங்கள் விளங்க மயில் மீது தேவர்களும் மனம் உருகி வணங்கும்படியாக வருகின்ற திருவடியையும் உனது பலவிதமான கொடைத்தன்மைகளையும், உனது சாமர்த்தியத்தையும், தகுதியையும் தினைப்புனத்து மான் வள்ளியின் கஸ்தூரி குங்குமம் அணிந்துள்ள கொங்கையில் மயங்கி நொந்து, அவளது திருவடியைவருடி மணஞ்செய்து, அவளைப் புணர்ந்து அணைந்து நின்றதையும், பின்னும் உனது பல வெற்றிச் செயல்களையும், அன்புடனே மொழிந்து மொழிந்து போற்றித்துதித்து, உனது பெருமையை என்றும் மறவேன்.

**பின்பகுதி :-**

இராவணன் தன்பிழையை மனத்தில் எண்ணி, இலங்கை அழிந்துபோம்படியும், சூரியனும், சந்திரனும் பழையபடி விளக்கத்துடன் வரும்படியும் செய்த திருமால், கஜேந்திரன்

பயந்து நடுக்கமுற்று, வருத்தமுற்றிருந்த மடுவினிடத்தே வந்து உதவின மேகநிறப் பெருமான், இலக்குமி கணவன், சீரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் முகுந்தன், தன்னைக் கொல்ல வந்த அசுரன் மாளும்படி வண்டியை உதைத்து மோதினவன் மருதமரம் குலுங்கி நொந்து போகக் கோபித்தவரதன். மாலை சூடியருளும் வாமனவடிவ மூர்த்தி, பெரியகடல் நொந்து வாட்டமுற ஒரு அம்பைக் கையால் தொட்ட பராக்ரமசாலி ஆகின்ற திருமாலின் மருகனே! இந்திரன் தவம் பொருந்திச்செய்த சீகாழி எனும் தலத்திலும், குகன் என்பவர் மனத்திலும் அன்பு பொருந்தி அமர்ந்தருளும்-பெருமாளே!

(பல விஜயமும் அன்பின் மொழிந்து மொழிந்தியல் மறவேனே)



வள்ளிதேவசேனாவுடன் முருகன்

# 42. முருகவேள் பூமியை வலம் வந்தது

அருணகிரியார், புகழ் சிகரத்தின் உச்சிக்கே சென்று நாராயணனை புகழ்ந்தபோதிலும், பாட்டின் இறுதியில் இன்னாருக்கு மருகனே எனக் கூறி, பாட்டின் அடியை முடிப்பார். அதே போன்று, சிவனைக் குறித்து பாடிய பாடல்களிலும் இன்னாருக்கு மைந்தனே என்றுதான் முடிப்பது வழக்கம். விநாயகரைத் துதி செய்து பாடியபோதிலும், இறுதியில் இன்னாருக்கு தம்பியே என்றுதான் பாடலை முடிப்பார். மேலும், இவரது பாடல்கள் அனைத்திலும், முற்பகுதி 4-அடிகளில் குறைகளை நீக்க விண்ணப்பித்தும், பிற்பகுதி 4-அடிகளில் முருகனது அரிய பெருமைகளைக் கூறி முடிப்பதைக் காண முடிகிறது.

“பெரியதோர்கரியிரு” எனத்துவங்கும் பழநித்தலத் திருப்புகழில் 6-வது அடியில் உலகை வலம் வந்த செய்தியை அறிய முடிகிறது.

*பெரியதோர் கரியிரு கொம்பு போலவே*
*வடிவமார் புளகித கும்ப மாமுலை*
*பெருகியே யொளிசெறி தங்க வாரமு மணியான-*

*பிறையதோ வெனுநுதல் துங்க மீறுவை*
*அயிலதோ வெனுமிரு கண்க ளாரவெ*
*பிறகெலாம் விழுகுழல் கங்கு லாரவெ வருமானார்;*

*உரியதோர் பொருள்கொடு வந்த பேர்களை*
*மனையிலே வினவியெ கொண்டு போகிய*
*யுளவிலே மருவிய வஞ்ச மாதர்கள் மயலாலே -*

*உருகியே யுடலற வெம்பி வாடியெ*
*வினையிலே மறுகியெ நொந்த பாதக*
*னுனதுதாள் தொழுதிட இன்ப ஞானம் தருள்வாயே;*

*அரியதோ ராமரர்க ளண்ட மேறவெ*
*கொடியதோ ரசுரர்க ளங்க மாளவெ*
*அடலதோ டமர்புரி கின்ற சூரிய வடிவேலா-*
*அரகரா வெனமிக அன்பர் சூழவெ*
*கடியதோர் மயில்மிசை யன்றை யேறியெ*
*அவனியோர் நொடிவரு கின்ற காரண முருகோனே;*

*பிரியதோர் கியிறனை கொண்டு வீசவெ*
*உறியதோய் தயிர்தனை யுண்டு நாடியெ*
*பசியதோ கெடவருள் கொண்ட மாயவன்*
*மருகோனே-*
*பரமமா நதிபுடை கொண்ட ணாவவெ*
*வனசமா மலரினில் வண்டு லாவவெ*
*பழநிமா மலைதனி லென்று மேவிய பெருமாளே.*

**முருகவேள் பூமியை வலம் வந்தது :**

ஒருமுறை சிவனும் தேவியும், விநாயகரையும், முருகரையும் நோக்கி இவ்வுலகினை முதலில் வலம் வருபவர்க்கு இம்மாதுளங்கனி (மாம்பழம் எனவும் சிலர் கருதுவர்) தருவேன் என அறிவித்தனர்.

உடனே, முருகவேள் மயில் மீதேறி உலகை ஒரு நொடியில் வலம் வந்தார். அங்ஙனம் அவர் வருவதற்குள், விநாயகர் உலகெலாம் தம் பெற்றோருள் அடக்கம் என அறிந்து தாய், தந்தையரை வலம் வந்து பழத்தைப் பெற்றுக் கொண்டார்.

இதனைக் கண்டதும், முருகவேள் கோபம்பூண்டு திருவாவினன்குடிக்கு வர, இறைவனும் தேவியும் அங்கு வந்து, பழம் நீயே ஆதலின் உமக்கு வேறு பழமும் வேண்டுமோ என அவருக்கு ஆறுதல் கூறினர். "பழம்நீ" என்பது பழநி என மருவி வழங்கலாயிற்று.

**முருகவேள் (பூமிக்கு) வந்த வரலாறு :**

பழநி - சிவகிரி என்பது. அகத்தியர் தம்மை வணங்கிய இடும்பாசுரனை நோக்கி வடக்கே திருக்கேதாரத்துக்கு அருகே இருந்த சிவகிரி, சத்திகிரி எனும் இரண்டு மலைகளையும் கொண்டு வரும்படி கட்டளையிட்டார். இடும்பனும் அப்படியே

வடக்கே சென்றான். அகத்தியர் உணர்த்திய மந்திரவலிமை யினால் பிரம்மதண்டம் தோளுக்கு தடியாகவும், அஷ்ட நாகங்களும் கயிறாகவும் இடும்பன் முன்னிலையில் தோன்ற அவன், அகத்தியர் குறித்த அந்த இரண்டு மலைகளையும் காவடி போலக்கட்டித் தூக்கி தெற்கு நோக்கி வந்தான். வரும்போது ஆவினன்குடியில் அந்த இருமலைகளையும் இறக்கி இளைப்பாறினான். பின்னர் எடுக்க முயன்றபோது அவனால் எடுக்க முடியவில்லை. ஏனென்று அவன் பார்த்தபோது, சிவகிரியின் மீது அழகுபொலியும் ஒரு சிறுவன் இருக்கக் கண்டான். இடும்பன் அப்பாலகனை மலையை விட்டு இறங்கச் சொன்னான். சிறுவன் (முருகவேள்) "இஃது எமது இருக்கை; யாம் போகேம்" என மறுத்தனன். இடும்பன் கோபித்து, அச்சிறுவன் மேல் பாய்ந்தான். பாய்ந்தவன் தடாரென்று விழுந்து மூர்ச்சையானான். இந்நிகழ்ச்சியை அறிந்த அகத்தியர், அங்கு வந்து ஆண்டவனை வணங்கினார். பின்னர் இடும்பனை உயிர்பிக்கச் செய்தார். தன்னைப்போல காவடி கொண்டு வரும் அடியவர்களுக்கு வேண்டும் வரங்களை நல்கிட, இடும்பன் இறைவனிடம் பிரார்த்திக் கொண்டான். "அங்ஙனமே ஆகுக" என அருள்புரிந்தார்.



முருகரும், வினாயகரும் உலகை வலம் வந்தது

# 43. சுந்தரர், குண்டையூரில் நெல் பெற்ற வரலாறு

அருணகிரியார் பாடிய பாடல்களில் சுந்தரரைப் பற்றியே பல பாடல்கள் புகட்டுகின்றன. இதனால் சுந்தரரை நன்கு அறிந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது. "நெற்றி வெயர்த்துளி" எனத் துவங்கும் பழநித்தல பாடலில் சுந்தரரைப் பற்றிய சில செய்தி குறிப்புகள் வந்துள்ளன. சமயக்குரவர்கள் நால்வரில் சுந்தரரே கல்வி பயின்றவராவார். பாடல் :

*நெற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு*
*குத்துமு லைக்குட மசைத்து வீதியி*
*னிற்பவர் மைப்படர் விழிக்க லாபியர் மொழியாலே-*

*நித்தம யக்கிகள் மணத்த பூமலர்*
*மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுட*
*னெட்டுவ ரத்தொழில் கொடுத்து மேவியு முறவாடி;*

*உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு*
*மெத்தவு நட்பொடு பறித்து நாடொறு*
*முற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்க ளுறவாமோ-*

*உச்சித மெய்ப்புற அனைத்த யாவுடன்*
*மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற*
*வுட்குளிர் புத்தியை யெனக்கு நீதர வருவாயே;*

*கற்றத மிழ்ப்புல வனுக்கு மேமகிழ்*
*வுற்றொரு பொற்கொடி களிக்க வேபொரு*
*கற்பனை நெற்பல அளித்த காரண னருள்பாலா-*

*கற்பந கர்க்களி றளித்த மாதணை*
*பொற்புய மைப்புயல் நிறத்த வானவர்*
*கட்கிறை யுட்கிட அருட்க்ரு பாகர எனநாளும்;*

*நற்றவ ரர்ச்சனை யிடத்த யாபர*
*வஸ்துவெ னப்புவி யிடத்தி லேவளர்*
*நத்தணி செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே-*

*நட்டுவர் மத்தள முழக்க மாமென*
*மைக்குல மெத்தவு முழக்க மேதரு*
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே.

பாடலின் 5-வது அடியில் சுந்தரரது செய்திக் குறிப்புகள் வந்துள்ளதை காண முடிகிறது.

**கற்ற தமிழ்ப்புலவன்** : சுந்தர மூர்த்தி சுவாமிகள். இவர் திருக்குறள் ஆதிய பழைய தமிழ் நூல்களில் நல்ல பயிற்சிப் பெற்றவராவார். ஆதாரம் :- திருநெல்வாயில் அறத்துறைப் பதிகம் பகருகிறது.

பொற்கொடி - பரவை நாச்சியார். சுந்தரர் திருவாரூரில் பரவையாரொடு வாழ்ந்திருந்த நாளில், குண்டையூர்கிழார் என்பவர் சுந்தரருக்கு நெல் தவறாது அளித்தவராவார். ஒரு சமயம், மழையின்றி பயிர் வளம் சுருங்க, சுந்தரருக்கு நெல் அனுப்ப இயலாமைக்கு வருந்தினார். அவரது மனக்குறையை நீக்க, இறைவன் குண்டையூர் முழுவதிலும் நெல்மலையை அளித்தார். இந்த நெல்மலை எங்ஙனம் திருவாரூருக்குச் சுந்தரர் வீட்டுக்கு போய்ச் சேருவது என, குண்டையார்கிழார் வருத்தம் அடைந்தார். இச்செய்தியை சுந்தரரிடம் பகன்றார்.

சுந்தரர் கோளிலி எனும் தலத்திற்குச் சென்று, "நீள நினைந்தடியேன்" எனத் தொடங்கும் பதிகம் பாடினார். "குண்டையூர்ச் சில நெல்லும் பெற்றேன், ஆளிலை எம்பெருமான் அவை அட்டித்தரப் பணியே" என துதிசெய்தார்.

இறைவன் ஆணையால் அந்த நெல்மலை, பூதகணங்களால் திருவாரூரில் சேர்க்கப்பட்டன. பரவையாரும் மிக மகிழ்ந்து, அவ்வூராரெல்லாரும் தங்கள் தங்கள் வீட்டின் எல்லை சேர்ந்த நெற்குவியலை பகிர்ந்து கொள்ளவும் என்று பறையறை வித்தார்.

பெரியபுராணத்தில் கூறப்பட்ட இவ்வரலாற்றினை அருணகிரியார் தாம் பாடிய பழநிதலத்துத் திருப்புகழில் 5-அடியில் எந்த அளவு கனப் பொருத்தமாக சந்தத்தோடு இழைய பாடியுள்ளதை நினைக்கின் உள்ளம் பூரிக்கிறது.

# 44. திருவாலங்காட்டு நீலி வரலாறு

நினைத்தால் முத்தியளிக்கும் சிவஸ்தலமாகிய திருவண்ணா மலையைப் போல, திருச்செந்தூரை கருதுவார்க்கும் முத்தியளிக்கும். "செந்திலை யுணர்ந்துணந் துணர்வுற" என திருச்செந்தூரை உரைத்துய்திட வழிவகுக்கும். மேலும், "கயிலைமலை அனைய செந்தில்" என மற்றோர் திருப்புகழிலும் பாடியுள்ளதிலிருந்து இத்தலத்துப் பெருமை புலப்படும்.

அருணகிரியாருக்கு செந்தூரில் அன்னார் முன்பே கொஞ்சி நடனத்தைக் கொள்ளும் கந்தவேளின் பெருமையை புகழ்ந்து பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

அருணகிரியார் பாடிய "உருக்கம் பேசிய நீலியர்" என முதலடியிலே பாடியுள்ளதில் பொதிந்துள்ள வரலாற்றுச் செய்தியின் விரிவாக்கம் :

*உருக்கம் பேசிய நீலியார் காசுகள்*
*பறிக்குந் தோஷிகள் மோகவி காரிகள்*
*உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே-*
*உரைக்கும் பீரிகள் கோளரா வாமென*
*வுடற்றுந் தாதியர் காசள வேமனம்*
*உறைக்குந் தூரிகள் மீதினி லாசைகள்*
*புரிவேனோ;*

*அருக்கன் போலொளி வீசிய மாமுடி*
*யனைத்துந் தானழ காய்நல மேதா*
*அருட்கண் பார்வையி னாலடி யார்தமை*
*மகிழ்வோடே-*
*அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண*
*வடிப்பந் தானென வேயெனை நாடோறும்*
*அதிக்கஞ் சேர்தர வேயரு ளாலுட*
*னினிதாள்வாய்;*

*இருக்குங் காரண மீறிய வேதமும்*
*இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்*
*இடுக்கண் தீர்கன னேயடி யார்தவ முடன்மேவி-*
*இலக்கந் தானென வேதொழ வேமகிழ்*
*விருப்பங்க கூர்தரு மாதியு மாயுல*
*கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா;*
*திருக்குந் தாபதர் வேதிய ராதியர்*
*துதிக்குந் தாளுரைய நாயக னாகிய*
*செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே-*
*செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய*
*கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்*
*திருச்செந்தூர்தனில் மேவிய தேவர்கள்*
*பெருமாளே*

உருக்கம் பேசிய நீலியார் - உருக்கம் உள்ளவர் போல் நடிப்பவர். நீலி - திருவாலங்காட்டுப் பெண், பேய் - நீலியின் வரலாற்றைக் குறித்து, அருணகிரியார் ஒரே வரியில் உருக்கம் பேசிய நீலியார் என சுருங்கச் சொல்லியுள்ளதின் வரலாற்றை அறிய முடிகிறது.

தனது மனைவியின் கற்பிற் சந்தேகங் கொண்டு, பிராமணன் ஒருவன் அவளைக் கொன்றுவிட்டான். அடுத்த பிறவியில் அவன் ஒரு செட்டி மகனாகப் பிறந்தான். தன்குலத்தைச் சேர்ந்த நங்கை ஒருத்தியை மணந்தான். அவள் கருப்பமாய்தாய் வீட்டிற்கு பிரசவத்திற்காக போயிருந்தாள். செட்டி, தன் மனைவியை அழைத்துப் போக வந்தான். மாமனார் வீட்டார் பிரசவமான பின்பு அவளை அனுப்பி வைப்பதாகச் சொன்னார் கள். செட்டியும் தன் ஊருக்குத் திரும்பினார். வருகிற வழியில், முன்ஜென்மத்திற் கொலையுண்ட மனைவியின் பிருமஹத்தி செட்டியின் மனைவி போல வடிவெடுத்து எதிர்பட்டு உங்களை விட்டுதனியே இருக்க மனம் வரவில்லை. நானும் வந்து விட்டேன் என்றதும், செட்டி இதில் ஏதோ கபடம் (மாயம்) என உள்ளதாக உணர்ந்தான்.

நீ என் மனைவியல்ல. என் மனைவி தாய்வீட்டில் இருக்கிறாள் எனக் கூறியதும், இருவருக்கும் தருக்கம் வர, செட்டி அடுத்திருந்த திருவாலங்காட்டுப் பழையனூர் வேளாளர்கள் முன்பு முறையிடலானான். செட்டியின் மனைவி போல உருவெடுத்து வந்த பிருமஹத்தி நான் இவர் மனைவிதான். கர்ப்பமாயிருக்கிறேன். இன்று இரவு ஒரு வேளை மட்டும் இவருடன் ஒரு அறையில் படுக்க உத்தரவு இடுங்கள் என மன்றாடினாள். இதைக் கேட்ட வேளாளர்கள், நீ இவளுடன் படுத்துக் கொள். உனக்கு ஏதாகிலும் ஆபத்து நேரிடின் நாங்கள் எழுபது பேரும் எங்கள் உயிரைக் கொடுக்கின்றோம் எனக்கூறி அவனை அவளுடன் படுக்கச் செய்தனர். பொழுது விடிந்ததும் அவளைக் காணமுடியவில்லை. செட்டியின் உடல் கிழிபட்டு கிடந்தான். இதனைக்கண்ட எழுபதுபேரும், தாம் வாக்களித்த வாறே தத்தம் உயிரை விட்டனர். இதனடிப்படையில் தான், “நீலிவேஷம் ஏன் போடுகிறாய்? திருவாலங்காட்டு நீலி அழுகை ஏன் அழுகிறாய்” எனும் பழமொழிகள் வழங்கலாயின. இவ்வரலாற்றினையே சம்பந்த பெருமான், திருவாலங்காட்டுத் தேவாரத்தில் :

“*வஞ்சப்படுத் தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்டு*
*அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டு எம்அடிகளே*”

எனக் குறித்துள்ளார்.



பேயுருவெடுத்த ஆலங்காட்டு நீலி

# 45. சுந்தரரும் சேரமான் பெருமானும்

அருணகிரியார், முருகனை அர்ச்சித்து பூஜை செய்ய கருதி, "நாதவிந்துகலாதி" எனும் பாடலின் கண், 7-வது அடியில், சுந்தரரையும், சேரமான் பெருமானையும் இணைபிரியா தோழர்களாகக் கருதி, பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கது.

*நாத விந்துக லாதீ நமோநம*
*வேத மந்த்ரசொ ரூபா நமோநம*
*ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி*
*நாம சம்புகு மாரா நமோநம*
*போக அந்தரி பாலா நமோநம*
*நாக பந்தம யூரா நமோநம பரசூரர்;*
*சேத தண்டவி நோதா நமோநம*
*கீத கிண்கிணி பாதா நமோநம*
*தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ*
*தீப மங்கள ஜோதீ நமோநம*
*தூய அம்பல லீலா நமோநம*
*தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்*
*ஈத லும்பல கோலால பூஜையும்*
*ஓத லுங்குண ஆசார நீதியும்*
*ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத-*
*ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை*
*சோழ மண்டல மீதே மநோகர*
*ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா;*
*ஆத ரம்பயி லாரூரர் தோழமை*
*சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்*
*ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி-*
*ஆதி யுந்தவு லாவாசு பாடிய*
*சேரர் கொங்கு வைகாவூர் நனாடதில்*
*ஆவினன் குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே*

இப்பாடலில் 7-வது அடியில் பாடியுள்ளதின் வரலாறு ஆயிரத்து நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இருந்துவரும்,

தேவாரம் பாடினவருமான சுந்தரமூர்த்தி பெருமானுக்கு மிக உகந்த நண்பர் சேரமான் பெருமான் என்னும் சேரநாட்டு அரசர். குடிமக்கள் கழறுவன (கொள்வன) எல்லாம் தாம் இருந்த இடத்தே தமக்குத் தெரியும்படியான வரத்தை இவர் பெற்றிருந்ததால் இவருக்கு கழறிற்றறிவார் நாயனார் என்றும் பெயருண்டு.

இறைவன் அனுப்பின வெள்ளையானையின் மீது சுந்தரர் கயிலைக்குச் சென்றபோது, தமது ஆத்ம நண்பராம் சேரனை அவர் நினைத்தார். இதை அறிந்த சேரமான் உடனே ஒரு குதிரையின் மீதேறி, சுந்தரர் ஏறிச் செல்லும் யானையை வலம்வந்து, சுந்தரருக்கு முன்னே கயிலையை அடைந்தார். இறைவனது ஆணையின்றிச் சென்ற படியால் சேரமான் கயிலை வாயிலில் தடைபட்டு நிற்க வேண்டியதாயிற்று. அவ்விதம் தடைபட்டு நின்ற காலத்தை வீணாக்காது. "திருகயிலாய ஞான உலா" எனும் ஒரு பிரபந்தத்தை ஆசுகவியாகப்பாடி சுந்தரர் வந்தபின் அவர் உதவியால் இறைவனுடைய சந்நிதியை அடைந்து அங்கே அந்த உலாவை அரங்கேற்றினார். இவ்வரலாற்றின் விரிவை பெரியபுராணத்தில் காணமுடிகிறது.

தமிழ் மொழியில் உள்ள உலாக்களில் இதுவே காலத்தில் முந்தியதால் 'ஆதிஉலா' எனவும், கயிலாயத்தில் பாடப்பட்டப் படியாலும் கயிலை வள்ளலின் உலாவைக் கூறினபடியாலும், "கயிலாய ஞான உலா" எனவும் இவ்வுலா பெயர் பெறும்.

இத்தனை அரிய வரலாற்றினை பாடலின் 7-வது அடியில் பாடியுள்ளது இவரது புலமைக்கும், பக்திக்கும் ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.



சுந்தரரும் சேரமானும் கயிலை செல்லுதல்

# 46. திருமாலின் பெருமையைக் கூறும் அழகு

அருணகிரியார், "அங்கைமென் குழலாய்" எனத்துவங்கும் திருப்புகழ் பாடலின் மூலம் திருமாலின் பெருமையைக் குறித்து 5, 6, 7 அடிகளில் சந்தத் தமிழில் பாடியுள்ளதைக் காண முடிகிறது. பாடல் :-

*அங்கை மென்குழ லாய்வார் போலே*
*சந்தி நின்றய லோடே போவா*
*ரன்பு கொண்டிட நீரே போறீ ரறியீரோ-*
*அன்று வந்தொரு நாள்நீர் போனீர்*
*பின்பு கண்டறி யோநா மீதே*
*அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா;*

*எங்க ளந்தரம் வேறா சோர்வார்*
*பண்டு தந்தது போதா தோமே*
*லின்று தந்துற வோதா னீதே னிதுபோதா;*
*திங்கு நின்றதென் வீடே வாரீ*
*சென்றி ணங்கிகள் மாயா லீலா*
*இன்ப சிங்கியில் வீணே வீழா தருள்வாயே;*

*மங்கு லின்புறு வானாய் வானூ*
*டன்ற ரும்பிய காலாய் நீள்கால்*
*மண்டு றும்பகை நீறா வீறா எரிதீயாய்-*
*வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்*
*அம்ப ரம்புனை பாராய் பாரேழ்*
*மண்ட லம்புகழ் நீயாய் நானாய் மலரோனாய்;*

*உங்கள் சங்கரர் தாமாய் நாமார்*
*அண்ட பந்திகள் தாமாய் வானாய்*
*ஒன்றி னுங்கடை தோயா மாயோன் மருகோனே-*

*ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்*
*செந்தி லம்பதி வாழ்வே வாழ்வோர்*
*உண்ட நெஞ்சறி தேனே வானோர் பெருமாளே*

இப்பாடலில் 5, 6, 7 அடிகளின் கருத்தை கீழே கொடுக்கப் பட்டுள்ளது. மேகங்கள் இன்புற்று உலவும் வானாகவும், வானின் நின்று அன்று வெளிப்பட்ட காற்றாகவும், பெருங்காற்றுடன் கூடி நெருங்கி வரும்பகைகளை நீறாக்கும் வன்மை கொண்டுள்ள எரிநெருப்பாகவும் வந்து ஒலித்து எழுகின்ற நீராகவும், நீர் சூழ்ந்த (கடல் எனும்) ஆடையைப்புனைந்த பூமியாகவும், ஏழுபாரும் - அதாவது (பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மகலோகம், நவலோகம், சனலோகம், சத்யலோகம்) ஏழு மண்டலங்களும் புகழ்கின்ற நீயாகவும், நானாகவும் (தாமரை) மலரில் உறையும் பிரமனாகவும், உங்கள் தந்தையாம் சங்கரராகவும், அச்சம் தரும் அண்ட கூட்டங்களாகவும், மூலப் பொருளாகவும் (தோய்ந்து) எதனிலும் இறுதியிற் தோயாதிருக்கின்ற மாயனாம் திருமால்.

இதுபோன்று திருமாலின் வர்ணனைகள் வைணவப் பாடல்களிலும் காண்பதரிது. தாளத்தோடு பொருக்தி, சந்தம் அமைத்து பாடியுள்ளதை நோக்கின் அருணகிரியாரை எவ்வாறு புகழ்வது என்றே தோன்றுகிறது.

சரித்திரத்தின் வரலாற்றோடு சந்தமும் ஒரு சேர தமிழில் பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கதென்றாகும். நாராயண னுக்குப் பெருமை சேர்த்து பாடியது சைவப்பாடல்களில் காண்பதரிது.

அதனால், அருணகிரியாரை "சொல்லின் செல்வர்" எனப்புகழ முடிகிறது.

# 47. மருதமரங்கள் விமோசனம் பெற்றது

அருணகிரியார் முருகனுக்கு எந்த அளவு பெருமை சேர்க்க எண்ணினாரோ அதற்கு ஈடாக அன்னாரின் மாமனாருக்கும் பெருமை சேர்க்க தவறியதில்லை. இதற்கு உதாரணமாக, "மருமலரினன்" எனத்துவங்கும் பழநித்தலத்து பாடல் உதவுகிறது. பாடல் :-

*மருமலரி னன்து ரந்து விடவினைய ருந்த அந்தி*
*மதியொடுபி றந்து முன்பெய் வதையாலே-*
*வகைதனைம றந்தெ ழுந்து முலைதனைய ருந்தி யந்த*
*மதலையென வந்து குன்றின் வடிவாகி*

*இருமயல்கொ டுந்து வண்டு பொதுவையர கம்பு குந்து*
*இரபுகல் கொண்டொ டுங்கி யசடாகும்-*
*இருவினைபொ திந்த இந்த ஜனனமர ணந்து றந்து*
*னினையடிவ ணங்க என்று பெறுவேனோ;*

*திருவொடுபெ யர்ந்தி ருண்ட வனமிசைந டந்தி லங்கை*
*திழெரியி டுங்கு ரங்கை நெகிழாத-*
*திடமுளமு குந்தர் கஞ்சன் வரவிடுமெல் வஞ்ச கங்கள்*
*செறிவுடன றிந்து வென்ற பொறியாளர்;*

*பரிவொடும கிழ்ந்தி றைஞ்சு மருதிடைத வழ்ந்து நின்ற*
*பரமபத நண்ப ரன்பின் மருகோனே-*
*பதுமமிசை வண்ட லம்பு சுனை பலவி ளங்கு துங்க*
*பழநிமலை வந்த மர்ந்த . பெருமாளே.*

**இப்பாடலில் 7-வது அடியில் கூறியுள்ள வரலாற்றினை விளக்கியுள்ளது.**

நளகூபரன், மணிக்ரீவன் எனும் குபேரபுத்திரர்கள் இருவரும் ஒரு சமயம் மதுபானம் செய்து ஜலக்ரீடை செய்து ஆடையின்றி இருந்த சமயம் நாரதர் அங்கு வரநேர்ந்தது. இவர்கள் ஆடையின்றி இருந்த நிலையைப் பார்த்த நாரதர் வெகுண்டு மரம்போல் ஆடையின்றி நிற்கும் நீங்கள் மரமாகக் கடவீர் என அவர்களுக்கு சாபமிட்டார்.

அவர்களும் மருதமரமாயினர். உரலில் கட்டப்பட்ட கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து செல்லும் சமயம் அந்த இரட்டை மரத்தின் நடுவே செல்ல நேரிட்டது. அதனால் மரங்கள் இரண்டும் முறியலாயின. அத்துடன் நாரதரால் சாபமிடப்பட்ட அவ்விருவரும் சாபம் நீங்கி, கண்ணனை பயபக்தியோடு இறைஞ்சிச் சென்றனர் என்பது வரலாறு.

இதனைக்குறித்து அருணகிரியார் மற்றுமொரு பாடலாகிய 'சிவனார் மனங்குளிர' எனத்தொடங்கும் திருப்புகழில்

*"நவநீதமும் திருவடி உரலோடெ யொன்றும் அரிரகுராமர்
சிந்தைமகிழ் - மருகோனே"*

எனப் பாடியுள்ளது கவனிக்கற்பாலது. இத்தகைய விரிவான செய்திகளை எந்த அளவு சுருங்கச் சொல்லி விளக்க வேண்டுமோ அந்தளவு அருணகிரியார் சந்தப் பாக்களால் இனிய தமிழில் பாடியுள்ளது மிகவும் பாராட்டுதற்குரியது.




நளகூபரன் மற்றும் மணிக்ரீவன் ஆகிய அவர்களுக்கு
கண்ணனின் அருளால் வாழ்வு கிடைத்தது!

# 48. சம்பந்தரது வரலாற்றில் ஒரு பகுதி

அருணகிரியார் பழநி (திருவாவினன்குடி) எனும் தலத்திற்கு சென்று பாடிய பாடல்களில் கிடைத்தது 94 ஆகும். நக்கீரர் காலத்தில் பழநி தோன்றவில்லை. திருவாவினன்குடி எனும் தலமே மலையின் அடிவாரத்தில் இருந்துள்ளதால் நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப் படையில் பழநிதலத்தைக் குறித்து பாடவாய்ப்பில்லை. ஆனால், பிற்காலத்தில் தோன்றிய அருணகிரியார் காலத்தில் பழநித்தலம் மலைமேல் தோன்றினதால், பழநியையும் குறித்து பாடலானார்.

அருணகிரியார், "நிகமமெனிலொன்று" எனத் துவங்கும் பாடலில் 5,6-வது அடியில் சம்பந்த பெருமானின் வரலாறு பற்றி கூறியுள்ளது மிகவும் அற்புதமாகும்.

*நிகமமெனி லொன்று மற்று நாடொறு*
*நெருடுகவி கொண்டு வித்தை பேசிய*
*நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறா-*

*நெறியமுது தண்டு சத்ர சாமர*
*நிபிடமிட வந்து கைக்கு மோதிர*
*நெடுகியதி குண்ட லப்ர தாபமு முடையயோராய்;*

*முகமுமொரு சம்பு மிக் நூல்களு*
*முதுமொழியும் வந்தி ருக்கு மோவெனில்*
*முடிவிலவை யொன்று மற்று வேறொரு நிறமாகி*

*முறியுமவர் தங்கள் வித்தை தானிது*
*முடியவுனை நின்று பத்தி யால்மிக*
*மொழியும்வளர் செஞ்சொல் வர்க்க மேவா*
*அருள்வாயே;*

*திகுதிகென மண்ட விட்ட தீயொரு*
*செழியனுடல் சென்று பற்றி யாருகர்*
*திகையினமண் வந்து விட்ட போதினு மமையாது-*

*சிறியகர பங்க யத்து நீறொரு*
*தினையளவு சென்று பட்ட போதினில்*
*தெளியஇனி வென்றி விட்ட மோழைகள கழுவேற;*

*மகிதலம ணைந்த அத்த! யோனியை*
*வரைவறம ணந்து நித்த நீடருள்*
*வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்-*

*வரவரம னந்தி கைத்த பாவியை*
*வழியடிமை கொண்டு மிக்க மாதவர்*
*வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே.*

**கருத்து :-** சம்பந்தப் பெருமானது மடத்தில் சமணர்கள் இட்ட தீ, அவர் திருவாக்கின்படி பாண்டியனை சுரமாய் வந்து பீடிக்கவும், சமணர்கள் அச்சுரப்பிணியை தீர்க்க முடியாது திகைத்தனர். சம்பந்தரோ, "மந்திரமாவது நீறு" எனும் திருப்பதிகத்தைப்பாடி பாண்டியன் உடலில் திருநீறு பூசி, சுரம் நீங்க பாண்டியன் சுகம் அடைந்தான்.

பின்னர், சமணர் ᴗம்பந்தரொடு செய்த வாதில் சமணர்கள் தீயிலிட்ட ஏடு சாம்பலாகப் போக சம்பந்தர் "போகமார்த்த பூண்முலையாள்" எனத் தொடங்கும் திருநள்ளாற்றுப் பதிக ஏட்டை தீயில் இட்டதும், அந்த ஏடு வேகாது பச்சையாய் தீயில் விளங்கிற்று. அதன் பின்னர், சமணர்கள் வைகையாற்றிவிட்ட ஓலைச்சுவடு ஆற்று வெள்ளத்துடன் அடித்துக் கொண்டுபோக, சம்பந்தப் பெருமான் "வாழ்க அந்தணர்" எனும் திருப்பாசுரத்தை எழுதிவிட்ட ஓலைச்சுவடு அந்த வெள்ளத்தில் எதிரேறிச் சென்றது.

இங்ஙனம் மும்முறையும் தோல்வி கண்ட சமணர்கள் "தோல்வியுற்றால் நாங்கள் அனைவரும் கழுவிலேறுவோம்" என்று தாங்களே தங்கள் வாயால் சொன்ன சொற்படி கழுவிலேறினார்கள்.

சம்பந்தரால் பாடப்பட்ட "வாழ்க அந்தணர்" என ஓதிய பதிகத்தில் "வேந்தனும் ஓங்குக" என வாழ்த்தியதால் 'கூன்

பாண்டியன்' தனக்கு முன்னும் பின்னும் இருந்த இரு கூனும் நீங்கி "நெடுமாறன்" ஆயினன்.

இங்ஙனம், பாண்டியனது சுரத்தையும், கூனையும் போக்கித் தீயிலும், நீரிலும் சம்பந்தர் வென்றதையும் சமணர் கழுவிலேறினதையும், அருணகிரியார் இப்பாடலில் மட்டுமின்றி, பல இடங்களில் திருப்புகழில் பாராட்டியுள்ளதை காண முடிகிறது.



திருஞானசம்பந்தர்

# 49. சம்புராரி எனும் மன்மதன்

அருணகிரியார் தாம் பாடிய "அம்பு ராசியிற்" எனத்துவங்கும் தஞ்சை தலத்து பாடலில் 7-வது அடி ஒன்றிலேயே மன்மதன் வரலாற்றினைக் குறித்து பாடியுள்ளது கவனிக்கற்பாலது. பாடல்:

*அம்பு ராசியிற் கெண்டை சேலொளித்*
*தஞ்ச வேமணிக் குழைவீசும்-*
*அம்ம ணாரிடத் தின்ப சாகரத்*
*தங்கி முழ்குமிச் சையினாலே;*

*எம்பி ரானுனைச் சிந்தி யா தொழித்*
*திந்த்ர சாலஇப ப்ரமைதீர-*
*இங்கு வாவெனப் பண்பி னாலழைத்*
*தெங்கு மானமெய்ப் பொருள்தாராய்;*

*கொம்பு போலிடைத் தொண்டை போலிதழ்க்*
*கொண்டல் போல்குழற் கனமேருக்-*
*குன்று போல்முலைப் பைங்கி ராதியைக்*
*கொண்ட கோலசற் குணவேலா;*

*சம்ப ராரியைக் கொன்ற தீவிழிச்*
*சம்பு போதகக் குருநாதா-*
*சண்ட கோபுரச் செம்பொன் மாளிகைத்*
*தஞ்சை மாநகர்ப் பெருமாளே.*

இப்பாடலில் 7-வது அடியில் மன்மதனுக்கு சம்புராரி எனப் பெயர் வரக்காரணத்தை அறிய முடிகிறது.

சம்புராரி - மன்மதன். சம்பரன் ஒரு அசுரன். இவன் கிருஷ்ணனுக்கு, ருக்மணியிடத்துப் பிறந்த பிரத்தியும்தனைத் தனக்குப் பகைவன் என எண்ணி சிசுவாயிருக்கையில் கடலில் இட்டனன். அந்தச் சிசுவை ஒரு மீன் விழுங்கிற்று. அம்மீன் ஒரு வலைஞர் வலையில் அகப்பட்டது. அவன் அதைச் சம்பரனிடம்

கொடுத்தான். சம்பரன் மனைவி மாயாவதி அதைக்கறி செய்ய அரித்தபோது அதனுள்ளேயிருந்து கிடைத்த குழந்தையை அவள் வளர்த்து வரலானாள். அவன் வளர்த்தபின் சம்பரன்தான் தன்னைக் கடலில் இட்டவன் என உணர்ந்த (அக்குமரன்) அவனை (சம்பரனைக்) கொன்றான். இவன் முற்பிறப்பில் மன்மதன். மாயாவதி - ரதிதேவி. சம்புரனைக் கொன்ற காரணத்தால் மன்மதனுக்கு சம்பராரி எனப் பெயர் போந்தது. மீன் வயிற்றில் உதித்ததால் மீன்க்கொடி (மன்மதனுக்கு) அமைந்தது.




மன்மதன்

# 50. சங்கரிக்கும், சிவனுக்கும், கங்கைக்கும் - மகனான முருகன்

அருணகிரியார் தமிழில் சந்தப்பாக்கள் பாடுவதில் தேர்ச்சி பெற்றவர் என்பதர்க்கு தாம்பாடிய செந்தூர்தலத் திருப்புகழ் பாடலொன்று உறுதி செய்கிறது. "கருப்பந்தங்கிரத்தம்" எனத்துவங்கும் பாடலில் 7-வது அடியில் கூறியுள்ளதைக் காண முடிகிறது.

*கருப்பந்தங் கிரத்தம்பொங்*
*கரைப்புண்கொண் டுருக்கும்பெண்*
*களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே*
*கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்*
*துவக்குண்டும் பிணக்குண்டுங்*
*கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்*

*செருத்தண்டந் தரித்தண்டம்*
*புகத்தண்டந் தகற்கென்றுந்த*
*திகைத்தந்திண் செகத் தஞ்சுங் கொடுமாயும்*
*தியக்கங்கண் டுயக்கொண்டென்*
*பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்*
*சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே;*

*அருக்கன்சஞ் சரிக்கந்தெண்*
*டிரைக்கண்சென் றரக்கன்பண்*
*பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா!*
*அணிச்சங்கள் கொழிக்குந்தண்*
*டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்*
*தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா*

*புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்*
*கார்க்குஞ்சங் கார்க்கின்பம்*
*புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனானாய்!*

*புனைக்குன்றந் திளைக்குஞ்செந்*
*தினைப்பைம்பொன் குறக்கொம்பின்*
*புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே!*

காத்து அளிக்கும் சங்கரிக்கும், சங்கரர்க்கும், சங்கரர்க்கு இன்பம் புதுப்பிக்கும் கங்கைக்கும் பிள்ளையாம் இறைவனே. இது போன்று சொற்களை பொருத்தி, சந்தம் பிறழாது பாடியது போல் வேறு எதிலும் காண முடியவில்லை. இதே கருத்தினையே :

*"கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்*
*கனிவாயின் முத்தம் அருளே"*

என முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் கூறுகின்றது.



ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள்

# 51. மாரீசன் வரலாறு

அருணகிரியார் "மகரகுண்டல" எனத்துவங்கும் திருவலஞ் சுழிதலத்து திருப்புகழில், மாரீசன் பற்றிய செய்திகள் குறித்து பாடியுள்ளார். பாடல் :-

*மகர குண்டல மீதே மோதுவ*
*வருண பங்கய மோபூ வோடையில்*
*மருவு செங்கழு நீரோ நீவிடு வடிவேலோ-*
*மதன்வி டுங்கணை யோவா ளோசில*
*கயல்கள் கெண்டைக ளோசே லோகொலை*
*மறலி யென்பவ னோமா னோமது நுகர்கீத;*

*முகர வண்டின மோவான் மேலெழு*
*நிலவ ருந்துபு ளோமா தேவருண்*
*முதிய வெங்கடு வோதே மாவடு வகிரோபார்-*
*முடிவெ னுங்கட லோயா தோவென*
*வுலவு கண்கொடு நேரே சூறைகொள்*
*முறைய றிந்தப சாசே போல்பவ ருறபாமோ;*

*நிகரில் வஞ்சக மாரீ சாதிகள்*
*தசமு கண்படை கோடா கோடிய*
*நிருத ரும்பட வோரே வேவியெ யடுபோர்செய்-*
*நெடிய னங்கனு மானோ டேயெழு*
*பதுவெ ளங்கவி சேனா சேவித*
*நிருப னம்பரர் கோமான் தாகவன் மருகோனே:*

*சிகர வும்பர்கள் பாகீ ரதிகள்*
*பிரபை யொன்றுபி ராசா தாதிகள்*
*சிவச டங்கமொ டீசா னாதிகள் சிவமோனர்-*
*தெளியு மந்த்ரக லாபா யோகிகள்*
*அயல்வி ளங்குசு வாமீ காமரு*
*திருவ லஞ்சுழி வாழ்வே தேவர்கள் பெருமானே.*

இப்பாடலில் 5-வது அடி ஒன்றினில் மாரீசனைப் பற்றிய விவரங்கள் கூறப்பட்டுள்ளது.

மாரீசன் - நிகரில் வஞ்சகன். இவன் மாயையில் வல்ல ஓர் அரக்கன். தாடகைக்கும், சுந்தன் என்ற இயக்கர் தலைவனுக்கும் குமாரன். சுபாகுவின் உடன் பிறந்தவன். அகத்தியருக்கு இடையூறு செய்ய அவரது சாபத்தால் அரக்கனானவன். ராவணனுக்கு மாமன்முறை பெற்றவன்.

இராவணன் சீதையைக் கவருவதற்கு வஞ்சனை சூழ்ச்சி சொல்ல மாரீசன் அவனுக்கு துணையாகப் பொன்மான் உருவம் கொண்டு சீதைமுன் உலாவச் சீதை அந்தமானைப் பிடித்து தரும்படி இராமனை வேண்டினாள். இராமரும், மானைப் பின் தொடர்ந்து சென்று, அது மாயமான் என அறிந்து அதனைத்தன் அம்பினால் வீழ்த்தியதும், "ஹா! சீதா லட்சுமணா" என்று இராமர் குரலால் சத்தமிட்டு விழுந்து இறக்கலாயின.

அந்தக்குரல் தனது கணவன் குரல் என எண்ணிச் சீதை தனக்குக் காவலாயிருந்த இலக்குமணனை "நீ சென்று நாதனைப் பார்த்துவா" என வெருட்டி அனுப்பித்தனித்திருந்த போது, இராவணன் சந்நியாசி வேடம் பூண்டு வந்து சீதையை வஞ்சித்து, அவளிருந்த நிலத்தை பேர்த்து அப்படியே தேரில் வைத்து இலங்கைக்குச் சென்று, சீதையை அசோகவனத்தில் சிறை வைத்தான்.

சீதையை இழந்து இராமபிரான் சுக்ரீவன் என்னும் குரங்கின் தலைமையில் அனுமன் முதலான எழுபது வெள்ளம் சேனையுடன் சென்று இராவணனைக் கொன்று சீதையை மீட்டனர்.

# 52. திருமழிசை ஆழ்வார் வரலாறு

அருணகிரியார் "வழக்குச் சொற்பயில்" எனத்துவங்கும் ஒடுக்கத்துச் செறிவாய் என்னும் தலத்துப்பாடலில் 6-வது அடியில் திருமழிசை ஆழ்வாரின் வரலாறு தெரிவிக்கிறது. பாடல்:

*வழக்குச் சொற்பயில் வாற்ச ளப்படு*
*மருந்துப் பச்சிலை தீற்று மட்டைகள்*
*வளைத்துச் சித்தச சாத்தி ரக்கள வதனாலே-*
*மனத்துக் கற்களை நீற்று ருக்கிகள்*
*சுகித்துத் தெட்டிக ளூர்த்து திப்பரை*
*மருட்டிக் குத்திர வார்த்தை செப்பிகள் மதியாதே;*

*கழுத்தைக் கட்டிய ணாப்பி நட்பொடு*
*கிரித்துப் பற்கறை காட்டி கைப்பொருள்*
*கழற்றிக் கற்புகர் மாற்று ரைப்பது கரிசாணி-*
*கணக்கிட் டுப்பொழு தேற்றி வைத்தொரு*
*பிணக்கிட் டுச்சிலு காக்கு பட்டிகள்*
*கலைக்குட் புக்கிடு பாழ்த்த புத்தியை*
*மொழியேனோ;*

*அழற்கட் கப்பறை மோட்ட ரக்கரை*
*நெருக்கிப் பொட்டெழ நூக்கி யக்கணம்*
*அழித்திட் டுக்குற வாட்டி பொற்றன கிரிதோய்வாய்-*
*அகப்பட் டுத்தமிழ் தேர்த்த வித்தகர்*
*சமத்துக் கட்டியி லாத்த முற்றவன்*
*அலைக்குட் கட்செவி மேற்ப டுக்கையி*
*லுறைமாயன்;*

*உழைக்கட் பொற்கொடி மாக்கு லக்குயில்*
*விருப்புற் றுப்புணர் தோட்க்ரு பைக்கடல்*
*உறிக்குட் கைத்தல நீட்டு மச்சுதன் மருகோனே-*

*உரைக்கச் செட்டிய னாய்ப்பன் முத்தமிழ்*
*மதித்திட் டுச்செறி நாற்க விப்பணர்*
*ஒடுக்கத் துச்செறி வாய்த்த லத்தறை பெருமாளே.*

மேலே குறித்துள்ள பாடலில் 6-வது அடியில் திருமழிசை ஆழ்வாரது வரலாற்றினை அறிவிக்கிறது.

தமிழ் வித்தகர் சமத்தில் ஆத்தம் உற்றவன் திருமால் என்பது அவர் திருமழிசை ஆழ்வார் சொற்படி நடந்த வரலாறு. இதன் விவரம் :- காஞ்சியில் திருமழிசை ஆழ்வாரிடம் கனிகண்ணர் என்பவர் பணிவிடை செய்து வந்தனர். ஒரு கிழவி ஆழ்வார் இருந்த இடத்தில் அலகிடுதல், மெழுகுதல் ஆகிய வேலைகளை செய்து வந்தாள். ஆழ்வார் அனுக்கிரகத்தால் அவள் முதுமை நீங்கி அழகிய இளமைவாய்ந்த சுந்தரியானாள்.

இவ்வரலாற்றை அறிந்த அரசன், அவளழகில் மயங்கி பட்டமகரிஷி ஆக்கிக் கொண்டான். தானும் இளமை ஆவதற்கு வழியாதென்றுவினவ, அவள், ஆழ்வாருக்கு அந்தரங்க நண்பர் கனிகண்ணர் என்பவர் அவர் இங்கு பிட்சைக்கு வருவார். அவர் மூலமாக காரியத்தை நிறைவேற்றலாம் என்றனள்.

அரசன் கனிகண்ணரைக் கண்டு தனது எண்ணத்தை நிறைவேற்றி வைக்கும்படி வேண்டினான். அவர், அரசன் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. கனிகண்ணர் திருவாக்கால் தன்னைப் பாடப் பெற்றால் நன்மை பிறக்கும் என்றெண்ணித்தன் மீது கவிபாட வேண்டும் என்று அரசன் அவரை வேண்ட, அவர், நான் நரஸ்துதி செய்ய மாட்டேன் - நாராயண ஸ்தோத்திரம் தான் சொல்வேன் என்று கூறி,

*"ஆடவர்கள் எங்ஙன் அகன்றொழிவார் வெஃகாவும்*
*பாடகமும் ஊரகமும் பஞ்சரமா - நீயடியமால்*
*நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ*
*மன்றார் பொழிற் கச்சி மாண்பு"*

என்று பாடியதும் அரசன் சினந்து, நம்மைப்பாடு என்றால் நகரத்தைப் பாடினாய் - 'நீ இவ்வூரைவிட்டுப்போ' என அவரை வெருட்ட, கனிகண்ணர் ஆழ்வாரிடம் இந்நிகழ்ச்சியினைக் கூற, ஆழ்வார் நாமும் உம்முடன் வருவோம். பெருமாளையும் அழைத்துச் செல்வோம் என்று கூறி,

*"கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி*
*மணிவண்ணா நீகிடக்கவேண்டா - துணிவொன்றிச்*
*செந்நாப்புலவன்யான் செல்கின்றேன் - நீயுமுன்றன்*
*பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்"*

எனப் பாடினார். பெருமாளும் அவரது சொல்லுக்கிணங்கி, மூவரும் அவ்வூரைவிட்டு விலகவும் பலதிருக்கோயில்களில் இருந்த பெருமாள்களும் ஊரை விட்டு விலகினார்கள். காஞ்சி இருளடைந்தது. அரசன் நடுநடுங்கிக் கனிக்கண்ணரிடம் ஓடி வணங்கித்தன் பிழையை பொறுத்தருள வேண்டுமெனப் பணிய அவரும் ஆழ்வாரிடம் இதை விண்ணப்பிக்க, ஆழ்வார்,

*"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி*
*மணிவண்ணா நீகிடக்க வேண்டும் - துணிவுடைய*
*செந்நரப்புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்*
*பைந்நாகப்பாய் படுத்துக்கொள்"*

என்று முன்பு பாடிய பாட்டை மாற்றிப்பாட, மூவரும் முன்போல காஞ்சியிற் சேர்ந்து, காஞ்சிக்குப் பொலிவு உண்டாக்கினர். இங்ஙனம் ஆழ்வார் சொன்னபடி பெருமாள் செய்ததால் பெருமாளுக்குச் "சொன்ன வண்ணம் செய்த பெருமாள்" என்று தமிழிலும், "யதோத்காரீ" என்று வடமொழியிலும் பெயர் வழங்கப்பட்டது. இம்மூவரும் ஒரு இரவு தங்கியிருந்த ஊருக்கு 'ஓரிரவிருக்கை" எனப் பெயர் போந்தது. பின்னர், ஓரிகரை என மருவி வழங்கலாயிற்று.



*திருமழிசை ஆழ்வார் வரலாறு*

# 53. மனுநீதிச் சோழன் வரலாறு

அருணகிரியார் "கரமுமுளரி" எனத்துவங்கும் திருவாரூர் தலப்பாடலில், 5-வது அடியிலேயே வரலாற்றினைக் குறித்து பாடியுள்ளதை காணமுடிகிறது. பாடல் :-

*கரமு முளரியின் மலர்முக மதிகுழல்*
*கனம தெனுமொழி கனிகதிர் முலைநகை*
*கலக மிடுவிழி கடலென விடமென மனதூடே-*
*கருதி யனநடை கொடியிடை யியல்மயில்*
*கமழு மகிலுட னளகிய ம்ருகமத*
*களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்;*

*இரவு பகலற இகலற மலமற*
*இயலு மயலற விழியினி ரிழிவர*
*இதய முருகியெ யொரு குள பதமுற மடலூடே-*
*யெழுத அரியவள் குறமக ளிருதன*
*கிரியில் முழுகின இளையவ னெனுமுரை*
*யினிமை பெறுவது மிருபத மடைவது மொருநாளே;*

*சுரபி மகவினை யெழுபொருள் வினவிட*
*மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு*
*துயரில் செவியினி லடிபட வினவுமி னதிதீது-*
*துணிவி லிதுபிழை பெரிதென வருமநு*
*உருகி யரகர சிவசிவ பெறுமதொர்*
*சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்;*

*பரவி யதனது துயர்கொடு நடவிய*
*பழுதின் மதலையை யுடலிரு பிளவொடு*
*படிய ரதமதை நடவிட மொழிபவ னருளாரூர்ப்-*
*படியி லறுமுக சிவசுத கணபதி*
*யிளைய ழுமரநி ருபபதி சரவண*
*பரவை முறையிட அயில்கொடு நடவிய பெருமாளே.*

இப்பாடலில் 5-வது அடியில் மனுநீதிச் சோழனது வரலாற்றினை கூறப்பட்டுள்ளது.

திருவாரூரில், மனுநீதிச் சோழன் ஆண்ட காலத்தில் அரசர்கள் யாவரும் தருமம் சென்ற வழியே நாட்டை சிறப்போடு ஆண்டு வந்த போதிலும் மனுநீதிச் சோழன் சென்ற வழியே தருமம் பின் தொடர்ந்தது ஓர் அதிசயம்.

திருவாரூரில் மனுநீதிச் சோழன் மகன் செலுத்தின் தேர், அவனையும் அறியாமல் ஒரு பசுவின் கன்றின்மேல் ஏற, அக்கன்று இறக்கலாயிற்று.

கன்றை இழந்த தாய்ப்பசு துயரம் மேலிட்டு, சோழனது அரண்மனை வாயிலில் கட்டியிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பால் அசைத்து அடித்தது.

சோழன் மணி ஓசையைக் கேட்டு திடுக்கிட்டு வந்ததும் நிகழ்ந்த விவரங்களை அறியலானான். நீதியைக் காப்பாற்ற தன் தேரைச் செலுத்தி மகனை மடிவித்துப் பழிக்குப் பழிவாங்கி நீதியை, தருமத்தை நிலைநாட்டினான்.

சோழனது நீதித்திறத்தைக் கண்ட இறைவன், இறந்த கன்றையும், அரச குமாரனையும் உயிர் பெற்றெழுமாறு அருளினான்.

இதன் விரிவைப் பற்றி பெரியபுராணத்தில் காண்க.

"*ஒருமைந்தன் தன்குலத்துக்குள்ளானென்பது முணரான்*
*தருமத்தின் வழிச்செல்கை கடனென்ற தன்மைந்தன்*
*மருமந்தன் தேராழியுறவூர்ந்தான் மனுவேந்தன்*"

(பெரியபுராணம் - திருவாரூர் 27-44)

# 54. பாரதத்தில் வரும் நிகழ்ச்சிகள்

அருணகிரியார் தாம் பாடிய "ஏட்டின் விதிப்படி" எனும் திருக்கடவூர் திருப்புகழில் பாரதச் செய்திகளை குறித்து சுருக்கமாக 5, 6 அடிகளிலே குறிப்பிட்டு பாடியுள்ளார். பாடல் :-

*ஏட்டின் விதிப்படி யேகொடு மாபுர*
*வீட்டி லடைத்திசை வேகசை முணதி*
*லேற்றி யடித்திட வேகட லோடம தெனவேகி-*
*ஏற்கு மெனப்பொரு ளாசைபெ ணாசைகொ*
*ளாத்து வெனத்திரி யாபரி யாதவ*
*மேற்றி யிருப்பிட மேயறி யாமலு முடல்பேணிப்;*

*பூட்டு சரப்பளி யே மத னாமென*
*ஆட்டி யசைத்திய லேதிரி நாளையில்*
*பூத்த மலக்குகை யோபோதி சேறென கழுகாகம்-*
*போற்றி நமக்கிரை யாமென வேகொள*
*நாட்டி லொடுக்கென வேலிழு போதினில்*
*பூட்டு பணிப்பத மாமயி லாவருள் புரிவாயே;*

*வீட்டி லடைத்தெரி யேயிடு பாதக*
*னாட்டை விடுத்திட வேபல சூதினில்*
*வீழ்த்த விதிப்படி யேகுரு காவலர் வனமேபோய்-*
*வேற்றுமை யுற்றுரு வோடியல் நாளது*
*பார்த்து முடித்திட வேயொரு பாரத*
*மேற்புனை வித்தம காவீர மாயவன் மருகோனே;*

*கோட்டை யழித்தசு ரார்பதி கோவென*
*மூட்டி யெரித்தப ராபர சேகர*
*கோத்த மணிக்கதி ரேநிக ராகிய வடிவேலா-*
*கூற்று மரித்திட வேயுதை பார்வதி*
*யார்க்கு மினித்தபெ ணாகி மான்மகள்*
*கோட்டு முலைக்கதி பாகட வூருறை பெருமாளே.*

இப்பாடலில் பாரதச் செய்திகளைக் குறித்து 5, 6-வது அடிகளால் குறிக்கப்பட்டுள்ளது.

**பாரத வரலாறு :**

தருமனாகிய ஐவரையும் கொல்லத்துரியோதனன் ஒரு அரக்கு மாளிகையைக்கட்டி, அதில் அவர்களை தங்கச் செய்தான். நடு நிசியில் நெருப்புவைத்து அம்மாளிகையை கொளுத்த ஏற்பாடுசெய்திருந்தான். இந்தச் சூதின் ரகசியத்தை அந்த மாளிகையைக் கட்டினவன் பீமனுக்கு முன்னரே தெரிவித்திருந் தான். பீமன் அந்த மாளிகைக்கு தானே நெருப்பு வைத்துவிட்டு, தனது சகோதரர்களையும், தாயையும் சேர்த்துக் கொண்டு, ஒரு சுரங்கத்தின் ரகசிய வழியே மாளிகையினின்றும் வெளியேறினான்.

வனவாசத்தில் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் செய்த போது மாறுவேடத்துடனும், மாற்று பெயர்களுடனும், விராட ராஜனிடம் காலம் கழித்து வரலாயினர்.

தருமர் - கங்காபட்டர் எனும் பெயருடன் சந்நியாசி கோலத்துடனும், வீமன் - வல்லன் என்னும் பெயருடன் சுயம்பாகி வேலையிலும், அருச்சுனன் - நபுஞ்சகனாகி ஸ்தீரி வேஷத்துடனும் பிரகந்தளை எனும் பெயருடனும், நகுலன் - தந்திரிபாலன் எனும் பெயருடன் குதிரை வைத்தியனாகவும், சாரதியாகவும், சகாதேவன் - தாமக்கிரந்தன் என்னும் பெயருடனும் மாடு மேய்ப்பனாகவும், துரோபதை - மாலினி எனும் பெயருடன் விராடராஜன் மனைவியிடத்திலும் வாழ்ந்து காலம் கழித்த வரலாற்றை இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளது.

# 55. சகாதேவனுக்கு கண்ணபிரான் காட்டிய வடிவம்

அருணகிரியார் மகாபாரதத்தை அறிந்திருத்தல் வேண்டும், என்பதர்க்கு இவரது பாடலாகிய 'பசையற்றவுடல்வற்ற" எனும் விருத்தாசலப்பாடல் மூலம் அறியப்படுகிறது. பாடல் :-

*பசையற்ற வுடல்வற்ற வினைமுற்றி நடைநெட்டி*
*பறியக்கை சொறியப்பல் வெளியாகிப்-*
*படலைக்கு விழிகெட்ட குருடுற்று மிகநெக்க*
*பழமுற்று நரைகொக்கி னிறமாகி;*

*விசைபெற்று வருபித்தம் வனியைக்க ணிலைகெட்டு*
*மெலிவுற்று விரல்பற்று தடியோடே-*
*வெளிநிற்கும் விதமுற்ற இடர்பெற்ற ஜனனத்தை*
*விடுவித்து னருள்வைப்ப தொருநாளே;*

*அசைவற்ற நிருதர்க்கு மடிவுற்ற பிரியத்தி*
*னடல்வஜ்ர கரன்மற்று முளவானோர்-*
*அளவற்ற மலர்விட்டு நிலமுற்று மறையச்செய்*
*அதுலச்ச மரவெற்றி யுடையோனே;*

*வசையற்று முடிவற்று வளர்பற்றி னளவற்ற*
*வடிவுற்ற முகில்கிட்ணன்*
*மதுரச்செ மொழிசெப்பி யருள்பெற்ற சிவபத்தர்*
*வளர் விர்த்த கிரியுற்ற பெருமாளே.*

இப்பாடலில் 7-வது அடியில் சுருங்கச் சொல்லி விளக்க மளித்ததை பார்க்கலாம்.

தம் பொருட்டு கண்ணபிரான் துரியோதனனிடம் தூது செல்ல வேண்டும் என்று பாண்டவர்கள் சிந்தித்தபோது,

சகாதேவனை நோக்கி, கண்ணபிரான் உன் எண்ணம் என்ன என்று கேட்டார்.

சகாதேவன், பெருமானே! துரியோதனன் எங்களுக்கு பூமி கொடுத்தால் என்ன? கொடாவிட்டால் என்ன? உங்களது மாயையை யார் அறிவார்? உங்கள் திருவுள்ளத்துக் கருத்து எதுவோ, அதுவே என் கருத்து என்றான்.

இவன் நமது உள் எண்ணத்தை வெளியிடுவான் என தெரிந்து கொண்ட கண்ணபிரான், தனியாக ஓரிடத்தில் சகாதேவனை அழைத்துக் கொண்டுபோய், பாரதப் போர் நடவாதிருக்க வழி என்ன சொல் என்றார். அப்போது சகாதேவன் பெருமானே! நீ பூமிபாரம் தீர்க்க வந்துள்ளது எனக்கு புரிந்துவிட்டது. உன்னையன்றி வேறு யாராலும் அந்தப் போரை நிறுத்த முடியாது.

உன்னை நான் கட்டிப் போட்டாலொழிய பாரதப் போர் நிகழ்ந்தே தீரும் என்றான். அதைக் கேட்ட கண்ணபிரான் என்னை நீ எவ்வண்ணம் கட்டுவாய் என்றதும் சகாதேவன் 'உன் வடிவத்தைக்காட்டு, கட்டுகிறேன்' என்றான். கண்ணனும் உடனே கட்டு பார்க்கலாமென்று தன் போன்றே உருவம் 'பதினாறாயிரம்' கொண்டான். சகாதேவன் மூல உருவம் இதுதான் என அறிந்து கண்ணபிரானது அடியிணைகளைத்தன் உள்ளத்தினால் கட்டினான். கண்ணபிரான் மகிழ்ந்து என் பாதத்தை இனி விடுவாயாக. இந்த செய்தியை எவருக்கும் வெளியிடாதே என்று கண்ணன் உரைத்தார். பின்பு பாண்டவர் ஐவருக்கும், துரோபதைக்கும் ஆறுதல் மொழி கூறி, தூதுக்குப் புறப்பட்டுச் சென்றார் - என்பது பாரத வரலாறு. பாண்டவரிடத்தில் தமக்கு இருந்த பற்றினால், தனது அளவற்ற வடிவத்தைக் கண்ணபிரான் சகாதேவனுக்கு காட்டினார் என்பது வரலாறு. இப்பாட்டின் வாயிலாக உணர்த்தப்படுகிறது.

*"மாயனும் அன்பன் மனமறிவான் கட்டுகஎன்*
*றாய வடிவுபதினாறாயிரம் கொண்டான்*
*தூயவனும் மூலமாந்தோற்ற முணர்தெவ்வுலகுந்*
*தாய அடியினைகள் தன்கருத்தினால் பிணித்தான்"*

என்கிறது வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூது - 37. மேலும், இதனையே அருணகிரியார்,

*"வளர்பற்றின் அளவுற்ற வடிவுற்ற முகில் கிருட்டினன்"*

என இப்பாடலில் குறித்துள்ளார்.

அதனால் தான், பாரதப்போர் துவங்குமுன்னம் சகாதேவனையே நாள் குறிக்கச் சொன்னதும்.



கிருஷ்ணனின் விஸ்வரூபத்தை கண்டு சகாதேவன் வணங்குதல்

# 56. நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடியது

அருணகிரியார் முருகன் அருளால் 16000 திருப்புகழ் பாடியதாக குறிப்புகள் உள்ளன. அதில் இன்றைய நாளில் 1304- பாடல்களே, அமரர். வ.த. சுப்ரமணியப் பிள்ளையவர்களின் சீரிய முயற்சியால் கிடைக்கப்பெற்றன. இக்காலத்துக்கு இப்பாடல்களே போதும் என்பது முருகப் பெருமானது திருவுள்ளம் போலும்.

இவரால் விரித்துரைக்கப்பட்ட பல்வேறு வரலாற்றுச் செய்திகளை, முன்னரே அறிந்திருத்தல் வேண்டும் என நினைக்கத் தோன்றுகிறது. "அவனருளால் அவன் தாள் வணங்கி" என மாணிக்கவாசகர் கூறியதற்கேற்ப, முருகனருளால் இவருக்கு கிடைத்த பாக்யம் என கருத முடிகிறது. அருணகிரியார், "முலைமுகந்தி" எனத்துவங்கும் திருச்செந்தூர் பாடலில் நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாட வாய்ப்பு அளித்ததை குறித்து பாடியுள்ளதை காண முடிகிறது. பாடல் :-

*முலைமு கந்தி மிர்ந்த கலவை யுந்து லங்கு*
*முறுவ லுஞ்சி வந்த கனிவாயும்-*
*முருக விழ்ந்து திர்ந்த மலர்க ளுஞ்ச ரிந்த*
*முகிலு மின்ப சிங்கி விழிவேலும்;*

*சிலைமு கங்க லந்த திலத முங்கு ளிர்ந்த*
*திருமு கந்த தும்பு குறுவேர்வும்-*
*தெரிய வந்து நின்ற மகளிர் பின்சு ழன்று*
*செயல ழிந்து ழன்று திரிவேனோ;*

*மலைமு கஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு*
*வழிதி றந்த செங்கை வடிவேலா-*
*வளர்பு னம்ப யின்ற குறம டந்தை கொங்கை*
*மணிவ டம்பு தைந்த புயவேளே;*

*அலைமு கந்த வழ்ந்து சினைமு திர்ந்த சங்க*
*மலறி வந்து கஞ்ச மலர்மீதே-*
*அளிக லந்தி ரங்க இசையு டன்து யின்ற*
*அரிய செந்தில் வந்த பெருமாளே.*

இப்பாடலில் 5-வது அடி ஒன்றிலேயே நக்கீரரது வரலாற்றினைக் குறித்தும், திருமுருகாற்றுப்படை பாடல் பற்றியும் குறித்து அறிவித்துள்ளதை அறிய முடிகிறது.

மலைமுகம் சுமந்தபுலவர் - மலைக்குகையில் அடைக்கப் பட்ட நக்கீரர். செஞ்சொல் - அன்னாரால் துதிக்கப்பட்ட திருமுருகாற்றுப்படை. இவ்வரலாறு பின்வருமாறு : முழுமுதற் கடவுளான சிவனையே பாடி, முருகனை பாடாதிருந்தார் நக்கீரர் எனும் சங்கத்தமிழ் தலைமைப்புலவர். இவர் திருப்பரங் குன்றத்தில் பொய்கைக்கரையில் ஜெபம் செய்யுங்கால் அருகிலிருந்த அரச மரத்தின் இலை ஒன்று பொய்கை நீரில் விழவும், அவ்விலை உருமாறி ஒருபாதி மீனாகவும், ஒருபாதி பறவையாகவும் மாறி, ஒன்றை ஒன்று இழுத்து பூசலிட, அதைக்கண்ட நக்கீரர் தமது ஜெபத்தைவிட்டு மீன் - பறவை இவைகளின் பூசலை விலக்க வேண்டி அவைகளை இணைத்திருந்த மெல்லிய சதையைக் கிள்ளவும், மீனும் பறவையும் உடனே துடிதுடித்து இறந்து போயின.

இந்தப்பாதகச் செயலை ஏன் செய்தனை என்று முருகவேளின் பூதகணத்தலைவர் நக்கீரரைக் கொண்டு போய் ஒருமலைக் குகையில் அடைத்தார். அந்தக் குகையில் கற்கிமுகி எனும் குதிரைமுகப் பெண் பூதம் ஆயிரம் பேர் நிறைந்தவுடன் உண்ண வைத்திருந்த 999 பேர்களோடு நக்கீரரும் அடைப்பட்டனர்.

இவ்விடர்பாட்டை அறிந்த நக்கீரர், தாம் முருகவேளைப் பாடாதிருந்தது குற்றமெனயுணர்ந்து, அவரைப்பாடி உய்யலாம் எனக் கருதி பாட முயன்றபோது, முருகவேளே, “உலகம் உவப்ப” என்று அடி எடுத்துக் கொடுக்க, நக்கீரரும் “திருமுருகாற்றுப் படை” எனும் அரிய பாடலைப் பாடினார்.

தமிழ் முருகன் அவரது பாடலைக் கேட்டு மிக உவந்து, தமது திருக்கைவேலால் குகையைப் பிளந்து அந்தப் பெண் பூதத்தைக் கொல்வித்து புலவரைக் குகையினின்றும் மீட்டனர்.

இவ்வரலாற்றின் விரிவை திருப்பரங்குன்றத்து புராணத்தில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். அருணகிரியார் பாடிய திருவகுப்பில் ஒன்றாகிய 'வேல் வகுப்பு' எனும் பாடலில், கீழ்வருமாறு பாடியுள்ளதையும் கவனிக்கலாம்.

*"பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு*
*கவிப்புலவன், இசைக்குருகி வரைக்குகையை*
*இடித்து வழிகாணும் - வேல்"*

என பாடியுள்ளது, மேலும் உறுதி செய்கிறது.



நக்கீரருக்கு முருகன் காட்சியளித்தல்

## 57. சிவனிடம் திருமால் சக்கரத்தைப் பெற்றது

திருமால் சக்கரத்தை சிவன்பால் பெற்றது "படர்புவியின் மீது" எனத் துவங்கும் திருச்செந்தூர் தலப்பாடலில் 5,6,7 அடிகளில் காணமுடிகிறது. பாடல் :-

*படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்*
*வியணினுரை பானு வாய்வி யந்துரை*
*பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்-*
*பனுவல்கதை காவ்ய மாமெ ணென் கலை*
*திருவளுவ தேவர் வாய்மை யென்கிற*
*பழமொழியை யோதியேயு ணர்ந்துபல் சந்தமாலை;*

*மடல்பரணி கோவை யார்க லம்பக*
*முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்*
*வகை வகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு-*
*மதுரகவி ராஜ னானென் வெண்குடை*
*விருதுகொடி தாளமேள தண்டிகை*
*வரிசையொ டுலாவு மால கந்தைத விர்ந்திடாதோ:*

*அடல்பொருது பூச லேவி ளைந்திட*
*எதிர்பொரவொ ணாமலேக சங்கர*
*அரஹர சிவாம ஹாதெ வென்றுனி அன்றுசேவித்-*
*தவனிவெகு கால மாய்வ ணங்கியு*
*ளுருகிவெகு பாச கோச சம்ப்ரம*
*அதிபெல கடோர மாச லந்தா னொந்துவீழ;*

*உடல்தடியு மாழி தாவெ னம்புய*
*மலர்கள் தச நூறு தாளி டும்பக*
*லொருமலரி லாது கோவ ணிந்திடு செங்கண்மாலுக-*
*குதவியம சேகர் பால இந்திரன்*
*மகளை மண மேவி வீறு செந்திலி*
*லுரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே.*

ஒரு சமயம், திருமால் ஆதிய தேவர்கள் கூட்டத்தை வென்ற பின்னர், சலந்தராசுரன் சிவனையே எதிர்த்து போரிட கயிலைக்குபோன சமயம், சிவனே ஒருமறையவன் போல் எதிரே வந்து, காலினால் ஒரு சக்கரம் போல் பூமியில் கீறி அமைத்து இதை

நீ எடுப்பாயாக. பின்னர் கயிலைக்குப் போகலாம் என்றார். சலந்தராசுரன் அதை எடுக்க, அச்சக்கரத்தால் அவன் சிரசு அறுபட்டு மாய்ந்தான். சலந்தரா சுரனைத்தடிந்த சக்ராயுதத்தைப் பெற வேண்டி திருமால் சிவபெருமானை நிதமும் ஆயிரம் பூக்கொண்டு திருவீழிமிழலை எனும் தலத்தில் வழிபட்டு வந்தார்.

ஒருநாள், பூசையில் ஒரு பூ குறைபடத் தமது கண்ணையே இடந்து சாத்தி, அச்சக்கரத்தை திருமால் பெற்றவரலாற்றினை இப்பாடலில் 5,6,7-வது அடிகளில் மேலே கூறிய அத்தனை வரலாற்றினையும் சுருங்கச் சொல்லிய விதம் அருணகிரியாருக்கே கைவந்த கலை என்றால் மிகையாகாது. மேலும், இதனை உறுதிப்படுத்த,

*"சலந்தரன் உடலம் தடிந்த சக்கரமெனக்கருள்*
*என்றுஎன்று அரிவழி பட்டிதிச்சிய*
*விமானத்திறைவன் பிறையணி சடையன்"*

(சம்பந்தர் - 111-117-7) பாடலும்

*"நீற்றினை நிறையபூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு*
*ஏற்றுழியொரு நாளொன்று குறையக் கண்ணிறையவிட்ட*
*ஆற்றலுக்காழி நல்கியவன் கொணர்ந்திழிச் சுங்கோயில்*
*வீற்றிருந்தளிப்பர் வீழிமிழலையு விகிர்தனாரே"*

(அப்பர் - திருவீழிமிழலை - IV-64-8)

பாடல்கள் அறிவிக்கின்றன.



சிவனிடம் திருமால் சக்கரத்தைப் பெற்றது

# 58. பாரதச் சுருக்க வரலாறு

அருணகிரியார் பாரதம், இராமாயணம் போன்ற நூல்களை கற்றறிந்துள்ளார் என்பதற்கு, அன்னாரது திருப்புகழ்:- "மோதுமறலியொரு" எனும் பாட்டினால் அறிய முடிகிறது.

*மோது மறலியொரு கோடி வேற்படை*
*கூடி முடுகியெம தாவி பாழ்த்திட*
*மோக முடையவெகு மாதர் கூட்டமு மயலாரும்-*
*மூளு மளவில்விசை மேல்வி ழாப்பரி*
*தாப முடனும்விழி நீர்கொ ளாக்கொடு*
*மோக வினையில்நெடு நாளின் மூத்தவரிளையோர்கள்;*

*ஏது கருமமிவர் சா வெ னாச்சிலர்*
*கூடி நலகினிடை னாக்கடி*
*தேமு நரகினிடை வீழ் மெ னாடப்பொறி யறுபாவி-*
*ஏழு புவனமிகு வான நாட்டவர்*
*- சூழு முநிவர்கிளை தாமு மேத்திட*
*ஈச னருள்குமர வேத மார்த்தெழ வருவாயே;*

*சூது பொருதரும னாடு தோற்றிரு*
*வாறு வருஷம்வன வாச மேற்றியல்*
*தோகை யுடனுமெவி ராட ராச்சிய முறைநாளிற்-*
*சூறை நிரைகொடவ ரேக மீட்டெதி*
*ராளு முரிமைதரு மாறு கேட்டொரு*
*தூது செல அடுவலாண்மை தாக்குவ னெனமீள;*

*வாது சமர்திருத ரான ராட்டிர*
*ராஜ குமரர் துரி யோத னாற்பிறர்*
*மாள நிருபரொடு சேனை தூட்பட வரிசாப-*
*வாகை விஜயனடல் வாசி பூட்டிய*
*தேரை முடுகுநெடு மால்ப ராக்ரம*
*மாயன் மருகஅமர் நாடர் பார்த்திப பெருமாளே.*

இந்தப்பாடலில், கடைசி 4 அடிகள், அதாவது 5,6,7,8 அடிகளில் பாரதச் சுருக்க வரலாற்றினை, 4அடிகளில் பொருத்தி பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

தருமர் சூதாடி நாட்டை இழந்ததும், 12 வருஷம் வனவாசம் இருந்ததும், அஞ்ஞாத வாசமாக, விராட ராஜ்யத்தில் துரோபதையுடன் இருந்ததும், அப்போது பகைவர்கள் பசுக்கூட்டங்களைக் கவர்ந்ததும், அவைகளை மீட்டதும், பின்பு அரசுரிமை கேட்கத்தூது விட்டதும் போரே முடிவு என்று ஏற்பட்டுப் போரில், துரியோதனாதியர் யாவரும் இறக்கும் படி அர்ச்சுனனுடைய தேரைக் கண்ணபிரான் சாரதியாக இருந்து ஒட்டியதும் கூறப்பட்டுள்ள - இத்தனை வரலாற்றுகளையும் பாட்டின் பின்பகுதியாக 5,6,7,8 - இவைகளில் சந்தப்பாக்களாக பாடியுள்ளது, இவரது திறமையை வெளிப்படுத்துகிறது.



ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள்

# 59. திருப்புகழ் பெருமைக்கு ஒரு பாடல்

அருணகிரியார் பாடியப்பாடல்கள் அடங்கிய ஓலைச் சுவடிகளை, அமரர். வ.த.சுப்ரமணியப்பிள்ளை, பல அரிய நண்பர்களிடமிருந்து பெற்ற பாடல்களை அச்சிட்டு உதவின புண்யசீலராவார். பாடல்களை சேகரிக்கும் நாளில், ஒருமுருகபக்தர் தமக்கு கிடைத்த ஒரு ஓலைச்சுவடியில் பொறித்திருந்த பாடலை, அமரர் வ.த.சு என்பவரிடம் சேர்க்கக்கருதி, அதனை மடியில் வைத்துக் கொண்டு, அன்னாரிடம் சென்று நடந்த விவரத்தை தெரிவித்தார். தனிவழியில் தான் போய்க்கொண்டிருந்த போது, ஓர் உருவம் தன்னை பின் தொடர்ந்து வரக்கண்டதும், பயந்து அக்கம்பக்கம் யாராவது தென்படுகிறார்களா என துருவிப் பார்த்து சென்ற சமயம், தொடர்ந்து வந்த அந்த உருவம், அன்னார் ஓரிடத்தில் வரும் போது தொடராது நிற்கவும், அந்த இடத்தைத் தாண்டியதும், அவ்வுருவம் தன்னை மறுபடியும் பின் தொடர் வதையும்கண்டு, அவனை பின் தொடர்ந்து வந்த அவ்வுருவம், தொடராது இருந்த இடத்துக்கே பின் சென்று, அந்த இடத்தில் இருந்த மண்ணைவாரி மடியில் கட்டிக் கொண்டுச் செல்ல, அந்த ஆவியான உருவம் பின் தொடராது நின்று விட்டது கண்டு, வீடுபோய்ச் சேர்ந்ததும், மடியில் எடுத்து வந்த மணலை, கீழேகொட்டி ஆய்ந்து பார்க்க, அதில் ஒரு ஓலை ஏடு இருக்கக்கண்டார். அதில் கீழ்குறித்த பாடல் எழுதி இருந்ததைக்கண்டு, இப்பாடலையே அன்றிலிருந்து எப்போதும் சிந்தனைசெய்து பாராயணம் செய்து வந்தார்.

*இருந்த வீடுங் கொஞ்சிய சிறுவரு முறுகேளும்-*
*இசைந்த வூரும் பெண்டிரு மிளமையும் வளமேவும்;*

*விரிந்த நாடுங் குன்றமு நிலையென மகிழாதே-*
*விளங்கு தீபங் கொண்டுனை வழிபட அருள்வாயே;*

*குருந்தி லேறுங் கொண்டலின் வடிவினன் மருகோனே-*
*குரங்கு லாவுங் குன்றுறை குறமகள் மணவாளா;*

*திருந்த வேதந் தண்டமிழ் தெரிதரு புலவோனே-*
*சிவந்த காலுந் தண்டையு மழகிய பெருமாளே.*

திருப்புகழ் பாடல்களை சேகரித்து அச்சிடநினைத்த அமரர், வ.த. சுப்ரமணியப்பிள்ளை அவர்களின் சுயசரிதத்தில் குறிக்கப் பட்டுள்ளது, அன்னாரின் குமாரர். அமரர் வ.சு. செங்கல் வராயப்பிள்ளை வாயிலாக கேட்டறியப்பட்டது.



ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள்

# 60. செய்ந்நன்றி மறவாமை

முருகனருளால் தாம் பெற்ற அனுக்கிரகத்தை அருணகிரியார் பல பாடல்களில் பாடியிருப்பது, செய்ந்நன்றி மறவாமை உணர்த்துகிறது. அத்தகைய பாடல்களில் தலைசிறந்த பாடல் "ஆனாதஞானபுத்தியை" என்பதாகும். இதன் விரிவைக் கொண்டு இவரது நன்றி மறவாமையை உணர்த்துகிறது. "ஆனாதஞான" என்னும் பொதுப் பாடல் :-

*ஆனாத ஞான புத்தி யைக்கொடுத்ததும்*
*ஆராயு நூல்க ளிற்க ருத்த ளித்ததும்*
*ஆதேச வாழ்வி னிற்ப்ர மித்தி ளைத்துயி ரழியாதே-*
*ஆசாப யோதி யைக்க டக்க விட்டதும்*
*வாசாம கோச ரத்தி ருத்து வித்ததும்*
*ஆபாத னேன்மி கப்ர சித்திபெற்றினி துலகேழும்;*

*யானாக நாம அற்பு தத்தி ருப்புகழ்*
*தேனூற வோதி யெத்தி சைப்பு றத்தினும்*
*ஏடேவு ராஜ தத்தி னைப்ப ணித்ததும் இடராழி-*
*ஏறாத மாம லத்ர யக்கு ணத்ரய*
*நானாவி கார புற்பு தப்பி றப்பற*
*ஏதேம மாயெ னக்க நுக்ர கித்ததும் மறவேனே:*

*மாநாக நாண்வ லுப்பு றத்து வக்கியோர்*
*மாமேரு பூத ரத்த னுப்பி டித்தொரு*
*மாலாய வாளி யைத்தொடுத்த ரக்கரி லொருமூவர்-*
*மாளாது பாத கப்பு ரத்ர யத்தவர்*
*தூளாக வேமு தற்சி ரித்த வித்தகர்*
*வாழ்வேவ லாரி பெற்றெ டுத்த கற்பக வனமேவும்;*

*தேநாய காஎ னத்து தித்த வுத்தம*
*வானாடர் வாழ வித்ர மத்தி ருக்கழல்*
*சேராத சூர னைத்து ணித்த டக்கிய வரைமோதிச்-*

*சேறாய சோரி புத்த னக்கர் திட்டெழ*
*மாறநி சாச ரக்கு வலத்தை யிப்படி*
*சீராவி னால றுத்த றுத்தொ துக்கிய பெருமாளே.*

இது அருணகிரியாரின் வரலாற்றையும், நன்றி மறவாக் குணத்தையும் வெளிப்படுத்துகின்றது. தாம் ஞானம் பெற்றது, (தேவாரம் போன்று) ஞான நூல்களை ஆராயும் கருத்தைப் பெற்றது. ஆசைகளை வென்று இந்த மாய வாழ்க்கையில் மருளாது, பெரிய ஞான நிலையையும் மிகக் கீர்த்தியையும், அத்துவித ஞானத்தையும் பெற்றது, தேன்போன்ற திருப்புகழைப் பாடி எவ்விடத்தும் தமது வாக்கை மதிக்கப்பெற்றது, மும்மலம் முக்குணம் இவைகளுக்கு ஈடான பிறப்பு அற்றுப் போகும்படி பெற்றது - ஆகிய அரட்பிரசாதங்களை மறவேன் என்கிறார் அருணகிரியார்.

மொய்தாரணிகுழல் வள்ளியை வேட்டவன், முத்தமிழால் செய்ப்பதியும் வைத்து உயர் திருப்புகழ் விருப்பமொடு அருளிச் செய்ததை, பல திருப்புகழ் பாடல்களில் வயலூரைப் பற்றியும், முருகனின் அனுக்கிரக விசேடத்தையும் குறித்து பாடியுள்ளார்.

திருவண்ணாமலை ஆலயத்தில், பிரபுட தேவராஜன் முன்னிலையில் அருணகிரியாரின் வேண்டுகோளுக்கிரங்கி முருகன் மயிலின்மேல் வந்து காட்சிதந்ததும், வயலூரில் திருப்புகழ் பாடுக என அனுக்கிரகித்ததும், வில்லிப்புத்தூராரோடு வாது செய்து கந்தரந்தாதி பாடி வெற்றி கொண்டதும், கிளியுருவம் பெற்று முருகனது திருக்கரத்தில் இருந்து "திருவகுப்பு" எனும் பாடலை பாடும் பாக்யத்தைப் பெற்றதையும், பற்பல சமயங்களில் முருகனது காட்சியைப் பெற்றதையும் மறவாது இருக்கவே நன்றிக் கடமையாக பல பாடல்களின் மூலம் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

# 61. காக்கைக் கடவுளை விட்டார்

அருணகிரியார் எல்லா முருகத் தலங்களையும் தரிசித்து அவனருளால் சந்தப் பாடல்கள் புனைந்தபோதிலும், மனநிறைவடையாது போலும். தலங்களைக் குறிக்காது பலப் பாடல்கள் "பொதுப் பாடல்கள்" எனும் தலைப்பில் பாடியுள்ளது அவரது பக்தியின் முதிர்ச்சியை தெரிவிக்கிறது. அதனடிப் படையில், "கற்பார் மெய்ப்பாட்டை" எனும் திருப்புகழில், 5-வது அடியில் "காக்கைக் கடவுளை" எனும் தலைப்பினைப் பற்றி சிந்தனைக்குரியது. பாடல் :-

*கற்பார்மெய்ப் பாட்டைத் தவறிய*
*சொற்பாகைக் காட்டிப் புழுகொடு*
*கஸ்தூரிச் சேற்றைத் தடவிய இளநீரைக்-*
*கட்சேலைக் காட்டிக் குழலழ*
*கைத்தோளைக் காட்டித் தரகொடு*
*கைக்காசைக் கேட்டுத் தெருவினில் மயில்போலே;*

*நிற்பாருக் காட்பட் டுயரிய*
*வித்தாரப் பூக்கட் டிலின்மிசை*
*நெட்டூரக் கூட்டத் தநவர தழுமாயும்-*
*நெட்டூரைசைப் பாட்டைத் துரிசற*
*விட்டேறிப் போபபத் தியருடன்*
*நெக்கோதிப் போற்றிக் கழலிணை பணிவேனோ;*

*வெற்பால்மத் தாக்கிக் கடல்கடை*
*மைச்சாவிக் காக்கைக் கடவுளை*
*விட்டார்முக் கோட்டைக் கொருகிரி யிருகாலும்-*
*விற்போலக் கோட்டிப் பிறகொரு*
*சற்றேபற் காட்டித் தழலெழ*
*வித்தார்தத் வார்த்தக் குருபர னெனவோதும்;*

*பொற்பா பற் றாக்கைப் புதுமலர்*
*பெட்டேயப் பாற்பட் டுயரிய*
*பொற்றோளிற் சேர்த்துக் கருணைசெ யெனமாலாய்ப்-*

*புட்கானத் தோச்சிக் கிரிமிசை*
*பச்சேனற் காத்துத் திரிதரு*
*பொற்பூவைப் பேச்சுக் குருகிய பெருமாளே.*

திருமால், திருப்பாற்கடல் கடைந்தபோது, எழுந்த ஆலகாலம் எனும் விஷே வேகத்தால், வெண்ணிறமாய் விளங்கிய நாராயணன் உடல் நிறம் கருத்தது. அதனால் கரியவன் எனப் பெயர் பெற்றார்.

**காக்கைக் கடவுளை விட்டார் :-**

திரிபுரத்தில் இருந்த அசுரர்கள், சிவபூஜையை விட்டால் ஒழிய அவர்களை வெல்ல இயலாது என உணர்ந்த திருமால் புத்த ஆசாரியராகவும், நாரதர் அவர் சீடராகவும் போந்து, பலவித அற்புத நிகழ்ச்சிகளை செய்து காட்டி, அசுரர்களை மயக்கிச் சிவ பூஜையை கைவிடச் செய்தனர். ஆனால், திரிபுரங்களுக்குத் தலைவராயிருந்த மூவர்மாத்திரம் திருமாலின் மாயைக்கு கட்டுப்படாது சிவ பூஜநெறியிலேயே உறுதியாக இருந்தனர். திருமாலின் மாயைக்குச் சிக்காது அவரை விலகிவிட்டார் களாதலின், "காக்கைக் கடவுளை விட்டார்" என்றது அத்திரிபுரத்து தலைவர் மூவரைக்குறிக்கும் நாரதர் திருமாலிடம் கூறுவது:-

"*சங்கம் தரித்தோய்! மூ எயிற்கும் தனித்தொவ்வொருவர்*
*ஒழிய மற்றத்துங்க அசுரர் மோகிதராய்த்தொழுது*
*நமது வசமானார்"; அவரை நம்மாயைதடவிப்*
*பிணிக்க அறியாது தண்டுழாய்த்தார்ப் பண்ணீபனே*"
- உபதேச - ஞானவரோ (2087)

காக்கைக்கடவுளை விட்டார் - என்பது திரிபுரதகனத்தில் திருமால் அம்பாக தோன்றியதாலின் - திருமாலாம் அம்பை விட்டார்? செலுத்தினார் எனவும் பொருள் தரும்.

சிவபிரான் தழலெழச்சிரித்த நெருப்பு முன்சென்று எரிக்கத் தேவர்களின் வேண்டுதலுக்கிணங்க, திருமாலாகிய அம்பையும் இறைவன் செலுத்த, அந்த அம்பு அந்தச்சிரிப்பு நெருப்பைப் பின் தொடர்ந்து எரித்தபுரத்தைத் தானும் எரித்தது என்று உபதேச காண்டம் கூறுகிறது.

# 62. மதுரைச் சங்கப் பலகை வரலாறு

அருணகிரியார் தமது பாடல்களில் கூறப்படாதச் செய்திகளே இராது எனலாம். இவரைப் போன்று, பாரபட்சமின்றி, வைணவத்தின் வரலாற்றினையும், சைவத்தின் சிறப்பைப்பற்றி மட்டுமே, தமது பாடலில் அமைத்து பாடாது, பொதுப்படையான வரலாறுகளையும் பாடிப் போந்துள்ளது, முருகன் இவருக்கு அளித்த வரப்பிரசாதம் என்றே நினைக்கத்தோன்றுகிறது.

"மனக பாடபாடீர" எனும் திருப்புகழில், மதுரை சங்கப் பலகையின் வரலாற்றினை, எவரும் இதுகாறும் பாடாத வகையில், மேற்குறித்த பாடலின் 6-வது அடியில், விஸ்தாரமான வரலாற்றினை சுருங்கச் சொல்லி பாடியுள்ளதில், இவரது கவித்திறன் நன்கு விளங்குகிறது. இப்பாடலில் சங்கப் பலகையை, சாரதாபீடம் எனத்தலைப்பு தந்துள்ளது மிகவும் பெருமைப் பட வேண்டியதொன்றாகும்.

*மனக பாட பாடீர தனத ராத ராரூப*
*மதன ராச ராசீப சரகோப-*
*வருண பாத காலோக தருண சோபி தாகார*
*மகளி ரோடு சீராடி யிதமாடிக்;*

*குனகு வேனை நாணாது தனகு வேனை வீணான*
*குறைய னேனை நாயேனை வினையேரனைக்-*
*கொடிய னேனை யோதாத குதலை யேனே நாடாத*
*குருட னேனை நீயாள்வ தொருநாளே;*

*அநக வாம னாகார முநிவ ராக மால்தேட*
*அரிய தாதை தானேவ மதுரேசன்-*
*அரிய சார தாபீட மதனி லேறி யீடேற*
*அகில நாலு மாராயு மிளையோனே;*

*கனக பாவ னாகார பவள கோம ளாகார*
*கலப சாம ளாகார மயிலேறுங்-*

*கடவு ளேக்கு பாகார கமல வேத னாகார*
*கருணை மேரு வேதேவர் பெருமாளே.*

மேற்கூறிய பாடலில், 6-வது அடியில் "சாரதாபீடம்" எனும் சொற்றொடரில் வந்துள்ள கருத்து

**சங்கப்பலகையின் வரலாறு :-**

மதுரையில் சரஸ்வதி தேவியின் கூறாக உள்ள 'ஆகார முதல் ஹாகாரம்' இறுதியாகிய எழுத்துக்கள் நாற்பத்தெட்டும், பிரம தேவரின் கட்டளைப்படி மனிதர்களாய்ப் பிறந்து தமிழிலே தலைமைப் புலமை கொண்டன. இந்த நாற்பத்தெட்டு புலவர்களும் பாண்டியனது சபையிலிருந்து வந்த புலவர்களை வென்று, பாண்டியனுடைய ஆதரவில் மதுரைத் திருக் கோயிலுக்கு வடமேற்றிசையில் சங்க மண்டபத்தில் வீற்றிருந்தார்கள். இவர்களின் வேண்டுகோளின்படி, மதுரைச் சோமசுந்தரக்கடவுள், இவர்களுக்கு ஒரு சங்கப்பலகையை தந்தருளினார். அது ஒரு முழச்சதுரம் உடையது. உண்மைப் புலவர்கள் இருப்பதற்கு மாத்திரம் ஒரு முழம் வளர்ந்து இடம் தரும். அப்புலவர்களின் விருப்பப்படி சிவபெருமானும், ஒரு புலவராய் அப்பலகையில் நடுநாயகமாக வீற்றிருந்தார். அவரோடு சேர்ந்து நாற்பத்தொன்பது புலவர்கள் ஆனார்கள்.

"*சதுரமாயளவிரண்டு சாணதிப் பலகையம்ம*
*மதியினும் வாலிதாகும் மந்திரவலியதாகும்*
*முதியநும் போல்வார்க் கெல்லாம் முழம் வளர்ந்திருக்கை*
*நல்கும் இது நுமக்களவுகோலாய் இருக்கு*
*மென்றியம்பியீந்தார்*".

(திருவிளை - சங்கப்பலகை தந்தபடலம் - 25)

"புலமை தூக்கி அளப்பதாய்" இருந்த காரணத்தால், இந்தச் சங்கப்பலகையைச் <u>"சாரதா பீடம்"</u> என்ற அருமையான சொற்றொடரால் அருணகிரியார் குறிப்பிட்டுள்ளார்.

இந்தச் சாரதாபீடத்தில், முருகவேள் சிவபிரான் திருவுளப்படி - அமர்ந்து - சங்கப் புலவர்களுக்குள் ஏற்பட்ட கலகத்தை தீர்த்தருளியது பற்றி வரலாறு செய்தி கூறுகிறது.

# 63. முயலகன் பற்றிய வரலாறு

அருணகிரியாரது கவிகளில் கிடைக்காத வரலாற்று செய்திகளே இராது எனக்கூறலாம். இவரது கவிகளனைத்தும் "ஒரு அஞ்சறைப்பெட்டி" என கூறலாம். சமையல் அறையில், சமையலுக்கு வேண்டிய தானியங்களை சேகரித்து வைத்திருக்கும் கருவிக்கு "அஞ்சறை" எனப்பெயர்.

தமது பாடலாகிய "விடமளவியரிபரவு" எனத் துவங்கும் பாடலில், முயலகன் வரலாற்றினை 5-வது அடியில், சந்தத்துக்கு ஏற்றவகையில் பாடியுள்ளது மிகவும் அருமை.

*விடமளவி யரிபரவு விழிகுவிய மொழிபதற*
*விதறிவளை கலகலென அநுராகம்-*
*விளையம்ருக மதமுகுள முலைபுளக மெழநுதலில்*
*வியர்வுவர அணிசிதற மதுமாலை;*

*அடரளக மவிழஅணி துகிலகல அமுதுபொதி*
*யிதழ்பருதி யுருகியரி வையரோடே-*
*அமளிமிசை யமளிபட விரகசல தியில்முழுகி*
*யவசமுறு கினுமடிகள் மறவேனே;*

*உடலுமுய லகன்முதுகு நெறுநெறென எழுதிமிர*
*வுரகர்பில முடியவொரு பதமோடி-*
*உருவமுது ககனமுக டிடியமதி முடிபெயர*
*வுயரவகி லபுவனடி திரவீசிக்;*

*கடககர தலமிலக நடனமிடு மிறைவர்மகிழ்*
*கருதரிய விதமொடழ குடனாடுங்-*
*கலபகக மயில்கடவி நிஜதர்கஜ ரததுரக*
*கடகமுட னமர்பொருத பெருமாளே.*

இப்பாடலின் 5-வது அடியில் வரும் கருத்து.

**முயலகன் வரலாறு :-**

**தமது பத்தினிகளின் கற்பைக்கலைத்தனர் சிவபிரான் எனக்கோபித்து, தாருகாவனத்து முனிவர்கள் ஒரு வேள்வி**

செய்து, அவ்வேள்வியில் எழுந்த முயலகன் எனும் ‘பூதத்தை’ சிவபிரான் மீது ஏவினர்.

இறைவன் முயலகனை வீழ்த்தி, அதன் முதுகின்மீது திருவடியை ஊன்றி நின்றாடினார்.

*“முயலகன் தன்னை மெல்லத் தன்னடி அதனால் வீழத்*
*தள்ளி அக்கமலத்தாளை வென்னிடை அருளால் ஊன்றி*
*விண்ணவர் போற்ற நின்றான்”*

என்கிறது கந்தப்புராணம் செய்யுள். (6-13-115).

*“பங்கவலந்தான் பண்பின் முயலகன் முதுகிலூன்றி*
*துங்க நூபுரங்களார்ப்பத் துவங்கிடத்தான் குஞ்சித்தே*
*செங்கைமான் மழுவோன் தூய சிங்கார நடனம் செய்தான்”*

என மேலும் - தடப.புரா. 5-13-ல் கூறப்பட்டுள்ளது. அருணகிரியார் தாம்பாடிய திருப்புக்ழ் (1143)-ல், 8-வது அடியில் கீழ்கண்டவாறு முயலகனைப்பற்றி, “கொடிய தொரு முயலகனின் மீதாடுவார்” எனப் பாடியுள்ளது ஈண்டு கவனிக்கற்பாலது.



நடராசர் காலடியில் முயலகன்

# 64. திருச்செங்கோட்டு முருகன் பெருமை

அருணகிரியார் தாம் பாடிய கந்தரலங்காரப் பாடல் ஒன்றில், "தெய்வத்திருமலைச் செங்கோட்டில் வாழும் செழும் சுடரே, வைவைத்தவேற்படை வானவனே - மறவேன் உனைநான்" என பாடியுள்ளதற்கு காரணம், முருகப்பெருமான் அடியார்கள் கொண்டுள்ள கருணையேயாகும். அதனால்தான், தான் பாடிய கந்தரனுபூதி 51 - பாடல்களிலும் எந்த தலத்தையும் குறித்து பாடாது திருச்செங்கோட்டைப் பற்றி மட்டும் பாடியுள்ளதின் அவசியத்தை அறியமுடிகிறது.

முருகூரில் வாழ்ந்த 'பிரதிவாதிபயங்கரன்' எனும் புலவன், திக்குவிஜயம் செய்து புலவர்களை வாதுக்கழைத்து, அவர்களை அடிமைகளாக்கி வருவது வழக்கம். அதனடிப்படையில் திருச்செங்கோட்டுக்கு வந்த இப்புலவர் குணசீலர் எனும் முருகனடியாரை வாதுக்கு அழைக்கலானான்.

வாதினை அஞ்சின குணசீலர், மலைமேலுள்ள முருகனிடமே முறையிட்டார். அஞ்சா நெஞ்சாக்கம் - தரவல்ல முருகன், 'அஞ்சற்க' எனக் கனவிற் கூறினார். பிரதிவாதி பயங்கரன் எனும் புலவன் வரும்வழியில், திருச்செங்கோட்டுக்கு அணித்தான ஒரு சோலையில் மாடுமேய்க்கும் சிறுபையனாய் முருகப் பெருமானே புலவனே சந்திக்கலானான்.

புலவன் திருச்செங்கோட்டு மலையை கண்ணுற்றதும், இயற்கை வனப்பைப் பார்த்ததும், ஒரு கருத்துத் தோன்ற, ஒரு பாடலாக இயற்றலாம் என துணிந்து, திருச்செங்கோட்டு மலையானது போரில் பாம்பு படம் எடுத்து நிற்பது போல தோற்றமளித்ததைக்கண்டு, "சமரமுகத்திருசெங்கோட்டு சர்ப்ப சயிலம் என்ன அமரில் படம் விரித்தாடாததென்னை?" என அரைப் பகுதி பாட்டைப்பாடி, அதை பூர்த்திச்செய்ய தக்க காரணம்

தோன்றாது விழித்துக் கொண்டிருந்தான். அது சமயம் அங்கு நின்றிருந்த மாடு மேய்க்கும் பையன் அவனருகே வந்து திருச்செங்கோடு முருகன் வீற்றிருக்குமலை ஆயிற்றே. அவனுடைய மயில் வாகனம், அவனைத்துதிக்க இம்மலைமீது ஏறிவரும் அடியார்களைத் தீண்டினால், மலைமீது முருகன் ஆலோகணித்திருக்கும் மயில் தன்னைக் கொத்திவிடும் என்ற பயத்தினால், இந்த மலையாகிய பாம்பு படம் எடுத்து ஆடாது அமைதியாய் உள்ளது என்னும் கருத்தை அமைத்து - அஃது ஆய்ந்திலையோ.

*"நமரன் குறவள்ளி பங்கன், எழுகரை நாட்டுயர்ந்த குமரன் திருமருகன் - மயில் வாகனம் - கொத்துமன்றே"*

எனப்பாடிப் பாடலை முடித்தனன்.

பிரதிவாத பயங்கரன் இப்பதிலை பாடல் வாயிலாக மாடு மேய்க்கும் பையன் கூறக்கேட்டதும் ஆச்சர்யம் அடைந்தான்.

உடனே, புலவன் பையனைப் பார்த்து "நீயார்" என கேட்டதும், நான் திருச்செங்கோட்டுப் புலவர் குணசீலரின் கடைமாணவன். விரைவில் பாடத் தெரியவில்லை என்று என்னை விலக்கி, மாடு மேய்க்கும் தொழிலுக்குத்தான் நீ தகுதி என அனுப்பிவிட்டார். இப்பதிலை பையன் கூறக்கேட்டதும், புலவன் தள்ளப்பட்ட மாணவனே இவ்வளவு விரைவில் கருத்தமைத்து பாடுகின்றானே. இவனது வாத்தியார் குணசீலர் எத்தகைய புலமை பெற்றிருப்பான் என வியந்து, ஊரை விட்டே ஊராருக்கு தெரியாமலேயே திரும்பப்போய் விட்டான்.

இத்தகு பெருமை வாய்ந்த தலம் என்பதை உணர்ந்து தான் கந்தரலங்காரத்தில் உனைநான் மறவேன் என துதி செய்ததோடு தாம்பாடிய கந்தரனுபூதியிலும், திருச்செங்கோட்டு வேலவன் ஒருவனை மட்டும் குறித்து பாடியுள்ளதின் விசேடம் அறிய முடிகிறது.

# 65. பார்த்தன் கையினால் அடியுண்ட சிவன்

அருணகிரியார் பாடலில் வராத வரலாற்றுச் செய்திகளே பெரும்பாலும் இராது எனலாம். இதனால் அருணகிரியார் நிரம்பியகல்விஞானம் பெற்றவர் என்பது சொல்லாமலே விளங்கும். ஞானசம்பந்தர்பால் மிகவும் ஈடுபாடு கொண்டவர். சம்பந்தரையே முருகன் என உறுதியாகக் கொண்டவர் என்பது இவரது பாடல்களில் இருந்தே அறிய முடிகிறது. கந்தர் அனுபூதியிலும், கந்தரலங்காரத்திலும், திருவகுப்பிலும் ஒரு இடத்தில் கூட சம்பந்தர் பற்றி பாடியதாக குறிப்புகள் காணவில்லை. அதேபோன்று, வயலூரைப்பற்றி திருப்புகழ் பாடல்களில் மட்டுமே புகழ்ந்து பாடியுள்ளது வயலூரில் “செய்ப்பதியும் வைத்து உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு” என அனுக்கிரகத்தால், வேறு எந்த கவிகளிலும் காணமுடிய வில்லை. “மங்காதிங்கு” எனத்துவங்கும் பொதுப்பாடலில், அர்ச்சுனனால் வில்லினால் அடிபட்டது குறித்து 5-வது அடியில் சுருங்கச் சொல்லி, விஸ்தாரமான வரலாற்றினை குறித்து பாடியுள்ளது இவரது புலமைக்கும், ஆற்றலுக்கும் ஓர் எடுத்துக்காட்டாகவே கொள்ளலாம். பாடல் :-

*மங்காதிங் காக்குஞ் சிறுவரு*
*முண்டேயிங காற்றுந் துணைவியும்*
*வம்பாருந் தேக்குண் டிட வறி தெனும்வாதை-*
*வந்தேபொன் தேட்டங் கொடுமன*
*நொந்தேயிங் காட்டம் பெரிதெழ*
*வண்போதன் தீட்டுந் தொடரது படியேமன்;*

*சங்காரம் போர்ச் சங் கையிலுடல்*
*வெங்கானம் போய்த்தங் குயிர்கொள*
*சந்தேகந் தீர்க்குந் தனுவுட னணுகாமுன்-*

*சந்தாரஞ் சாத்தும் புயவியல்*
*கந்தாஎன் றேத்தும் படியென*
*சந்தாகபந் தீர்த்தென் றடியிணை தருவாயே;*

*கங்காளன் பார்த்தன் கையிலிடி*
*யுண்டேதிண் டாட்டங் கொளுநெடு*
*கன்சாபஞ் சார்த்துங் கரதல னெருதேறி-*
*கந்தாவஞ் சேர்த்தண் புதுமல*
*ரம்பான்வெந் த்ரர்ப்பொன் றிட விழி*
*கண்டான்வெங் காட்டங் கனலுற நடமாடி;*

*அங்காலங் கோத்தெண் டிசைபுவி*
*மங்கா துண் டாற்கொன் றதிபதி*
*அந்தாபந் தீர்த்தம் பொருளினை யருள்வோனே-*
*அன்பாலந் தாட்கும் பிடுமவர்*
*தம்பாவந் தீர்த்தம் புவியிடை*
*அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே.*

**பார்த்தன் கையில் அடி உண்டது :**

அருச்சுனன் (பார்த்தன்) தவஞ்செய்திருந்த பொழுது துரியோதனன் ஏவலால் மூகன் எனும் அசுரன், அர்ஜுனனைக் கொல்ல பன்றி வடிவுடன் வருவதை அறிந்த சிவபிரான், தான் ஒரு வேடன் உருக்கொண்டுவந்து, அம்பெய்தி அப்பன்றியின் பின்பாகத்தைப் பிளந்தார் அதன்பின் அருச்சுனனும் பன்றிபடுவதைக் கண்டு அதன் முகத்தில் அம்பெய்தினான். இருவர் செலுத்தின அம்பினால் பன்றி இறந்து வீழ்ந்தது.

எங்கள் வேடராஜன் முன்பு அம்பு தொடுக்க, நீ எப்படி பின்பு அம்பு எய்தினாய் என வேடராஜனுடைய பரிவாரங்கள் அருச்சுனனை சண்டைக்கிழுக்க வேடராஜனான (சிவனுக்கும்) அர்ச்சுனனுக்கும் விற்போர் நடந்தது. இப்போரில் (வேடன் - சிவபிரான்) அர்ச்சுனனுடைய வில்லில் நாணை அறுத்து எறிந்தார்.

நாண் அறுபட்ட வில் தடியால் அர்ஜுனன் வேட ராஜனுடைய முடிமேல் அடித்தான். அவன் அடித்த அடி திருமால், பிரமன் ஆகிய சகல உயிர்கள் மீதும் விழுந்தது.

*விண்ணிலுறை வானிவரில் யாரடி படாதவர் விரிஞ்சன்*
*அரிய முதலியோர்*
*மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர் . . . . . . .*
*எண்ணில் பல யோனியிலும் பாரடி படாதன . . . . . . .*
*பிறப்பிலி இறப்பிலி . . . . . . . நான்கை அடி உண்டபொழுதே"*

வில்லி - அருச்சுனன்தவம் (107 - 108) கூறுகிறது.



பார்த்தன் கையில் அடி உண்டது

# 66. அருணகிரியாரின் திறமையான வேண்டுகோள்

அருணகிரியாரால் புகழப்பட்ட பற்பல விதமான நிகழ்ச்சி களை கண்டு இன்புற்ற அடியார்களுக்கு, "மாண்டார் எலும் பணியும்" எனத்துவங்கும் பாடலில், இவரது விண்ணப்பம் மிக சாதூர்யமாக முதன் நான்கு அடிகளில் பாடியுள்ளது மிகவும் அருமை. பாடல் :-

*மாண்டாரெ லும்பணி யுஞ் சடை*
*யாண்டாரி றைஞ்க மொழிந்ததை*
*வான்பூத லம்பவ னங்கனல் புனலான-*
*வான்பூத முங்கர ணங்களு*
*நான்போயொ டுங்கஅ டங்கலு*
*மாய்ந்தால்வி ளங்கும தொன்றினை யருளாயேல்;*

*வேண்டாமை யொன்றைய டைந்துள*
*மீண்டாறி நின்சர ணங்களில்*
*வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை யுடையேனாய்-*
*வேந்தாக டம்புபு னைந்தருள்*
*சேந்தாச ரண்சர ணென்பது*
*வீண்போம தொன்றல என்பதை யுணராதோ;*

*ஆண்டார்த லங்கள ளந்திட*
*நீண்டார்மு குந்தர்த டந்தனில்*
*ஆண்டாவி துஞ்சிய தென்றுமு தலைவாயுற்-*
*றாங்கோர் சிலம்பு புலம்பிட*
*ஞான்றூது துங்கச லஞ்சலம்*
*ஆம் பூமு ழங்கிய டங்கும ளவில்நேசம்;*

*பூண்டாழி கொண்டுவ னங்களி*
*லேய்ந்தாள வென்று வெறுந்தனி*
*போந்தோல மென்று தவும்புயல் மருகோனே-*

*பூம்பாளை யெங்கும ணங்கமழ்*
*தேங்காவில் நின்றதொர் குன்றவர்*
*பூந்தோகை கொங்கைவி ரும்பிய பெருமாளே.*

மேலே கூறின பாடலின் கண் முதற் நான்கடியில் சமத்காரமான - பேச்சுத்திறமையான - வேண்டுகோளை அருணகிரியார் விண்ணப்பிக்கிறார் பின் வருமாறு - முருகா! உன் தந்தை சிவபிரான் உன்னை வணங்கி நிற்க, நீ அவருக்கு உபதேசித்த அந்த ரகசியப் பொருளை எனக்கு உபதேசிக்க உனக்கு பிரியம் இல்லையானால் - உன்னை நான் பலவந்தப் படுத்தவில்லை அதற்கு பதிலாக வேறொரு சிறிய வேண்டுகோள் ஒன்றை விடுக்கிறேன். அது என்னவென்றால் "வேண்டாமை" - (அவாஇன்மை) என்பதை நான் அடைய வேண்டும்! "வேந்தா, சேந்தா" எனவரும் உன் திருநாமங்களை ஓதுதல் வீண்போகாது என்பதை நான் உணர வேண்டும். இவ்வளவே என்கின்றனர். பார்ப்பதர்க்கு எளிது போல் யாவர்க்கும் தோன்றுகின்ற "வேண்டாமை" அடைதல் அவ்வளவு எளிதா! இறைவனை ஏமாற்றுவது போல் உரைப்பதொரு வேண்டுகோள் இது. இது போன்று, சில ஆன்றோர்கள் இறைவனை ஏமாற்றுமுறையில் விண்ணப்பிப்பதுண்டு. இரண்டொரு உதாரணம் வாயிலாக கூறலாம்.

**1. ஔவையார் :-**

*"பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை*
*நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்*
*துங்கக்கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்*
*சங்கத்தமிழ் மூன்றும் தா".*

(இயல், இசை, நாடகம் - 3 தமிழ்)

**2. மணிவாசகர் :-**

சிவனே! நீ உன்னைக் கொடுத்து என்னை வாங்கினாய் - நம் இருவரில் யாருடைய சாமர்த்தியம் பெரிது என வினவுகின்றார். பாடலைப் பார்ப்போம்:-

*தந்தது உன்தன்னைக் கொண்ட தென்தன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்? அந்த மொன்றில்லா*
*ஆனந்தம் பெற்றேன், யாது நீ பெற்றதொன்றுயென்பால்"*

(திருவாசகம்)

**3. அம்பலவாணர் தேசிகர் கலம்பகம் :**

"*உடல் முதலாமருவிய மூன்றுங்கொண்டொன்றீவதற்கு*
*வருத்தம் என்னே*"

என்கின்றார். மனம், வாக்கு, காயம் மூன்றையும் சமர்ப்பிக்கிறேன். நீ, அவைகளுக்குப்பதிலாக - முத்தி என்கின்ற 'ஒன்றை'த்தா என்றபடி.

**4. கவிராஜ பண்டாரத்தையா எனும் புலவர் :-**

"ஒரு விமலைக்காதியிலேபாதி தந்தாய் அத்தனை வேண்டா மெனக்கு பாதியிலே பாதி தந்துபார்" என்கின்றார். விமலைக்கு - பார்வதிக்கு உன் உடலில் பாதி பாகம் (அர்த்தநாரீசுரராய்) தந்தாய் - எனக்குப் பாதி வேண்டாம். பாதியில்பாதி அதாவது "கால்"தந்தருள் என்றபடி - கால் - திருவடி. அதாவது உன் திருவடியைத்தா என்றவாறு.



ஸ்ரீ அருணகிரிநாதர்

# 67. முருகனிடம், அருணகிரியாரின் முறையீடு

அருணகிரியாரது பாடல்கள் பல படித்தும், பொருள் உணர்ந்த போதிலும், இந்தப்பாடலில் "முனையழிந்தது" முதல் 4 அடிகளின் நடை அழகு வியக்கத்தக்க விதத்தில், அருணகிரியார் தமது பாடல்களின் மூலம் எந்தெந்த விதத்தில் வேண்டியவாறே, இறைவன் அவருக்கு அளித்த திருவாக்கு இப்பாடலிற் பொலிவுற்று விளங்குவதை காணமுடிகிறது. பாடல் :-

*முனைய ழிந்தது மேட்டிகு லைந்தது*
*வயது சென்றது வாய்ப்ப லுதிர்ந்தது*
*முதுகு வெஞ்சிலை காட்டிவ ளைந்தது ப்ரபையான-*
*முகமி ழிந்தது நோக்குமி ருண்டது*
*இருமல் வந்தது தூக்கமொ ழிந்தது*
*மொழித ளர்ந்தது நாக்குவி ழுந்தது அறிவேபோய்;*

*நினைவ யர்ந்தது நீட்டல் முடங்கலு*
*மவச மும்பல ஏக்கமு முந்தின*
*நெறிம றந்தது மூப்புமுதிர்ந்தது பலநோயும்-*
*நிலுவை கொண்டது பாய்க்கிடை கண்டது*
*சலம லங்களி னாற்றமெ ழுந்தது*
*நிமிஷ மிங்கினி யாச்சுதென் முன்பினி தருள்வாயே;*

*இனைய இந்திர னேற்றமு மண்டர்கள்*
*தலமு மங்கிட வோட்டியி ருஞ்சிறை*
*யிடு மிடும்புள ராக்கதர் தங்களில் வெகுகோடி-*
*எதிர்பொ ரும்படி போர்க்குளெ தீர்ந்தவர்*
*தசைசி ரங்களூ நாற்றிசை சிந்திட*
*இடிமு ழங்கிய வேற்படை யொன்றனை*
*யெறிவோனே;*

*தினைவ னங்கிளி காத்தச வுந்தரி*
*அருகு சென்றடி போற்றிம ணஞ்செய்து*
*செகம றிந்திட வாழ்க்கைபு ரிந்திடு மிளையோனே-*
*திரிபு ரம்பொடி யாக்கிய சங்கரர்*
*குமர கந்தப ராக்ரம செந்தமிழ்*
*தெளிவு கொண்டடி யார்க்குவி ளம்பிய பெருமாளே.*

இனி முதல் 4 அடிகளில் தொகுத்துள்ள நடையழகு மிகவும் வியக்கத்தக்கது. இதில்பொதிந்துள்ள வர்ணனைகளை ஊன்றிக்கவனித்தல் அவசியம்.

துணிவு, தைரியம் அழியலாயின. இருந்த ஆணவம் - தானெனும் கீர்த்தி தொலைந்தது. வயது ஏறிவிட்டது பற்கள் விழுந்துவிட்டன. முதுகு நன்றாய் வளைந்த வில் எனும்படி கூன் விழுந்துவிட்டது.

ஒளி பொருந்திய முகம், களையை இழந்தது, பார்வை மங்கிபோனது, உடன் இருமலும் தொடர ஆரம்பித்தது, தூக்கம் அறவே போயிற்று, பேச்சு தடுமாற்றமடைந்தது, நாக்கு ருசியை உணராது போயிற்று, அறிவு கெட்டுப்போய் ஞாபக சக்தியற்று மறதி வந்துவிட்டது. கால், நீட்டவும், மடக்கவும் இயலவில்லை. மயக்கமும் பலவிதமான கவலைகளும் தோன்றலாயிற்று. ஒழுக்கநெறியும் மறந்து போய்விட்டது. மூப்பு-கிழட்டுத்தன்மை தொடங்கலாயிற்று. பலவிதமான வியாதிகளும் நிலையாக தொற்றிக் கொண்டது. பாயில் படுக்கை விடாது பிடித்துக் கொண்டது. சிறுநீர், மலம் இவைகளின் துர்நாற்றம் அடிக்கவிட்டது. கடைசியில் உயிர் ஊசலாடும்போது என் முன்பு சுற்றத்தார், உலகோர் ஏளனம் பேசுவதற்கு முன்பாக, நான் சுகம்பெறும்படி கருணை கூர்ந்து அருள்வாயாக என முருகனிடம் விண்ணப்பித்தது மிகவும் உணர்ச்சிபடும் விதத்தில் பாடியுள்ளது அருணகிரியாருக்கே புகழ்சேர்க்கிறது.

# 68. திருப்புகழ் பாமாலை

அருணகிரியார் முருகனுக்கு திருப்புகழ் பாமாலை சூட்ட எண்ணினார். அடியார்கள் யாவரும் இறைவனுக்கு பூமாலை சூட்டி வணங்குவர். மாறாக அருணகிரியார் என்றென்றும் வாடாத மலரால் சூட்ட எண்ணி, பாமாலையால் சூட்டி அவனுக்கு அழகுச் சேர்த்து ரசித்தார். இதனைக் குறித்து, "ஆசைக்கூர்பத்தனேன்" எனும் பாடலில் அறிய முடிகிறது. பாடல் :-

*ஆசைகூர் பத்த னேன்மனோ பத்ம*
*மானபூ வைத்து நடுவேயன்-*
*பானநூ லிட்டு நாவிலே சித்ர*
*மாகவே கட்டி யொருஞான;*

*வாசம்வீ சிப்ர காசியா நிற்ப*
*மாசிலோர் புத்தி அளிபாட-*
*மாக்ருதா புஷ்ப மாலைகோ லப்ர*
*வாளபா தத்தி லணிவேனோ;*

*மூசுகா னத்து மீதுவாழ் முத்த*
*மூரல்வே டிச்சி தனபார-*
*மூழ்குநீ பப்ர தாபமார் பத்த*
*மூரிவே ழத்தின் மயில்வாழ்வே;*

*வீசுமீ னப்ப யோதிவாய் விட்டு*
*வேகவே தித்து வருமாசூர்-*
*வீழமோ திப்ப ராரைநா கத்து*
*வீரவேல் தொட்ட பெருமாளே.*

பாடலின் முதன் நான்கு அடிகளின் கருத்து. முருகா! உன் மீது ஆசை கொண்ட அடியேன் - என்னுடைய "மனம்" என்பதையே தாமரை மலராக்கி, அதை "அன்பு" எனும் நார் கொண்டு, என்னுடைய "நா" என்னும் உறுப்பிலே அழகாக வைத்துக்கட்டி, அதற்கு "ஞானம்" எனும் வாசனையை சேர்த்து "நல்லறிவு" எனும் வண்டுகள் அதை ரீங்காரம் செய்யும்படி வைத்து, மந்த்ரபூர்வமாக இங்ஙனம் மானசீகமாக ஞானப்

பூமாலையைக்கட்டி, உனது பவளம் போன்ற திருவடிகளில் சூட்டி அனுபவிக்க மாட்டேனா என்பது இப்பாட்டின் முதல் 4 அடிகளில் கூறியுள்ள கருத்து. 'பக்திவலையில் படுவோன்' இறைவன் ஆதலினால், ஆசைகூர்பத்தன் என முதலடியைத் தொடங்கினார். பூக்களில் தாமரையே சிறந்ததாதலின், மனோபத்மம் எனும் பூவை வைத்து, மாலையை தொடுக்கின்றேன் என்றார் அருணகிரியார்.

'சும்மா இருக்கின்ற திறம் அரிது' எனத் தாயுமானாரும் கூறியுள்ளதால் மனம் கட்டப்பட்டாலொழிய, இறைவனை காணுதல் அரிதாதலின் 'மனோபத்மமான பூவைத்து .... கட்டி' என்றார்.

'அன்பொடுருகி அகங்குழைவார்க்கன்றி என்போன் மணியினை எய்த ஒண்ணாதே',

'அன்பினுள்ளாகி அமரும் அரும்பொருள்' என திருமந்திரம் கூறுதலால், 'அன்பான நூலிட்டு மாலையைக் கட்ட ஆசைப்பட்டார்.

பின்னும் 'அர்ச்சனை பாட்டே ஆகும்' என பெரியபுராணத்திலும், 'வாயே வாழ்த்து கண்டாய்', 'நா நாளும் நவின்றேத்து' எனத் தேவாரத்திலும் முழங்குதலால் - இறைவன் திருப்பணியாம் மாலையை தொடுக்க புனிதமான உறுப்பு 'நா' எனக் கொண்டு, 'பாமாலை' சூட்டவே விரும்புகின்றேன் என்றார். நான்கட்டும் மாலையில் ஞானத்தின் நறுமணம் வீச வேண்டும் என கருதுகிறார். 'அறிவுடையார் நெஞ்சத்தங்கு நின்றானே' எனத்திருமந்திரம் கூறுவதால் 'புத்தி' (அறிவு) எனும் வண்டு அம்மாலையில் ரீங்காரம் செய்ய வேண்டும் எனவும் விரும்புவதாக பாட்டு அறிவிக்கிறது. தொடுத்த மாலையை உன்பவளம் போன்ற திருவடிகளில் சூட்டுதலே சிறந்தது எனத் தெரிந்து நான் கட்டும் மாலையை 'பிரவாள பாதத்தில்' அணிவேனோ என விழைகின்றனர்.

மேலும், மனமாகிய பத்மம் (தாமரை) கட்டப்படுவதால் அந்தத் தாமரையில் வாசம் செய்யும் திருமகளும், கலைமகளும் கட்டப்பட்டு இவருக்கு வசப்படுவர். இதனால் கல்வியும் செல்வமும் தமக்கு வசப்படும் என்பதும் தெளிவாகிறது.

# 69. ஞானதேசிக மூர்த்தி

அருணகிரியார் முருகனருளால் யோக மார்க்கங்களையும், ஞானத்தின் உட்பொருளையும், பரமானந்தத்தின் விளைவையும் குறித்து, தமது கவிகளில் பொருத்தி பாடியுள்ளதை காணலாம். முருகனை ஞானதேசிகன் எனும் நாமத்தால் வர்ணித்துள்ளதை, "இருகுழைமீது" எனும் பாடலால் அறிய முடிகிறது. பாடல் :-

*இருகுழை மீது தாவடி யிடுவன வோதி நீழலி*
*னிடமது லாவி மீள்வன நுதல்தாவி-*
*இழிவன காம வேதமு மொழிவன தாரை வேலென*
*எறிவன காள கூடமு மமுதாகக்;*

*கருகிய நீல லோசன அபிநய மாத ரார்தரு*
*கலவியில் மீழ்கி வாடிய தமியேனுங்-*
*கதிபெற ஈட றாதன பதிபசு பாச மானவை*
*கசடற வேறு வேறுசெய் தருள்வாயே;*

*ஒருபது பார மோலியு மிருபது வாகு மேருவு*
*முததியில் வீழ வானர முடனேசென்*
*றொருகணை யேவு ராகவன் மருகவி பூதி பூஷணர்*
*உணருப தேச தேசிக வரையேனற்;*

*பரவிய கான வேடுவர் தருமபி ராம நாயகி*
*பரிபுர பாத சேகர சுரராஜன்-*
*பதிகுடி யேற வேல்தொடு முருகம யூர வாகன*
*பரவச ஞான யோகிகள் பெருமாளே.*

மேலே கொடுத்துள்ள பாடலில் கடைசி 8-வது அடியில் 'ஞானதேசிகன் - பெருமாளே' எனப் பாடியுள்ளதின் கருத்தை ஆராய்தல் சிறப்பு.

**1. ஞானதேசிகமூர்த்தி :-**

**துங்கபத்திரை நதிக்கு வடதிசைக்கண் உள்ள, ஞானபுரத்திலே தவத்தால் உயர்ந்த கௌசிக முநிவர் தத்துவ**

ஞானம் கைகூட வேண்டி சடக்கர மந்திரத்தைத் தியானித்துக் குருமூர்த்தியாகிய முருகப்பெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார்.

கந்தக்கடவுள் ஞானாசாரிய மூர்த்தியாகத் தோன்றிச் சிவஞானம் எனப்படும் பதிஞானமே தெளிவை உண்டாக்கும். பேரின்பத்தைக் கூட்டுவிக்கும் என்பதை விளக்கி உபதேசித்தார்.

இங்ஙனம் கௌசிகனுக்கு ஞானத்தின் இயல்புகளை விளக்கிக் காட்டினகாரணத்தால் முருகவேள் "ஞானதேசிக மூர்த்தி" எனப்பெயர் பெற்றார்.

இந்தப் பதிஞானம் தான் பரமஞானம், சிவஞானம், குகஞானம், பரஞானம், தத்துவ ஞானம், திருவடி ஞானம், அருள் ஞானம், அத்துவிதஞானம், மெய்யுணர்ச்சி அனுபவ ஞானம், உண்மை அறிவு எனப் பலவாறு கூறப்படுகிறது. சுப்ரமண்ய பராக்ரமம் எனும் நூலில்.

**2. யோகசாரிய மூர்த்தி :-**

சைவ சித்தம் எனும் தலத்தில் பல முநிவர்கள் கூடியிருந்து, சித்திகளை அடைவதர்க்கு உபாயம் யாது என ஆராயும்போது, நாரதமுநிவர் தோன்றி, "சிவயோகமே சித்திகளையும், ஞானத்தையும், முத்தியையும் கொடுக்கவல்லது. அதன் இலக்கணங்களை உணர்த்த வல்லவர் குகப்பெருமானே" எனக்கூறி மறைந்தனர்.

முனிவர்களும், முருகவேளை நோக்கித்தவஞ் செய்ய, அவர் எழுந்தருளி யோக இயல்புகளை எடுத்து ஓதி மறைந்தார். இங்ஙனம் யோக சாதனங்களை உணர்த்திய காரணத்தால் முருகவேள், "யோகாசாரிய மூர்த்தி" யாயினர் - என சுப்ரமணிய பராக்ரமம் கூறுகிறது. பதி, பசு, பாச இலக்கணம் கேட்டதால் "ஞானயோகிகள் பெருமாளே" என அழைக்கின்றார்.

# 70. திருமழபாடி மாணிக்கம்

உலகத்தில் நமக்கு கிடைக்கும் மணிகளில் எல்லாம் மிக்க உறுதியானதும், மிக்க ஒளி பொருந்தியதுமானது வைரம் என்பர். அதனால்தான் உறுதியான உள்ளம் படைத்தவர்களை வைர நெஞ்சு உடையவர்கள் எனக்கூறுவது வழக்கம். பாரதியாரும் இதனைக் குறித்து :

*"உயிர்களிடத்து அன்பு வேணும் - தெய்வம்*
*உண்மையென்று நானறிதல் வேணும்*
*வயிரமுடைய நெஞ்சு வேணும் - இது*
*வாழும் முறைமையடி பாப்பா"*

எனப் பாடியுள்ளார். நாட்டில் அஞ்சி அஞ்சி இறக்கிறவர்கள்தானே அதிகம். ஆனால், அத்தகைய ஜீவன்களை எல்லாம் காக்கும் இறைவன் நல்லதிடமான அவர் நெஞ்சு படைத்தவனாக இருந்திருக்கிறான். அப்போதுதானே உலகு உயிர் அனைத்தையும் காத்தல் கூடும். அவ்வாறு விளங்குபவனையே வஜ்ரஸ்தம் பேசுரர் எனும் திருநாமத்தோடு ஒருதலத்தில் வீற்றிருக்கிறான். 'மறைநான்கும் ஓலமிட்டு வரம் ஏற்கும் மழபாடி வயிரத்தூணே' என மனமுருகி அப்பர் பாடியிருக்கிறார். இவர் எப்படி வைரத்தூண் ஆனார் என்பதை தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

பிரம்ம லோகத்தில் இருந்து சிவலிங்கத்தைப் புருஷாமிருகம் எடுத்துவந்து, கொள்ளிடம் நதிக்கரையில் பிரதிட்டை செய்து விடுகிறது.

பிரமாவோ தான் பூஜித்த லிங்கத்தைத் தேடி அங்குவந்து அதைப் பெயர்த்து மீண்டும் தன்னிருப்பிடத்துக்கே எடுத்துப் போக விரும்பினார். இறைவனோ அசையாது ஆடாது வைரத்தூணாக, வஜ்ரஸ்தம்பமாக நின்றிருக்கார். பிரமனும் அப்படியே அங்கேயே விட்டுவிட்டு திரும்பினார். பிரமலோகத்தில் இருந்து வந்தவர் எப்படி வைரத்தூணாக மாறினார்?

கற்பகோடி காலங்களாக பக்தர்கள் அன்பெனும் பூமியில் அல்லவா புதைத்து இருக்கிறார்கள் தேவர்கள் ஒரு புறமும், மக்கள் ஒரு புறமும் இருந்து அழுத்த அழுத்த அவர் வைரமாக - வைரத்தூணாக மாறியது வியப்பொன்றுமில்லையே. இந்த வஜ்ரஸ்தம்பேசுரர் வீற்றிருக்கும் தலம் தான் திருமழபாடி. இத்தலத்துக்கு எப்படி மழபாடி எனும் பெயர் வந்தது என தெரிந்து கொள்வது அவசியமாகும். சேரர் மரபில் ஒரு கிளையினர் மழவர் எனப்படுவர். அந்த மழவர்கள் குடியிருந்த பகுதியானதால் மழபாடி என்று ஆகியிருக்கிறது.

மழவர் மகள் தான் செம்பியன் மாதேவி, முன்னமேயே யாவர்க்கும் அறிமுகமானவள் தானே. இத்தலத்தில் இறைவன் மழுவேந்தி நடனமாடி நர்த்தனம் செய்திருக்கிறார். அதனால் மழுஆடி எனும் பெயர் பின்னாளில் மழபாடி ஆயிற்று என்றும் கூறுவர். இதற்கேற்ப, மழுவேந்தி இறைவன் நிருத்தம் செயும் கற்சிலை ஒன்றும் ஆலயத்தில் உள்ளதை நமக்கு உறுதி படுத்துகிறது. வைரத்தூண் எனும் பெயரை கொண்டவரல்லவா என நினைத்து, அவர் மேனியில் வைர ஒளியை எதிர்பார்த்தல் கூடாது. பெயரளவிற்கு ஏற்றாற்போன்று, பெரிய ஸ்தம்பம் போன்ற திருவுருவமாயிருக்கும் என நினைத்தல் கூடாது.

இத்தலத்துக்கு, சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் தரிசித்திருக்கிறார்கள். பாடலும் பாடி உள்ளனர்கள்.

*“அலை அடுத்து பெருங்கடல் நஞ்சு*
*அமுதாய் உண்டு அமரர்கள்தம்*
*தலைகாத்த ஐயர் செம்பொன்*
*சிலை எடுத்து மாநாக நெருப்புக்*
*கோத்து திரிபுரங்கள் தீயிட்ட*
*செல்வர் போலும்!”*

*“நிலை அடுத்த பசும்பொன்னால்*
*முத்தால் நீண்ட நிரைவயிரப்*
*பலகையால் குவைபார்த்து உற்ற*
*மலையடுத்த மழபாடி வயிரத்தூணே!*
*என்றென் றென்றே நான்*
*அரற்றி நைகின்றேனே”*

என்கிறது அப்பர் தேவாரம். சுந்தரரோ, ஆலம் பொழில் சென்று இரவு தங்கியிருந்த சமயம் மழபாடி இறைவனுக்கு சுந்தரரை அழைத்து பதிகம் பாடச் சொல்ல நினைத்து கனவில் தோன்றி, "என்னை மறந்தனயோ?" என கேட்டிருக்கிறார். அதனால் சுந்தரர், மழபாடி தலத்து ஈசனை தொழுது பதிகம் பாடினார்.

*"பொன்னார் மேனியனே! புலித்*
*தோலை அரைக்கசைத்து*
*மின்னார் செஞ்சடைமேல்*
*மிளிர் கொன்றை அணிந்தவனே!*
*மன்னே! மாமணியே!*
*மழபாடியுள் மாணிக்கமே!*
*அன்னே உனையல்லால்*
*இனியாரை நினைக்கேனே!"*

எனத் தொடங்கும் பாடலை பாடியருளினார்.

வயிரத்தூணாக இருந்த இறைவன் சுந்தரருக்குச் செக்கச் சிவந்த மாணிக்கமாக அல்லவா காட்சி தந்திருக்கிறார்.

இந்த மழபாடி மாணிக்கம் சிறந்த வரப்பிரசாதமாக இன்றும் வணங்கும் அடியார்களுக்கு அருட்பிரசாதமாக விளங்குகிறார். வேத வியாசரின் வாத நோய் இத்தலத்துக்கு வந்து வணங்கிய பின்புதான் தீர்ந்திருக்கிறது. கோயில் பலிபீடத்தில் வைத்திருந்த உணவை ஒரு கழுகு வந்து சாப்பிட எத்தனிக்கையில் அதை ஒரு வேடன் அம்பெய்து வீழ்த்த, அக்கழுகுக்கு இரங்கி மோட்ச பதவியையே அளித்திருக்கிறார் இவ்விறைவன். அந்தக் கழுகு பரம்பரையிலே வந்த கழுகு ஒன்று இன்றும் ஆலயத்து கோபுரத்திலே வசித்து வருகிறது என்கிறார்கள்.

இங்குள்ள மூலவரை வணங்கிய பின்னர் வெளியே வந்து தான் வடபக்கம் தனிக்கோயிலில் வீற்றிருக்கும் அன்னை அழகம்மையை கண்டு தரிசிக்கலாம்.

# 71. தேவேந்திர சங்க வகுப்பு

அருணகிரியார், கிளிசொரூபம் வேண்டி, தமது பாடல்களில் முருகனிடம் பிரார்த்தித்துக் கொண்டுள்ளது, இவரது பாடல்களிலிருந்து அறியமுடிகிறது.

*"வேண்டு மடியர் புலவர்*
*வேண்ட அரிய பொருளை*
*வேண்டுமளவில் உதவும் - பெருமாள்" - அல்லவா*

அருணகிரியாரின் வேண்டுகோளை ஏற்று, கிளி சொரூபம் அளித்தார் முருகப்பெருமான். கிளியாக உருப்பெற்றபின், அருணகிரியார்,

*"நின்பதயுகப்ரசித்தி என்பனவகுத்துரைக்க நின்பணி*
*தமிழ்ரத்தை - அருள் வாயே"*

எனப் பாடியதிலிருந்து, முருகனது பெருமைகளைபாட ஆசைப்பட்டார் எனத் தெரிகிறது. இவர் கந்தரனுபூதி, கிளியானபின் பாடினார் எனக் கருதுவர் சிலர். அன்னாரதுபாடல் ஒன்றை அகக்கண் கொண்டுபார்த்தால் விளங்கும். தாம் பாடிய திருப்புகழில் - ஒரு அடியில் கீழ் கண்டவாறுபாடியுள்ளது தெரிவிக்கிறது.

*"அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து முத்தியதாம்*
*அநுபூதி என் அருட்திருப்புகழ் ஓதுக வேல் மயில் -*
*அருள்வோனே"*

எனப்பாடியதிலிருந்து, தாம்மானுட தேகத்திலிருந்தபோது தான் கந்தரனுபூதி பாடியிருத்தல் வேண்டும் என ஊகிக்க முடிகிறது.

அருணகிரியார், கிளிசொரூபமடைந்து, பின்னர் பாடியது திருவகுப்பு எனக் கொள்ளலே சிறப்பு. அருணகிரியாரே ஒருபாடலில்,

*"நின்பத யுகப் பிரசித்தி என்பென வகுத்துரைக்க*
*நின்பணி தமிழ்த்ரயத்தை - அருள்வாயே"*

என வேண்டுகோளிட்டதை, அன்னாரது பாடல்களிலிருந்தே அறிய முடிகிறது.

ஆகையால், முருகனுடைய சீர்பாதத்தைக் குறித்து பாடியது சீர்பாத வகுப்பு என்பதாகும். இதற்கு அடுத்தாற் போல், முருகன் திருநாமத்தை உரைப்பவர் இவர் என ஆராய்ந்து அறிந்து அத்தகையோரை, தேவேந்திர கூட்டமும் வணங்கும் என்பது குறித்து பாடியது, "தேவேந்திர சங்க - வகுப்பு" என்பதாகும். இவ்வகுப்பில் உள்ள தேவியின் துதியாக அழகும், சந்தமும் பொருத்தி தேவிதுதியை தூய நூல்களில் காண்பது அரிது.

பாடல் :- "தரணியிலரணிய" - தொடங்கும்பாடல்

*தரணியி லரணிய முரணிர ணியனுடல்*
*தனைநக நுதிகொடு*
*சாடோங்குந டுங்கிரி யோடேந்துப யங்கரி*

*தமருக பரிபுர ஒலிகொடு நடநவில்*
*சரணிய சதுர்மறை*
*தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை*

*சரிவிளை விரிசடை யெரிபுரை வடிவினள்*
*சததள முகுளித*
*தரமாங்குச மென்றிரு தாளாந்தர அம்பிகை*

*தருபதி சுரரொடு சருவிய அசுரர்கள்*
*தடமணி முடிபொடி*
*தானும்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி;*

*இரணகி ரணமட மயின்ம்ருக மதபுள*
*கிதவிள முலையிள*
*நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்*

*இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர்*
*எனதுயிர் கொளவரின்*
*யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொ ளுங்குயில்*

*இடுபலி கொடுதிரி யிரவலர் இடர்கெட*
*விடுமன கரதல*
*ஏகாம்பர யிந்திரை மோகரங்கசு மங்கலை*

*எழுதிய படமென இருளறு சுடரடி*
*யிணைதொழு மவுனிகள்*
*ஏகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி*

*கரணமு மரணமு மலமொடு முடல்படு*
*கடுவினை கெடநினை*
*காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்*

*கனலெரி கணபண குணமணி யணிபணி*
*கனவளை மரகத*
*காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்*
*கனைகழ நினையலர் உயிரவி பயிரவி*
*கவுரிக மலைகுழை*
*காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்த பெருந்திரு*
*கரைபொழி திருமுக கருணையி லுலகெழு*
*கடனிலை பெறவளர்*
*காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன்;*
*அரணெடு வடவரை யடியொடு பொடிபட*
*அலைகடல் கெடஅயில்*
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்குமரன்குகன்
*அறுமுக னொருபதொ டிருபுய னபிநவ*
*னழகிய குறமகள்*
*தார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்கள் அந்தகன்*
*அடன்மிகு கடதட விகடித மதகளி*
*றனவர தமுமக*
*லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்*
*அதிபதி யெனவரு பொருதிறல் முருகனை*
*அருள்பட மொழிபவர்*
*ஆராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே.*

இப்பாடலில் வருகின்ற 16-அடிகளின் கருத்தைப் பற்றி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

வலிமையான கோட்டை, வலிமையானகரவலையும் உடைய இரணியனை, நகத்தினால் கொன்று, நரசிம்ம உருவத்தினள், அச்சத்தைத் தருபவள்.

உடுக்கை, கால்சிலம்பு இவைகளுடன் நடம்புரியும் பாதங்களையுடையவள். மந்திரங்களின் சக்தியாகிய பராசக்தி.

வளையல்கள் அணிந்தவளும், நெருப்பைப் போன்றவளும், லட்சுமிகரபொருந்தியதுமான திருவடிகளையுடையவளுமான அம்பிகை,

தேவர்களுக்கு இன்னலளித்த அசுரர்களோடுபோராட, செவ்விய திருக்கரத்தில் இருந்த வாளாயுதத்தை செலுத்தினவள்.

இமயத்தில் ஒளிபொருந்திய மடமயிலுக்கு ஒப்பானவள். இளநீர் போன்ற கொங்கையினால், துவண்டு நூல்போல் கடையை உடையவள்.

எமதூதர்கள் என் உயிரை கவரவந்தால், என் வருத்தத்தை நீக்கி, என் எதிரே வந்து ஆட்கொள்பவளே.

காஞ்சி ஏகாம்பரநாதரின் தேவியாகிய ஏலவார் குழலி எனப்படும், சுமங்கலி.

தனது திருவடிகளை தொழும் ஞானிகளுக்கும், முத்தி நிலை தருகின்றவரும், பாசம், அங்குசம் திருக்கரத்தில் கொண்டுள்ள சுந்தரி.

ஆணவம், கன்மம், மாயை மூன்றும் கெட்டொழிய, அடியார்களின் மனக்குகையில் இருப்பவளே.

பெருமைமிக்க ஆபரணங்களை அணிந்தமரகத நிறத்தினள்.

தன்கழலை வணங்காதவர்களின் உயிரை மாய்ப்பவள். சிவபிரானது பத்தினி.

தனது திருமுககருணையினால், ஏழுஉலகங்களையும் நிலைபெற்று வாழ, கிளியைப் போன்ற சாம்பவி.

மேருமலைபட்டொழியும், கடல் வற்றிடவும் வேலா யுதத்தைச் செலுத்தின தமிழ்க் கடவுளான குமாரமூர்த்தி.

ஆறுமுகமூர்த்தி. புதுமையுடையவன். குறமகள் வள்ளி சூட்டிய மாலை அணிந்தவன். பகைவர்களுக்கு எமன் போன்றவன்.

வலிமை மிக்க யானைமுகத்துக் கணபதியை சதாகாலமும் துதிக்கிறவர்களின் சிந்தையிலே, தானும் வீற்றிருப்பவனும்.

திருச்செந்தூரில் சேனாதிபதியாய் வந்தவனும், போரில் திறமை வாய்ந்தவனும், அவனை அருள்பட மொழிபவர் யார், யார் என ஆய்ந்து, அத்தகையோர்களை தேவந்திர கூட்டத்தாரும் வணங்குவார்கள்.

குறிப்பு :- இவ்வகுப்பு ஒன்றிலிருந்து பன்னிரண்டு அடிவரை, தேவியாரை போற்றும் துதிப்பாடலாகும். ஏனைய கவிகளாகிய திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தர் அனுபூதி போன்ற கவிகளில் உலக பந்தபாசங்களை குறித்து பாடிய போதிலும், திருவகுப்பு எனும் பாடலில் மட்டும் சிற்றின்ப வர்ணனையோ நோயின் தாக்கத்தையோ, வறுமையின் கொடுமையையோ சிறிதும் கலவாது முருகனது பெருமைகளை மட்டும் பாடியுள்ளதை நோக்கின் கிளியாயின பின்பு திருவகுப்பு பாடியிருக்க வேண்டும் என கருத முடிகிறது.

# பத்துமலை திருத்தலத்தில்
# 140 அடி உயர பொன்னிறத் திருமுருகன்

## கோலாலம்பூர் - மலேசியா





திருப்புகழ் மாமணி, மு. அருணகிரி



ஸ்ரீ அருணகிரிநாதர்

## நூலாசிரியர்

இந்நூலாசிரியர் திருப்புகழ் மாமணி, மு. அருணகிரி வள்ளிமலை திருப்புகழ் சச்சிதானந்த ஞானிகளின் சீடர், வள்ளிமலை திருப்புகழ் ஆஸ்ரமத்தில் குருகுலம் ப[illegible]ன்றவர்.

அருணகிரியாரின் பாடலகளால மனம் ஈாக்கப்படடு, திருபபுகழைக் குருநாதா பயிற்றுவித்த இசையிலேயே பாடியவா, வயது முதிா்ந்த இன்றைய நாள்வரை பரப்பியும் வருகிறாா.

## இந்நூலைப்பற்றி.....

அனைவரின் உள்ளத்தையும் கவரும் வகையில 'இருப்பவல் திருப்புகழ்' எனும் தலைப்பில இந்நூல் தொடஙகுகிறது. வினாயகர்தான் முதல் எழுத்தாளர் எனும் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு எந்த ஒரு கடிதங்களையும் துவங்குமுன் பிள்ளையார் சுழியைப் போடும் வழக்கத்தைச் சிறப்புடன் விளக்கம் தரப்பட்டுள்ளது. மூவேந்தர்களும் தருமத்தை முன்னிருத்தியே நாட்டை ஆண்டபோதிலும், மனுநீதிச்சோழன் ஆட்சியில் தருமமே அவர் பின் சென்றது எனும் விளக்கம் சிந்திக்க வைக்கிறது.

திருத்தணித் திருப்புகழ்த் திருவிழாவினைத் துவக்கி வைத்தவர், வள்ளிமலை திருப்புகழ் ஞானியே மூலபுருஷர் என உறுதியாகக் கூறப்பட்டுள்ளது.

சம்பந்தர், அப்பர் போன்றோர்கள் நிகழ்த்திய அற்புதங்களைவிட, சுந்தரர் நிகழ்த்திய அற்புதமே சிறப்பு என்பதை இந்நூல் தெரிவிக்கிறது.

மேலும் பல அற்புத ஆன்மீகக் கருத்துக்களும் இந்நூலில் பரிமளிக்கின்றன.

### 4.7.1.3. வாசனையின் வலிமை:

வாசனையின் வலிமையை மலைக்கு ஒப்பிடுவர். அது ஒருவரைப் பின்பற்றினால் விடுதல் அரிது என்று கீழ்வரும் பாடல் வரியால் அறிய முடிகிறது.

> 'சொன்ன மலையைப் பிடிங்கிடினுந்தொடர்
> வாதனையை விடல் அரிதாம்' (உபசா: 48.2).

### 4.7.1.4. இயமன் அணுகான் எனல்:

அசுத்த வாசனையைக் கெடுத்தால் இயமன் நெருங்க மாட்டான் என புசுண்டன் கதையில் விளக்கப்பட்டுள்ளது (புசுண்: 74).

### 4.7.1.5. முத்தி:

வாசனையை நீக்கினால் முத்தியடையலாம் என்பதை ஆசிரியர் பல நிலைகளில் குறிப்பிட்டுள்ளார்.

1. வாசனையை நீக்கினால் மூப்பு, மரணங்கள் பொருந்திய பிறவியில் பிரம்மபதம் உண்டாகும் (சிகித்: 96).
2. சஞ்சலம் செய்கின்ற வாசனையைப் பற்றற விடுதலே நிலையான முத்தியாகும் (வைரா: 26).
3. சுத்தவாசனை ஏற்பட்டால் முத்தி உண்டாகும (சிகித்: 94, முமுட்: 3).
4. அறிவானது முனபுள்ள விடயவாசனையோடுஞ் சுழுத்தி யிலடங்கி நின்று வெளிப்படில் பவமாதலால் சுழுத்தியில் அடங்கி இருக்கும். அசுத்த வாசனையை நீக்கித்துரியா தீதமாக விளங்கினால் முத்திகிடைக்கும் (புசுண்: 19).
5. சஞ்சலம் செய்கின்ற வாசனையைப் பற்றற விடுதலே நிலையான முத்தியாகும் (வைரா: 26).

4.7.1.6. இவ்வாறு வாசனை, அதன்வகை, அதனால் ஏற்படும் முத்தி ஆகியவற்றை ஆசிரியர் விளக்கியுள்ளமையைக் காணமுடிகிறது.

## 4.8. குண்டலினிசத்தி:

4.8.0. குண்டலிசத்தி என்றும் கூறுவர். குண்டலினி சத்தியைப் பற்றிய செய்திகள் ஞானவாசிட்டத்தில் அதிகம்

காணப்படவில்லை இதையோகிகள் கையாளுவர். குண்டலினி சத்தியின் இயல்பு, செயல், பயன் போன்ற அடிப்படையில் கிடைத்த செய்திகளை வகுத்து இந்தப்பகுதியில் கொடுக்கப் பட்டுள்ளது.

4.8.1. குண்டலினி என்பது குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவில் இருப்பதாகக் கருதும் மூலாதாரம் ஆகும்[40]. இது மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமான ஒரு சத்தியாகும். மேலும் அதற்குப் பல பொருள்களை யோகிகள் குறிப்பிடு கின்றனர். சுத்தமாயை என்றும், பிராணாயாம சத்திகளில் ஒன்று எனவும் குறிப்பிடுகின்றனர்[41].

### 4.8.1.1. குண்டலினி சத்தியின் இயல்பு:

குளிர்ச்சியின் வருத்தத்தினால் உறங்குகின்ற பாம்பைப்போல வளைந்து எப்போதும் அசைவற்ற ஆந்திர (குடல்) வேட்டணி கையானது பிராண வாயுவினால் நிலையாய் இருக்கும். வாழை யினது மிருதுவான மலரைப்போல அகத்திலும் மேன்மையான மிருதுவானதாகும். அந்த ஆந்திரவேட்டணி கையினிடத்தில் குண்டலினி சத்தியானது பரிசுத்தமாய்க் குற்றமற்ற மேலான தாய்ச் சத்திகள் அனைத்திற்கும் வெற்றியை கொடுக்கும். கோபம் மிகுந்த பெண்பாம்பு போலப் பெருமூச்சுவிடும். எப் போதும் முகம் மேலாய் இருக்கும். சலனத்துக்குக் 'காரணமாயிருக் கும். இதய(மன)ப் பெட்டியைச் சேர்ந்திருக்கின்ற நாடிகள் யாவும் இதில் பந்தப்படும். இதுவே குண்டலினிசத்தியின் இயல்பாகும் (சிசித்: 34,35).

### 4.8.1.2. குண்டலினியின் செயல்:

குண்டலினி சத்தியானது சிந்தனையினால் கலையாகும்; ஞானத்தால் ஞானமாகும்; சிவனத்தினால் சீவனாகும். மனத்தி. னால் மனமாகும்; சங்கற்பத்தினால் சங்கற்பமாகும்; அறிவினால் புத்தியாகும்; அகம்பாவத்தால் அகங்காரமாகும் என்பர் (சிசித்:36)

### 4.8.1.3. குண்டலினி சத்திக்கும் சிவனுக்கும் உள்ள ஒற்றுமை

புரியட்டகமென்னும் சீவனுக்குப் பிராணவாயுவென்கின்ற குண்டலினி சத்தியானது வாசனைக்கிடமாகிய மலர்போல இருக்கும் (சிசித்: 51).

### 4.8.1.4. குண்டலினி சத்தியே பிராண அபான உருவம்:

பிராணவாயும் குண்டலினி சத்தியும் ஒன்றே எனக் கீழ்வரும் பாடலால் அறியமுடிகிறது.

குண்டலினியெனுஞ் சிவசத்திமிக நல்லதாய்க் கூடி நிற்கு
மண்டு பிராணாபான வடிவமா தலிற் கீழ்மேல் வந்துபோகு
மிண்டறமேற் போகிலுமெல் லாமாய்ப்போ மீளினுமெல்லா
மாய் மீளுந்
தண்டலிலாப் புமானாகிச் சாமேவும் பிராணனுமச் சத்தி
தானே' (சிகித்: 37).

### 4.8.1.5. குண்டலினி சத்தியின் பயன்:

4.8.1.5.1. குண்டலினி சத்தியைப் பூரகப் பழக்கத்தினால் பூரணம் செய்தால்:

1. மகாமேருவுக்கு ஒப்பாகிய வலிமையுண்டாகும்.
2. உடல் பருக்கும்.
3. அறிவானது வளரும்.
4. நாடிகளின் தளர்ச்சி நீங்கும்.
5. ஆகாயத்தில் சஞ்சரிக்கும் நிலையேற்படும் (யோகிகளுக்கு இந்நிலை உண்டு) என்பர்.

4.8.1.5.2. ஞான நுட்பத்தினால் ஆகாயத்தில் அணிமா முதலிய பொருட்களைக் கொடுக்கின்ற சித்தர் கூட்டங்கள் கனவில் தோன்றுவது போல நிலையாகத் தோன்றும் (1-2, சிகித்: 52-55).

4.8.1.5.3. குண்டலினியின் அசைவே பவநோயும்; அஃதின்மையே அதன் நிவிர்த்தியும் ஆகும் எனக் கீழ்வரும் வரிகளால் அறியலாம்.

'தன்னிடத்தே யெப்படியும் போக்குவரத்தொழிந்திந்தச்
சத்திநிற்கின்
மன்னுயிர்க்கு நோய் வாரா' (சிகித்: 28.1,2)

4.8.1.6. இவ்வாறு குண்டலிசத்தியைப் பற்றிய செய்திகளை ஞானவாசிட்டத்தில் ஒரு கதையில் மட்டுமே (சிகித்துவசன் கதை 6.9) கூறப்பட்டிருப்பினும் விளக்கமாக அமைந்துள்ளன.

## 4.9. பற்று

4.9.0. ஞானவாசிட்டத்தில் பற்றை வந்திப் பற்று அவந்திப் பற்று என இரண்டாகப் பிரித்து விளக்கியுள்ளார் நூலின்

காணப்படும் செய்திகளைப் பகுத்து அவற்றின் தன்மையும் அதனால் ஏற்படும் வீடுபேற்றையும் ஆசிரியர் வழி இங்கு விளக்கப்பட்டுள்ளது.

4.9.1. பற்று: என்பதற்கு அன்பு, ஆசை, நட்பு, விருப்பு, சம்பந்தம், பற்றுக்கோடு, கட்டு போன்ற பல பொருட்கள் உள்ளன[42]. பற்று என்பதற்குச் சாதாரண மக்கள் அன்பு, இரக்கம், அளவுகடந்து காட்டும் உணர்ச்சி போன்ற பொருள் களை கையாளுகின்றனர். ஞானவாசிட்டத்தில் உடல்பற்றில் உள்ள உணர்ச்சிகளை குறிப்பிட்டுள்ளனர்.

4 9.1.1. பற்று சரீரத்தையும் சரீரியையும் பிரித்தறிகின்ற ஒன்றையும் சிந்திக்காமல் சரீரத்தை நம்புதலே பற்றாகும். ஆத்ம தரிசனமின்றித் தேகமாய் இருத்தலே பற்றாகும். ஆதுவே பவத்தை கொடுக்கும் என்பதாகும் (வீத: 8).

4.9.1.1.1. வந்திப்பற்று: பற்று இருவகைப்படும் என்பர். அதில் ஒன்று வந்திப்பற்று இதைப் பயனிலிப்பற்று என்பர். இது மூடர்களுக்குரியது. ஞானமில்லாமல் சரீரமுதலாகப் பொருந்து கின்ற பொருட்களினால் உண்டாகிய உலகத்தினிடத்தில் உண்டாக்கப்பட்ட பவங்களைத் திரும்பப் பெறுகின்றதே வந்திப் பற்றாகும்.

### 4.9.1.1.1.1. வந்திப்பற்றின் இழிவை உரைத்தல்:

வந்திப்பற்றினால் சிலர் உலகங்களில் பெத்தத் தன்மையோடு பாவ நரகத்தில் அழுந்துகின்றனர் (வீத: 9).

### 4.9.1.1.2. அவந்திப்பற்று:

இதை வணங்கப்பற்று என்றும் தொழுகைப் பற்று என்றும் கூறுவர். இது குறைவற்ற ஆத்மதத்துவத்தை அறிந்தவர்களுக்கு ஆபரணமாக அமையும். ஆத்மதத்துவ ஞானத்தினாலும் விவேகத்தினாலும் கிரமமாக உண்டானதாகியும் திரும்பவும் பாவமானது நெருங்காததாகியும் இருக்கின்ற ஒன்றாகும்.

### 4.9.1.1.2.1. அவந்திப்பற்றின் பெருமை:

ஈஸ்வராதிகளும் வணங்கப்பற்றினால் உலகங்களில் சீவன் முத்தி தன்மையோடு விளங்குகின்றனர் என கீழ்வரும் பாடல் விளக்குகிறது.

வளையாழி கைதரித்த செங்கன்மேனி வணங்கப்
பாற்றாம் பற்றின் வசத்தினாலே
இளையாமல் விவிதமாந் தொழிலினாலே யெவ்வுலக
நன்றாக விரங்கிக்காக்கு
முளையாத விஞ்ஞான கதிசேர் சித்தருலக பாலகராகி
யுரைத்தவாறே
விளையாடி வணங்கப்பாற் றென்னும் பற்றால் வரிந்தசக
மூற்றத்தின் மேவி நின்றார் (வித:8).

## 4.9.1.2. பற்றின்மை:

பற்றின்மை சாமானிய பற்றின்மை என்றும் சேட்டப்பற்றின்மை என்றும் இருவகைப்படும்.

## 4.9.1.2.1. சாமானிய பற்றின்மை:

ஒன்றும் நாமல்ல வென்றும் பற்றின்மையே சாமானியப்பற்றின்மை என்பதை,

'பொருள்கடனிற் செய் பவனல்லேன் புசிப்போனல்லேன்
றெளிவோனுங்
குருவுமல்லே னெனப்பற்றிற் குணமாஞ் சாமானிய
விரத்திப்
பருகுதுன்ப மின்ப மெலாம் பண்டை வினையால்
வருமன்றே
யருள்செய் கடவுள் வசந்தானா மமைப் போனாத
லெனக் கெங்கே' (நிரு:20)

என விளக்கியுள்ளார்.

## 4.9.1,2.1.1. சாமானியத்தில் சாமானியப் பற்றின்மை:

கருமத்தினாலும் தெய்வத்தாலும் வருகின்ற சுகதுக்கங்கள் விருப்பு வெறுப்பென்ற இவற்றில் பற்றற்றதாய் வேதாந்த வாக்கியார்த்த நிச்சயத்தில் அழுந்துவதே சாமானியத்தில் சாமானியப் பற்றின்மையாகும் (நிரு: 21,22).

## 4.9.1.2.2. சேட்டப்பற்றின்மை:

முன் ஆத்ம நிச்சயத்தில் அழுந்தின படியே அதை அனுபவமாய்த்தரிசித்தல் சேட்டப்பற்றின்மையாகும். சுயஞ்சைதன்யத்தை அகத்தில் தெளிந்த தெளிவினாலும், தக்க மனித வருத்தத்தால் நீங்காத ஞான நூற்களின் பழக்கத்தினாலும் அங்கை நெல்லி போல, பிறவிப்பெருங்கடலின் கரையானது உறுதி

யாகத் தெளியக் காண்கின்றன. தான் கருத்தா அன்று, இறைவனை கருத்தா அல்லாமல் தன் பழவினைதான் கருத்தா என்ற எண்ண மெல்லாம் பற்றாமல் வெகுதூரத்தில் தள்ளிச்சேர்ந்த சாந்தமாகிய மோன நிலை சேட்டப்பற்றின்மையாகும். (திரு: 23,24) என்பர்.

### 4.9.1.2.2.1. சேட்டத்திற் சேட்டப்பற்றின்மை:

உபசாந்த பார்வையுள்ளவனாய் முன்தரிசனமான ஆத்மாவில் மனங்கரைந்திருப்பதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மையாகும். உள்ளிலும் புறத்திலும், மேலிலும் கீழிலும், திசைகளிலும், விண்ணிலும், பொருட்களிலும், அல்லாதவற்றிலும், சடசித்துக்களிலும் பிரித்து நினையாமல் உபசாந்தத்தில் கூடிய எண்ணம் இறந்து ஒளியற்று மிகுந்த பிறப்பற்று அடிமுடிவில் மேலாகியதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மையாகும் (திரு: 25).

### 4.9.1.3. பற்றாது இருக்கின்றவன் இலக்கணம்:

பலனை விரும்பாமல், செய்யுங் கருமத்தால் சுகதுக்கத்தை அடையாதவன் எதையும் பற்றாதவன் ஆவான் என்பதற்கு கீழ்வரும் பாடல் சான்றாகும்.

'பத்திபாய்ந்துப் பற்றாத பளிங்குபோலக் கருமபலம்
பத்திபாய்ந்துப் பற்றாதோன் பலநீண் மனிதருடனுறைந்தும்
பத்தியாலற் சித்தாலும் பகையாலுடலை யரிந்தாலும்
பத்திபாச்சலுற்றது போற் பயிலு மகிழ்வு துயரறியான்'
(இட்சு: 61).

### 4.9.1.4. பற்றுக்குக் காரணங்கள்:

நன்மை செய்யும் அருளும், சந்தோசமும், நட்பும், உதாசீனமும் ஆகிய நான்கு குணங்களின் தொழிலை மனத்தில் பற்றாது செய்யவேண்டும். அவை பற்றுக்குக்காரணங்களாகும் (கசன் : 10, வித : 2). அறிவு, ஆசை, மனம், சங்கற்பம் போன்றவை பற்றுக்காரணங்களாகக் கொள்வர்.

### 4.9.1.5. பற்று அறுக்கும் கருவிகள்:

தத்துவஞானம், மனோநாசம், வாசனை, அறிவு என்ற மூன்றையும் சமமாகக் கொண்டால் பற்றுக்கள் அனைத்தையும் கெடுக்கலாம் (உபசா: 53). கிரியாக்கிரியைகளில் பயனைக்

அறுதமல் தற்பயனராய்ச் செய்வதே பற்றறுத்தலாகும்(புண்: 29). வேதங்களினாலும், குருக்களுடைய அறிவுரைகளினாலும் பற்றை நீக்கலாம்.

### 4.9.1.6. பற்று அற்றபின் ஏற்படும் நிலை:

சுகங்கள் அனைத்தும் பொருந்திற் பொருந்தக்கடவது; பொருந்தாவிடின் போகக் கடவது என்று மனத்தில் பற்றின்மை உண்டானால் மோட்சத்துக்கு அதுவே வழியாகும் (வீத: 4). சர்வம் பிரம்ம மயமாய் விளங்குதலின் விருப்பு வெறுப்பின்றிச் சுபமான வணங்கப் பாற்றானப்பற்றே வீட்டைக்கொடுக்கும் பற்றாகும் (வித:5). பந்தத்துக்கு ஆதிகாரணமான சங்கற்பத்தைப் பற்றில்லாமல் கெடுத்தால் அதுவே மோட்சமாகும் (மானு:8). மனத்தில் பற்றுஇல்லாமல் இருந்தால் அதுவே மோட்சத்திற்கு வழியாகும். பொருட்களிடத்தில் பற்றில்லாமல் இருந்தால் மனத்தில் சாந்தி உண்டாகும். அவ்வாறு இருந்தால் முத்தி அடையலாம் (வீம:28).

4.9.2. பந்தத்திலிருந்து பற்றைப் பிரித்து நூலாசிரியர் கூறுவதோடு பற்றின் வகைகளையும் அதனால் ஏற்படும் பயன்களையும் தெளிவாக விளக்கியுள்ளார் எனலாம்.

### 4.10. பந்தம்:

4.10.0. சுற்றம், உறவு, பாசம், முறை, கட்டு, முடிச்சு, தளை, பற்றுபோன்ற பல பொருள்களைப் பந்தத்துக்குக் கொள்வர்[43]. ஞானவாசிட்டத்தில் பந்தம்பற்றி அதிகமாக ஆசிரியர் விளக்கவில்லை. பந்தம் ஏற்படும் நிலையையும், அதை மாற்றும் முறையும் அதனால் கிடைக்கும் பிரம்ம நிலையையும் சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளார்.

### 4.10.1. ஞானவாசிட்டத்தில் பந்தம்:

சிந்தனையின் விரிவே பந்தமாகும் (சித்:2). சரீரத்தையும், சரீரியையும் பிரித்தறிவது பற்றாகும். அந்தப்பற்றால் பந்தம் உண்டாகும் (வீத:3). விரும்பும்பொருள் ஒன்றினையாவது பொறிகள் அடையுமானால் அந்த ஆசையே பந்தமாகும் (மானு: 9) என்பர்.

### 4.10.1.1. பந்தத்துக்குக் காரணம்:

பந்தம் அடையக் காரணமாயிருப்பது மனமே. சங்கற்பமும் பந்தமாகும். உடலைதான் என்கின்ற புத்தியே பந்தமாகும்.

விடய இச்சைகளில் அடிமைப்பட்டு வாழ்பவர்கள் பந்தமடைந்தவர்களாவர் (வித: 24).

### 4.10.1.2. பந்த நிவிர்த்தியும் அதன் பலனும்:

பந்தத்துக்குக் காரணமான விடயத்தை நீக்கினால் மோட்சம் அடையலாம். ஒரு போதும் துன்பமில்லாத நிருவாணத்தை இச்சிப்பவர்களாகிய முமுட்சுக்களுக்குரிய பந்தமானது அற்பமுமில்லாத திறமாகி சின்மாத்திரவடிவமுள்ள புத்தியானது பவத்தைக் கெடுக்கும். அதனால் முத்தியடையலாம். பரம்பொருள் பந்தத்துக்குக் கட்டுப்படாது. பிரம்மத்துக்குப்பந்தம் கிடையாது (சித்: 1). பந்தத்திற்கு ஆதி காரணமான சங்கற்பத்தைக் கெடுத்தால் அதுவே மோட்சமாகும் (மானு: 8, இட்சு: 20). மனைவியிடத்தும் பொருட்களிடத்தும் பாசமிருந்தால் அது பந்தமாகும். இதைச் செய்பவர்கள் அஞ்ஞானிகள். இப்பப் பந்தம் நீங்கினால் ஞானியாகலாம் (தாசு: 44).

4.10.2. பற்றினால் தான் பந்தம் உண்டாகும் எனப் பற்றையும் பந்தத்தையும் ஆசிரியர் வேறுபடுத்திக் காட்டியுள்ளார் அவ்வாறு பந்தத்தினால் ஏற்படுபவற்றையும், பந்தம் நீங்கினால் முத்தி என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

### 4.11. ஆசை:

4.11.0. தன்னிடத்து இல்லாத ஒன்றைப்பெற்றாகவேண்டும் என்கின்ற எண்ணம் ஆசை எனப்படும்[44]. ஆசையை அன்பு, விருப்பம், இசை, வேட்கை, காதல், காமம், பற்று முதலான பலப்பொருட்களில் கூறுவர்[45]. ஞானவாசிட்டத்தில் ஆசையைக் காமம், குரோதம், பொருள் போன்றவற்றின்மேல் கொண்ட விருப்பமே என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு குறிப்பிட்ட செய்திகளை வகை செய்து விளக்கப்பட்டுள்ளன.

### 4.11.1. ஞானவாசிட்டத்தில் ஆசை:

மதுவுண்ட வண்டானது பாதாளம், ஆகாயம், எட்டுத்திக்கு ஆகியவற்றைக் கண நேரத்தில் சுற்றிவருவதுபோன்றது ஆசை என்பர். கிழத்தாசியானவள் தனக்கு ஒருபொருளும் கிடைக்காவிட்டாலும் பொருளுக்காக வேண்டி எவர் பின்னாலும் செல்வாள். அப்படிப்பட்ட குணத்தையுடையது ஆசை. கிடைக்கக்

கூடிய பொருள் எவ்வளவு கிடைத்தாலும், பின்னும் வேண்டும் என்று நாடும் நிலையற்ற ஆசையானது குரங்கைப்போல ஓரிடத்தில் தங்காது அலையும் என்பர் (வைரா: 81).

### 4.11.1.1. ஆசை ஏற்படக் காரணங்கள்:

ஆசைக்குக் காரணமாகக் காமக்குரோதங்களைக் கூறுவர்.

'கரைதலறு மோகமெனுங் காரிருளிற் றொழிற் கடங்காக் காதலல்லால்
உரைதரு காமாதிகளா முலூகநிரை யுணர்வெனும் விண்
ணூலாவுமன்றே' (வைரா: 78.3,4)

என ஆசிரியர் விளக்கியுள்ளார்.

### 4.11.1.2. ஆசையின் வலிமை:

ஆசைக்கு மிஞ்சின வலிமை இல்லை. ஆசையானது மகாமேருவுக்கு ஒப்பான உயர்வு உள்ளவர்களையும், ஞானவான்களையும், திடமுள்ளவர்களையும், வீரர்களையும், மற்றயாவரையும் தொடியில் துரும்பாக்கும் இது யானையைப் போல வலிமையுடையது. ஆசையென்னும் யானையானது வினைகள் என்னும் தந்தங்களுடன், வாசனை என்னும் மதங்களுடன், உடல் என்கின்ற வனத்திலிருந்து இந்திரியம் என்னும் கன்றுகளோடு பவப்பார்வை என்னும் யுத்தக்களத்தில் வசிக்கும் என யானையோடு ஆசையை ஒப்பிட்டுக் கூறியுள்ளார். (திரு:49,50).

### 4.11.1.3. ஆசையினால் ஏற்படும் இன்னல்கள்:

1. ஆசையினால் மேன்மையுள்ளவர்களும் தாழ்வை அடைவார்கள்.

2. ஆசையினால் குற்றமற்றவர்களாயினும் சர்வஞானிகள் ஆயினும் படித்தவர்களாயினும், வலிமை பொருந்தியவர்களாயினும் பந்தப்படுவர் (தாம:82).

3. ஆசைக்குக் கட்டுப்பட்டால் உயிர் வாழ முடியாது (புண்:12).

4. ஆசையே ஆத்ம துரோகம் செய்யும் (திரு:51).

5. ஆசையானது இருக்கும் மட்டும் பிறப்பு என்னும் விடவிருட்சியானது அழியாது.

6. ஆசை இருந்தால் ஆத்ம ஞானத்தை அடைய முடியாது (வைரா:79).

4.11.1.4. ஆசை அற்பமும் கூடாது எனல்:

'அற்பம்உனக் கொன்றினிதாகில் அதனால் பிறப்பி
லகப்பட்டாய்
பொற்பஉனக் கொன்றினும் இனிமை பூணாதென்னிற்
பிறப்பகன்றாய்
நிற்பநடப்பப் பொருட்டிரளின் நினக்குத்திரண முதலாகத்
தற்பமுறு பொன்முடிவாகச் சற்றும் இனிமையுற
வேண்டாம்' (மானு:10)

என்னும் பாடலில் ஆசை எள்ளவும் கூடாது என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

4.11.1.5. ஆசையைக் கெடுக்கும் கருவிகள்:

1. ஆசை என்கின்ற பந்தத்தைச் சங்கற்பத்தால் கெடுக்க வேண்டும்(புண்:12).

2. ஆசையைக் கெடுக்க வேண்டுமானால் மனத்தைக் கெடுக்க வேண்டும்.

3. மகாவாக்கியார்த்தங்களைக் குருவிடம் கேட்டால் ஞானம் உதிக்கும் அதனால் மன சஞ்சலம் நீங்கும். பின் ஆசை நீங்கும் (புசுண்:7).

4. தத்துவஞான நூற்களை ஆராய்ந்தவர்கள் ஆசையைக் கெடுப்பர் (புசுண்:6).

5. ஞானத்தால் இச்சை மயக்கத்தை மாற்றலாம் (திரு:54).

6. வாசனையாலும் ஆசையை நீக்கலாம் (திரு:55).

7. ............'எழுஞ் சிந்தை யாசை
துறப்பில் பொன் விலங்காமித்தைத் துவக்கறத்து
டைத்தல் வேண்டும்' (புண்: 22 3.4)

என ஆசையை ஆரம்ப காலத்திலே துடைத்து விடவேண்டும் என வலியுறுத்தியுள்ளார்.

3 .6. ஆசையை நீக்கினவர்கள்:

1. ஆசையை நீக்கினவர்களே தத்துவத்தை அறிந்தவர்கள் எனக் கூறுவர்.

'தெள்ளிய அறிவறிந்து ஆசைதீர்ந்து புத்திதெளிந்து இதயங்
கொண்டிடும் பந்தமெலாம் அறுத்தோரன்றோ உண்மைக் குறித்தறிந்தோர்'
(உபுசா:7.34).

2. ஞானிகளும் ஆசையை நீக்கினவர்களே.

'பூட்டுமாசை வந்தணுகாப் புரணபோதம் உடையோர்க்கே (உபாச: 4 4) என உண்மை அறிந்தவர்களும் ஞானிகளும் ஆசையை நீக்கினவர்கள் என அறியமுடிகிறது.

**4.11.7 ஆசையை நீக்கினால் அடையும் பயன்:**

1. ஆசையை ஒழித்தால் பிறப்பைக் கொடுக்கின்ற அஞ்ஞானமே உண்டாவதில்லை (சிகித்:121).

2. ஆசையைத் தியாகம் செய்தால் சர்வமும் பிரம்மவடிவமாகும் (மாவலி:4)

3. ஆசை என்னும் விறகு நசித்தால் எண்ணம் என்னும் அக்கினிகெடும்.

4. ஆசையை நீக்கிய தேவர்களுக்கும் உலகிலுள்ள எல்லாத் துயரும் நீங்கிவிடும் (வைரா:82).

5. ஆசையைக் கெடுத்தால் இயமன் அணுகான் (புசுண்:75).

6. ஆசை நீங்கினால் ஞானம் உண்டாகும் என கீழ்வரும் பாடல்வரியால் அறியலாம்.

'மனத்தின் முளைக்கும் ஆசையெலாம் வடித்தகுடாரத் தான்மரம்போற்
கனத்த வேரோடறுமளவுங் கண்ணாஞானம் பெறும்'
(பாச: 16:1,2).

7. 'இச்சைபோக்கினால் அனைத்துப்போமே' (வில்வ:2.4).

8. ஞானபூமியை அடைவதற்குத் தடையாக இருப்பது ஆசை. அதைக்கெடுத்தால் இந்தப் பூமியின் முடிவைத் தரிசிக்கலாம் (நிரு:47).

9. ஆசையை அடைந்தால் பந்தமாகும். அதை விடுதலே மோட்சமாகும் (மாஜு:9).

10. அறிவில்லாதவர்களாக இருந்தாலும் இந்த மயக்கம் என்னும் ஆசையை விட்டவர்கள் பிரம்ம நிலையை அடைவார்கள் (மாவலி:5).

